# சாமக்கோள் ஆருடம்

கதிர்

பாம்பு

சேய்

மதி

பொன்

மால்

மந்

புகர்

**தெய்வக்ஞ ரத்னா S. வைத்தியநாதன்**



ஸ்ரீ பாதுகா பப்ளிகேஷன்ஸ்
106, பசுவராஜ் பில்டிங்
தில்லைநகர், திருச்சி - 620 018
Ph: 769622

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

சாமக்கோள் ஆருடம்

## முன்னுரை

ஜோதிடசாஸ்திரம் தெய்வீகமானது. வாழ்க்கைக்கு வழி காட்ட வல்லது. இதன் மூலம் நம் எதிர் காலத்தைத் துல்லியமாக அறிந்து கொண்டு வாழமுடியும். வருமுன் காப்போனே மனிதன், இந்த வகையிலும் அவன் பயன் பெறுகிறான் பல சமயங்களில் இந்த சாஸ்திரத்தின் உதவியால். நாம் வாழ்வில் பல பிரச்சனைகளை சந்திக்கிறோம். ஒவ்வொருவருக்கும் ஏதாவது ஒரு பிரச்சனை இருக்கத்தான் செய்கிறது. கோடீஸ்வரனானாலும் சரி, இல்லை அன்றாடம் உழைத்து வயிறு வளர்ப்பவன் ஆனாலும் சரி.

இந்தப்பிரச்சனைகள் எதுவாயிருந்தாலும் அதை அலசி அதைத்தீர்ப்பதே ஆருடம் ஆகும். இந்த ஆருட சாஸ்திரம் ஜோதிடத்தின் தனிப்பட்ட அங்கம். அதிலும் சாமக்கோள் ஆருடம் நிகரற்றது. எந்தப்பிரச்சனைக்கும் பத்தே நிமிஷத்தில் வழிகாட்ட வல்லது என்றால் மிகையாகது. இதுவே தனித்தன்மையும் கூட.

உங்கள் கையில் தவழும் இந்நூல் பலவிதபிரச்சனைகளை அலசி, பதில் சொன்னவிவரங்கள் அடங்கியுள்ளன. இதில் என்ன புதுமை ! அருள்வாக்கிலும் சில நிமிஷங்களில் பதில் கூறுகிறார்களே! என்று சிலர் நினைக்கலாம்.

அருள்வாக்கு பலர் முன்னிலையில் கூறப்படுகிறது. இத்ல் சொந்தமான பிரச்சனைகளை வெளிப்படையாக கேட்க இயலாது. சிலசமயம் அருள் வாக்கில் பிரச்சனைகள் பலிக்காமல் போவதுண்டு. அப்போது தெய்வசங்கல்யம் சரியில்லை என்று சமாதனம் அடைவதைத்தவிர வேறு வழியில்லை. ஆனால் மனதில் ஒரு உறுத்தல் அதிருப்தி இருக்கவே செய்யும். விடையும் கிடைக்காது.

ஆனால் இந்த சாமக் கோளில் அப்படி அல்ல; வெட்டு ஒன்று, துண்டு இரண்டு என்ற ரீதியில் பதில் துல்லியமாகக் கிடைக்கும். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்கள் அடிக்கலாம் என்றால் இதில் ஒரே சமயத்தில் 5 மாங்காய்கள் அடிக்கலாம் போதுமா?

அருள்வாக்கை குறை சொல்வதாக நினைக்கவேண்டாம். 3000 பிரச்சனைளுக்குமேல், வெளிநாடு (அமெரிக்கா, ஐரோப்பா, மலேசியா), உள்நாட்டில் பல இடங்களில் இதன் மகிமையை பலன் கேட்டவர்கள்

புரிந்து கொண்டு என்னை வாழ்த்தியுள்ளார்கள். இந்த ஆருடம் கேட்டு, திருப்திப்படாமல் போனவர்களே கிடையாது என்று அடித்துக் கூறமுடியும். ஈமெயில், டெலிபோன், ஃபாக்ஸ் மூலம் பதில் பெற்றவர் ஏராளம். போதுமா?

சுருக்கமாக ஒன்று கூறவிரும்புகிறேன் 1மணிக்கு 12 கேள்விகள் (5 நிமிக்கு ஒரு ஆருடம்) மூலம் 24 மணி நேரத்தில் 288 கேள்விகளுக்கு பதில் சொல்லுவது சாத்தியம்.

எந்த ஆருடமுறையிலும் இல்லாத புதுமை! காலத்திற்கேற்ப எத்தனையோ பிரச்சனைகளை அலசலாம். வெறும் புகழ்ச்சியில்லை உண்மை.

என் குருநாதர்கள் அல்லியந்தல் அருணாசலம், திருச்சி கல்யாணராமைய்யர், இவர்களின் பொற்பாதங்களில் வணங்கி இந்நூலை சமர்ப்பிக்கிறேன் உங்கள் முன்பு.

இப்படிக்கு ஆக்கியோன்

தெய்வக்ஞரத்னா S. வைத்தியநாதன்.

ஆசிரியர் ஜோதிடக்கடல்



# சாமக்கோள் ஆருடம்
## பாடம் 1
## ஆருட நிர்ணயம்

சாமக்கோள் ஆருடம் என்பது காரணப்பெயர். சாமம் என்பது நாளின் ஒரு பகுதி. அதாவது 3 ¾ நாழிகை அல்லது 1 ½ மணி நேரம்.

பகல் இரவு கொண்டது ஒரு நாள் அல்லது 24 மணி நேரம். நாழிகை 60 கொண்டது.

இந்த ஆருடத்தில் பகலில் 8 சாமம், இரவில் 8 சாமம் மொத்தம் 16 சாமங்கள். 16 x 3 ¾) = 60 நாழிகை [illegible] x 3 ¾) = 30 நாழிகை [illegible] x 1 ½ = 12 [illegible] 16 [illegible] 16 x [illegible] 24 மணி நே[illegible]

இந்த சாமம் காலை 6 மணியிலிருந்து மாலை 6 மணி வரை எட்டு கொண்டது - பகல் பொழுதில்.

அதே போல் மாலை 6 மணி முதல் அடுத்த நாள் காலை 6 மணி வரை எட்டு கொண்டது இரவுப் பொழுதில்.

கோள் என்பது கிரகங்களைக் குறிக்கும். இதில் 8 கிரகங்கள் . ஒவ்வொரு சாமத்திலும் இந்த 8 கிரகங்கள் ஒரு குறிப்பிட்ட வரிசைப்படியே சஞ்சரிக்கும். அதில் எந்தவித மாறுதலும் கிடையாது. அந்த 8 கிரகங்கள் - கதிர் (சூரி) சேய்(செவ்) பொன் (குரு) மால் (புதன்) புகர் (சுக்ரன்) மந்தன் (சனி) மதி (சந்திரன்) பாம்பு (ராகு) என்பவையே.

கதிர், சேய், பொன், மால், புகர், மந்தன், மதி, பாம்பு என்று சூத்திரம் போல் நினைவு வைத்துக்கொள்வது அவசியம். இந்த வரிசைக்கிரமம் ஒரு பொழுதும் மாறாது.

ஆருடம் என்பது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் கேட்கப்படும் கேள்விக்கு கிரக ரீதியாக பதில் அளிக்கும் முறை. அதாவது பிரச்சனைக்கு பதில் அளித்தல், வழிகாட்டல் என்பதாகும், இதனால் பிரச்னாருடம் என்ற தனிப்பகுதியே ஜோதிடத்தில் தோன்றியது, நிற்க. ஆருடம் என்றால் ஏறி நிற்றல், அமர்தல் என்ற பொருளும் உண்டு. சில பெருமானை ரிஷப ஆருடன் என்று அழைக்கிறோம். அதாவது ரிஷபத்தில் அமர்ந்திருக்கிறான் என்ற பொருள். புராணங்களில் பக்தர்களுக்கு, சிவனடியார்களுக்கு ரிஷபாரூடனாக சிவபெருமான் காட்சி அளித்தார் என்றெல்லாம் படித்திருக்கிறோம் கேட்டிருக்கிறோம் அல்லவா?

அதுபோல இந்த ஆருடத்தில், கேள்வி கேட்கிறவர் எந்த ராசியில் வந்து நின்றோ, அமர்ந்தோ கேள்விகளைக்கேட்கிறார் என்பது மிக முக்கியம். சாமத்தையும், கோள்களையும், ஆருடத்தையும் (வந்தவர் ஏறி நின்ற ராசியையும்) இணைத்துப்பலன் சொல்வது சாமக்கோள் ஆருட சாஸ்திரம் ஆயிற்று, காரணத்தால். அதனால்தான் ஆரம்பத்தில் காரணப் பெயர் என்று குறிப்பிடப்பட்டது.

வடமொழியில் ஜாம கிரஉற ஆருடம் என்பார்கள். தமிழில் அது சாமக்கோள் ஆருடம் ஆகிவிட்டது அவ்வளவே.

(இதன் மூலம் சினேந்திர மாலை என்ற தமிழ் நூல்)

ஆரம்பத்திலேயே சாமங்கள் பகலுக்கு 8 இரவிற்கு 8 என்று பார்த்தோம்.

8 கிரகங்களும் ஒரு வரிசைக்கிரமப்படிதான் எக்காலத்தும் நகர்கின்றன என்பதையும் புரிந்து கொண்டோம். ஆனால் ஆருடம் அப்படியல்ல. கேள்வி கேட்க வந்து நிற்பவர் ஏறி நிற்கும் அல்லது அமரும் ராசியைப் பொறுத்து.

எனவே ஆருடம் மாறக்கூடியது என்பது தெளிவாகிறது. இந்த ஆருடத்தை நிர்ணயிப்பது மிகவும் முக்கியம். இந்த ஆருடம் சரியாகத் தீர்மானிக்கப்பட்டு, அதன் அடிப்படையிலேயே பலன்கள் சொல்லப்படுகின்றன.

எனவே ஆருடம் மிகத்துல்லியமாக கணிக்கப்பட வேண்டும் என்பது தெளிவாகிறது, இதனால்,

இந்த ஆருடத்தின் உதவியால்தான் கவிப்பு என்ற நிலையும் நிர்ணயிக்கப்படுகிறது. அதைப்பிறகு பார்போம்.

இந்த ஆருடத்தை எப்படி நிர்ணயிப்பது? சற்று விவரமாகப் பார்ப்போம். பெரும்பாலான ஜோதிடர்கள் ஏன் எல்லோருமே ஒரு அறையில் அமர்ந்துதான் ஜோதிடம் பார்க்கின்றனர். தங்கள் தொழிலை நடத்துக்கின்றனர், வசதி உள்ளவர்கள் அறையில் மேஜை, நாற்காலி வந்தவர்கள் அமர சேர், சோபா, இவற்றையும் பயன்படுத்துகின்றனர். தரையில் அமர்ந்து, பாயின் மீது அல்லது விரிப்பின் மீதோ அமர்ந்து ஜோதிடம் சொல்பவர்களும் உண்டு.




இந்த இருவகையினருமே ஆருடத்தை துல்லியமாக நிர்ணயம் செய்ய ஒரு சுலபமான வழி உண்டு. அதாவது ஜோதிடர்கள் அமர்ந்திருக்கும் நேர் எதிர்த்திசையில் ஒரு ராசி சக்கரத்தை அமைத்துக் கொள்ள வேண்டும். இது கற்பனையிலும் இருக்கலாம்; ஒரு கோல வடிவிலும் இருக்கலாம். அதன் விவரத்தைப் பார்ப்போம்.

| மீ | மே | ரி | மி |
|---|---|---|---|
| கு | | | க |
| ம | | | சி |
| த | வி | து | க |

*12 ராசிகளின் முதல் எழுத்துக்களே குறிப்பிடப்பட்டு இருக்கின்றன.* எனவே உன்னிப்பாக வந்து கேட்பவர்கள் எந்த ராசியில் அமர்ந்து கேட்கிறார்களோ அதுவே ஆருடம். இதில் சிரமம் ஏதுமில்லை. அனுபவத்தின் பேரில் பழகப் பழகத் துல்லியமாக கண்டுபிடித்துவிடலாம். சரியாக வரும். இடவசதியை அனுசரித்து ஒரு ராசிக்கட்டம் சிறிதாகவோ, பெரிதாகவோ, போட்டுக் கொள்ளலாம். அரைத்தமாவில் கோலம் போல போட்டுக்கொண்டால் பல மாதங்களுக்கு அழியாமல் இருக்கும்.

மேஜை நாற்காலிபோட்டு அறையில் அமர்ந்து ஜோதிடம் சொல்லும் ஜோதிடர்கள் கீழ்க்கண்ட வழியை பின்பற்றலாம். அது நாற்காலிகளை ஒரு வட்ட வடிவாக போட்டு ஆருடத்தை சுலபமாக நிர்ணயிக்கலாம். என் அனுபவத்தில் வருபவர்கள் நாற்காலியை நகர்த்திவிட்டுதான் அமர்வார்கள். தன் இஷ்டத்திற்கு ஏற்ப. அதைக் கவனித்தால் போதும், ஆருட நிர்ணயம் செய்துவிடலாம். சில சமயம் ஜோதிடர் மேஜைக்கு

அருகேயும் வந்து அமர்ந்து கேட்பார்கள். அப்போது எப்படி ஆருட நிர்ணயம் செய்வது? மேஜையின் நடு மத்தியில் அமர்ந்தால் விருச்சிகம், ஜோதிடருக்கு வலது பக்கமாக அமர்ந்தால் துலாம். மேஜையின் வலது மூலையில், மூலைக்கு அருகில் அமர்ந்தால் கன்னி.

இதே போல் இடப்பக்கமாக அமர்ந்தால், தனுசு. மேஜையின் இடதுபக்க மூலையில், மூலைக்கு அருகில் அமர்ந்தால் மகரம், இப்படிப் பார்த்துக் கொள்ளலாம்.

இதர ராசிகளை (ஆருடத்தை) நிர்ணயிப்பது கடினமல்ல. இந்த முறையில், பழகப்பழக தேர்ச்சி ஏற்படும். மேலும் அனுபவ ரீதியாக சில விஷயங்களையும் உங்களுக்கு தெரியப்படுத்துகிறேன். ஜோதிடம் கேட்க சில சமயம் 2 அல்லது 3 பேர் வருவார்கள். அவர்கள் வெவ்வேறு [illegible] கேள்வி [illegible] ராசியை ஆருட[illegible] [illegible] சொல்லிக் கொண்டிருக்கும்போதோ அல்லது சொல்லி முடித்த பிறகோ, மற்றொருவர் அவர் சார்பாகக் கேள்வி கேட்டால் அதுவே (அந்த ராசியே) ஆருட[illegible] [illegible] முன்கேட்டவரே கேள்வி கேட்கலாம். அப்போது ஆருடம் மாறாது.

ஒருவரே ஒரே இடத்தில் (ராசியில்) அமர்ந்து எத்தனை கேள்வி கேட்டாலும் ஆருடம் மாறாது.

சில சமயம் கணவன், மனைவி இருவரும் வருவார்கள், ஆருடம் கேட்க. பரீட்சை முடிவுகள் வெளியாகிவிட்டன. பையன் தேறவில்லை, ஓடிப்போய் விட்டான் என்று வைத்துக்கொள்வோம். கணவன் (அப்பா) பையனைக் காணமுங்க 2 நாளா. எப்போ திரும்பி வருவான் என்று கேட்பார். மனைவியோ (அம்மா) பையன் உயிரோடு இருக்கான பார்த்துச் சொல்லுங்கள் ஐயா, அவன் உயிருக்கு ஆபத்தில்லையே என்று திரும்பி வருவான் என்பது முதல் பிரச்சனை. பையன் உயிருக்கு ஆபத்து உண்டா இல்லையா என்பது 2வது முக்கிய பிரச்சனை யை அலசிவிட்டுதான், முதல் பிரச்சனைக்கு பதில் காணவேண்டும். பின்னால் அது பற்றி விளக்குவோம்.

சில சமயம் மிகப்பெரிய சரீரம் படைத்தவர்கள் 2 ராசிகளை அடைத்துக்கொண்டு அமருவார்கள். அப்போது ஆருட நிர்ணம் செய்வது எப்படி? நாற்காலியில் உட்கார்ந்தால் பிரச்சனை இல்லை. தரையில் அமர்ந்து கொண்டால் சிக்கல்தானே ?

என் அறைக்கு கணவர் மனைவி 2 பேர் ஆருடம் கேட்கவந்தனர் மனைவியோ பெரிய சரீதம் படைத்தவர் கணவர் சராசரி உடல் படைத்தவர் நாற்காலியில் அமர்ந்து விட்டார். மனைவியோ பெரிய சரீரம் படைத்தவர். நாற்காலியில் உட்கார முடியாது ஐயா, என்ன, (சிரித்துக்கொண்டே) நாற்காலி தாங்காது, நான் கீழேயே அமர்ந்து கொள்கிறேன் என்று அமர்ந்துவிட்டார்கள். ஆருட ரீதியில் 2 ராசிகளை அடைத்துக்கொண்டிருந்தார்கள். இந்த சூழ்நிலையில் ஆருடத்தை நிர்ணயிக்க திணறினேன். நைஸாக, அம்மா, கொஞ்சம் தள்ளி அமர்ந்தீர்களானால் நல்ல காற்று வரும் உங்களுக்கு. நானும் உரக்கப் பேச தேவையிராது என்று வேண்டுகோள் விடுத்தேன். சரியென்று ஆமோதித்து அந்த அம்மாள் நகர்ந்து சற்றே திரும்பி உட்கார்ந்து கொண்டார்கள். உடனே ஆருட நிர்ணயம் செய்து விட்டேன். எதற்காக இதை எழுதுகிறேன் என்றால், ஜோதிடருக்கு சமயோசிதபுத்தியும் புத்திசாலித்தனமும் இக்கட்டான வேளைகளில் கைகொடுக்கும் என்பதற்காவே.

சாமக்கோள் ஆருடத்தில் மிக முக்கிய பங்கு வகிக்கும் ஆருடத்தை நிர்ணயிப்பது எப்படி என்று பார்த்தோம். அடுத்த பாடத்தில் ஒரு சாமத்தில் எப்படி கிரகங்கள் இடம் பெறுகின்றன என்று பார்ப்போம்.

*****

# சாமக்கோள் ஆருடம்
## பாடம் 2
## ஒவ்வொரு நாளிலும் சாமங்களில் கிரக அடைவு

முதல் பாடத்தில் ஆருட நிர்ணயம் பற்றி பார்த்தோம். இந்தப்பாடத்தில் ஒரு சாமத்தில் எப்படி கிரகங்கள் ராசிக்கட்டத்தில் அமருகின்றன என்று பார்ப்போம்.

சாமங்கள் 8 - $1\frac{1}{2}$ மணி வீதம் பகல், இரவிற்கும், கிரகங்கள் 8. கதிர், சேய், பொன், மால், புகர், மந்தன், மதி, பாம்பு என்று. ராசிக்கட்டத்தில் 12. ராசிக்கட்டத்தில் அமருகின்றன என்று பார்ப்போம், மீண்டும் ஒருமுறை கிரகங்களைப்பாருங்கள் எப்படி இந்த 8 கிரகங்கள் வரிசைக் கிரமாக எல்லாம் வாரத்தோடு (பாம்பு தவிர) மற்ற கிரகங்கள் எல்லாம் வாரத்தோடு தொடர்பு கொண்டவை எப்படி?

கதிர் - சூரியன் - ஞாயிற்றுக்கிழமைக்கு அதிபதி

சேய் - செவ்வாய் - செவ்வாய்க்கிழமைக்கு அதிபதி

பொன் - குரு - வியாழக்கிழமைக்கு அதிபதி

மால் - புதன் - புதன்கிழமைக்கு அதிபதி

புகர் - சுக்ரன் - வெள்ளிக்கிழமைக்கு அதிபதி

மந்தனி - சனி - சனிக்கிழமைக்கு அதிபதி

மதி - சந்திரன் - திங்கள் கிழமைக்கு அதிபதி

ஞாயிற்றுக்கிழமை எடுத்துக்கொள்வோம். முதல் சாமம் காலை 6 முதல் 7.30 வரை. 2 வது சாமம் 7.30 முதல் 9 மணிவரை. 3வது சாமம் 9 முதல் 10 $\frac{1}{2}$ மணிவரை. 4வது சாமம் 10 $\frac{1}{2}$ முதல் பகல் 12 மணிவரை. 5வது சாமம் பகல் 12 முதல் $1\frac{1}{2}$ மணிவரை, 6வது சாமம் பிற்பகல் 1 $\frac{1}{2}$ முதல் 3 மணி வரை. 7வது சாமம் மாலை 3 முதல் 4 $\frac{1}{2}$ மணிவரை. 8வது சாமம் மாலை 4 $\frac{1}{2}$ முதல் 6 மணிவரை.

ராசிக்கட்டத்தின் மூலம் இதை விளக்குவோம்.

|  | 6.00 | 4½ | 4½ |  |
|---|---|---|---|---|
| 1½ |  |  |  | 3 |
| 7½ |  |  |  | 1½ |
| 9 |  |  |  | 1½ |
|  | 10½ | 10½ | 12 |  |

மீண்டும் ஒருமுறை ராசிக்கட்டத்தைப் பாருங்கள், கும்பம், விருச்சிகம், சிம்மம், ரிஷபம் என்ற ஸ்திர ராசிகள் சாமத்தில் இடம் பெறவில்லை. மேலும் சாமம் எப்போதும் மீன ராசியில் தொடங்கி அப்பிரதட்சணமாக மேஷத்தில் வந்து முடியும். எனவே சாமக்கோள்கள் ஸ்திர ராசியில் இடம் பெறா. இது முக்கியமான விதிகளில் ஒன்று. இரவு நேரத்திற்கும் இதே கணக்குத்தான். ஏனிப்படி என்று பார்ப்போம், காரணங்களை, முதலில் பூகோள சாஸ்திரத்திலும், ஜோதிட சாஸ்திரத்திலும் எட்டு திக்குகள் (திசைகள்) உண்டு. அவை முறையே கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்ற முக்கியமான திசைகளையும், வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்ற உபதிசைகளையும் கொண்டதாகும்.

ராசிக்கட்டத்தின் மூலம் இதை விளக்குவோம்.

கிழக்கு — தெ.கி

| வடக்கு / தெற்கு | | | |
|---|---|---|---|
| 4 | 4 | 2 \| 2 | 4 |
| 2 \| 2 |  |  | 4 |
| 4 |  |  | 2 \| 2 |
| 4 | 2 \| 2 | 4 | 4 |

வா மே — மேற்கு — தெ.மே

கணக்கு முறைப்படி ஒரு ராசிக்கு 4 பாகங்கள் 12 x 4 = 48 பாகங்கள். ஸ்திர ராசிகள் 2 ஆகப்பிரிந்து படத்தில் காட்டியபடி, தன் பக்கத்தில் உள்ள சர உபய ராசிகளுக்கு 2 பாகம் வீதம் தந்துவிடுகின்றன. அதாவது ரிஷபத்தின் ஒரு பாதி சர ராசியான மேஷத்தோடும், அடுத்த பாதி உபயராசியான மிதுனத்தோடும் போய்ச்சேர்ந்து கொள்கின்றன.

அதாவது ஒவ்வொரு திசையும் 6 பாகங்களைக்கொண்டதாகி விடுகிறது. 8 x 6 = 48 பாகங்கள். கிழக்கு மேஷத்தில் 4 பாகம் 2 பாகம் ரிஷபத்தில்

| | |
|---|---|
| வடகிழக்கு மீனத்தில் 4 பாகம் | 2 பாகம் கும்பத்தில் |
| வடக்கு மகரத்தில் 4 பாகம் | 2 பாகம் கும்பத்தில் |
| வடமேற்கு தனுசில் 4 பாகம் | 2 பாகம் விருச்சிகத்தில் |
| மேற்கு துலாபத்தில் 4 பாகம் | 2 பாகம் விருச்சிகத்தில் |
| தென்மேற்கு கன்னியில் 4 பாகம் | 2 பாகம் சிம்மத்தில் |

தெற்கு கடகத்தில் 4 பாகம் 2 பாகம் சிம்மத்தில்
தென்கிழக்கு மிதுனத்தில் 4 பாகம் 2 பாகம் ரிஷபத்தில்

ஞாயிற்றுக்கிழமை முதல் ஜாமத்தில் இந்த கிரகங்கள் எப்படி அமர்கின்றன என்று பார்ப்போமா?

பாம்பு மதி

| | | | |
|---|---|---|---|
| கதிர் | | X | |
| X | | | மந் |
| சேய் | | | X |
| பொன் | X | | புகர் |

மால்

2வது ஜாமத்தில் கதிர் மகரத்தில், சேய் தனுசில், பொன் துலாத்தில், மால் கன்னியில், புகர் கடகத்தில், மந்தன் மிதுனத்தில் மதி மேஷத்தில், பாம்பு மீனத்தில். 3வது சாமத்தில் கதிர் தனுசிலும், இதர கிரகங்கள் அதே வரிசைச்கிரமப்படி ஸ்திர ராசிகளை விட்டுவிட்டு அமரும், நீங்களே போடலாம் சுலபமாக. இது தான் சாமக் கோளில் கிரகங்கள் அமைக்கப்படும் விதம் அல்லது அமரும் விதம்.

ஆரம்ப காலத்தில் ஸ்திர ராசியில் ஒரு பெருக்கல் குறி X போட்டுக்கொண்டால் தவறுகள் ஏற்பட வழியில்லை.

இரவு 8 ஜாமங்களுக்கும் இப்படியே போட்டுக் கொள்ளலாம். திங்கள், செவ்., புதன்., வியா., வெள்., சனிக்கிழமைகளில் முதல் ஜாமத்தில் கிரகங்கள் அமரும் விதத்தைப்பார்போம்.

மந் புக
மதி
திங்கள் முதல் சாமம்
பாம்
கதி
சேய்

கதி பாம்
சே
மால்
செவ் முதல் சாமம்
பொ
பொ
மால் புக மந்

மால் பொ சேய்
ம
திபு
க
புதன் முதல் சாமம்
கத்
மந் மதி பா

பொன் சேய் கதிர்
மால்
பாம்
புக
மதி
மந்
வியாழன் முதல் சாமம்

மால் பொன்
புக
மந்
சேய்
மதி
கதி
மதி பாம்
வெள்ளி முதல் சாமம்

மந் புக மால்
பொ
சே
பாம் கதி
சனி முதல் சாமம்

சாமக்கோள்களை வெளிக்கட்டத்திலேயே போடவேண்டும். இதனால் பல நன்மைகள் உண்டு. பலன்கள் சொல்லும் போது அன்றைய கிரகங்களை உள் கட்டத்தில் போட வேண்டும். பார்த்த மாத்திரத்திலேயே சாமக்கோளின் நிலையும், அன்றைய கிரக நிலையும் பளிச்சென்று தெரியும். மனதில் பதியும். பலன் சொல்வது எளிதாக இருக்கும்.

மேலும் ஜோதிட சாஸ்திரத்தில் ஸ்திர ராசிகளில் எந்த கிரகமும் உச்சமடைவதில்லை, சந்திரனைத்தவிர. சந்திரன் ரிஷபத்தில் உச்சமானாலும் அவன் சூரிய ஒளியை வாங்கி பிரதிபலிக்கிறான் அவ்வளவே. மேலும் அவனுக்கு வளர்பிறை, தேய்பிறை என்ற நிலைகளும் உண்டு. எந்த கிரகத்திற்கும் இந்த நிலை கிடையாது. மேலும் திசை கணக்குப்படி சந்திரன் ரிஷபத்தில் 3 பாகையில் உச்சமடைவதால், மேஷத்துடன் சேர்ந்தாகும்.

எனவே சாமக்கோள் ஆருடத்தில் ஸ்திர ராசிகள் மிக வலுவுள்ளவை. பலன் தர அவற்றில் கிரகங்கள் இருக்க வேண்டிய அவசியமில்லை. இந்த ஸ்திர ராசிகள் உதயமானால் நன்மைகள் உண்டு. ஆனால் வியாதி பற்றிப்பிரச்சனைகள் கேட்கப்படும்போது ஸ்திரம் உதயமானால், வியாதி தீராது. இதே ஸ்திர ராசிகள், சிரோதயமானல் மிகவும் நன்மை. அது பற்றிப் பின்னால் விவரமாகப்பார்போம்.

கட்டத்தில் கிரகங்களை அடைக்கக்கற்று சொண்டு விட்டீர்கள். அது சரிதானா எனறு எப்படி அறிந்து கொள்வது. நம்மையறியாமலேயே தவறுகள் ஏற்படலாம் அல்லவா? அதைக்கண்டு பிடித்த இதோ வழி, எந்த நேரத்திலும், எந்த சாமத்திலும்.

| | |
|---|---|
| கதிருக்கு நேர் 7வது வீட்டில் | புகர் இருக்கும் |
| சேய்க்கு ,, ,, | மந்தன் இருக்கும் |
| பொன்னுக்கு ,, ,, | மதி இருக்கும் |
| மாலுக்கு ,, ,, | பாம்பு இருக்கும் |

இப்படி அமையாவிட்டால் ஏதோ தவறு செய்திருக்கிறீர்கள்.
அடுத்த பாடங்களில் உதயம், சூரிய வீதி, கவிப்பு, இவை பற்றி பார்ப்போம்.

* பயிற்சிக்காக சனி காலையில் 10.29க்கு சாமக்கோள் கட்டத்தை எழுதியனுப்பவும். அடுத்த பாடத்தில் உதயம் பற்றி பார்ப்போம். இதுவரை இரண்டு பாடங்களில் ஆருட நிர்ணயம், சாமக்கோள்களை எப்படி அடைப்பது என்று பார்த்தோம்.

# சாமக்கோள் ஆருடம்
## பாடம் 3
## உதயம்

முதல் பாடத்தில் ஆருட நிர்ணயத்தையும், 2வது பாடத்தில் சாமத்தில் குறிப்பிட்ட நேரத்திற்கு கிரகங்களை எப்படி அடைப்பது, அடைத்தது சரிதானா? என்று அறிந்து கொள்ள வேண்டிய விதிமுறையையும் தெரிந்து கொண்டோம்.

இந்த பாடத்தில் உதயம் பற்றிப்பார்ப்போம். உதயம் என்பது குறிப்பிட்ட நேரத்திற்கு ஏற்படும் லக்னமாகும், வழக்கத்தில் லக்னம் என்ற பதம் நீக்கப்பட்டு, உதயம் என்று வழங்கப்படுகிறது. மேலும் ஜோதிட சாஸ்திரத்தின் லக்னத்திலிருந்து இதை வேறுபடுத்த இந்த பதம் மட்டும் உபயோகிக்கப்படுகிறது என்றும் கொள்ளலாம்.

மேலும் ஜோதிட சாஸ்திரத்தில் ஒரு நாளைக்கு 12 லக்னங்களே உதயமாகும். சாமக்கோள் ஆருடத்தில் அப்படி அல்ல. பகல் 12 லக்னங்கள், இரவு 12 லக்கனங்கள். ஆக மொத்தம் 24 லக்னங்கள். அதாவது 1 மணிக்கு 1 லக்னமாகும். சூரிய உதயம் அஸ்தமனத்தை அனுசரித்து சில நிமிஷங்கள் கூடுதலாகவோ இல்லை குறைவாகவோ இருக்கும் / அவ்வளவே,

சாமக்கோள் ஆருடத்தில் முக்கியமான விசேஷமாகும் இது.
இந்த உதயத்தை எப்படிக் கணிப்பது என்று பார்ப்போம்.

முதலில் ஒரு இடத்தில் (அந்த ஊரின் ) சூரிய உதயமும் அஸ்தனமும் தெரிய வேண்டும். அது இல்லாமல் உதயம் கணிக்க இயலாது. இந்த சூரிய உதய அஸ்தமனங்களைப் பஞ்சாங்கங்களில் கொடுத்து இருக்கிறார்கள். அதைப்பயன் படுத்திக்கொள்ளலாம், சுலபமாக, தினந்தோறும் சூரிய அஸ்தமனம் தெரிந்திருக்க வேண்டும். நடைமுறையில் வித்தியாசம் 30 விநாடிகளுக்கு மேலிருந்தால் 1 நிமிஷமாகவும், 30 விநாடிகளுக்கு குறைந்தால் அதைத்தள்ளியும் விடலாம்.

ஒரு உதாரணங்கொண்டு விளக்குவோம். இன்று 1993. ஆகஸ்ட் 6ம் தேதி வெள்ளிக்கிழமை. ஊர் (இடம்) திருச்சி என்றும் வைத்துக்கொள்ளுவோம். ஆனந்த போதினி பஞ்சாங்கப்படி சூரிய உதய அஸ்தமன விபரங்கள்.

ஜூலை 31 தேதிக்கு சூரிய உதயம் 6.06 அஸ்தமனம் 6.36
சூரிய உதயத்தில் 1 நாளைக்கு 12 செகண்ட் வித்தியாசம்
அடுத்த ஆகஸ்ட் 10 தேதிக்கு உதயம் 6.08 அஸ்தமனம் 6.32
10 நாளில் வித்தியாசம் ,, 2 நிமிடம் ,, 4 நிமிடம்
24 செகண்டுகள் வித்தியாசம் சூரிய அஸ்தமனத்தில். ஆகஸ்ட் 6ம் தேதிக்கு 6 நாள் வித்தியாசம் 6 x 12 = 72 செகண்டுகள் அல்லது 1 நிமிடம் 12 செகண்டுகள். 12 செகண்டுகளைத்தள்ளிவிட்டால், 1 நிமிடம் . இந்த 1 நிமிஷத்தை ஜூலை 31ம் தேதியுடன் கட்ட வேண்டும். ஏன் கூட்டவேண்டும்? காரணம் சூரிய உதயம் 6.06 லிருந்து 6.08 ஆக ஏறிவிட்டது. எனவே ஆகஸ்ட் 6-ம் தேதி திருச்சிக்கு சூரிய உதயம் 6 மணி 07 நிமிடம் ஆகும்.

இதே போல் அஸ்தமனத்தையும் பார்ப்போம்.
வித்தியாசம் 4 நிமிடம் அல்லது 240 செகண்டுகள் 1 நாளைக்கு 24 செகண்டுகள், 6 நாளைக்கு 6 x 24 = 144 செகண்டுகள். 24 தள்ளி விட 2 நிமிட சூரிய அஸ்தமனம் 6.36லிருந்து 6.32 ஆக குறைந்து விட்டது. எனவே ஜூலை 31ம் தேதி சூரிய உதயத்திலிருந்து இந்த 2 நிமிடம் கழிக்கப்படவேண்டும். எனவே ஆகஸ்ட் 6-ம் தேதிக்கு சூரிய அஸ்தமனம் திருச்சியில் மாலை 6.34 நிமிடம்.
உதயம் 6.07 அஸ்தமனம் 6.34. இடைப்பட்ட கால வித்தியாசம் 12 மணி 27 நிமிடம். இதை 12 ஆல் வகுக்க 1 மணி 2 நிமிடம். அல்லது 1 மணி 2 நிமிடம் 0.15 செகண்டு. நடைமுறை கணக்குப்படி 15 செகண்ட் தள்ளிவிட்டால் 1 மணி 2 நிமிடம் ஆகும். எனவே பகல் பொழுதில் ஒரு உதயம் 1 மணி 2 நிமிடம். இப்போது இரவுப்பொழுதில் உதயம் கணக்கிடுவோம். சூரிய அஸ்தமனம் முதல் மறுநாள் உதயம் வரை இடைப்பட்டகாலம் 11 மணி 33 நிமிடம், அல்லது 693 நிமிடம். இதை 12ல் வகுக்க 57 9/12 நிமிடம் அல்லது 57 நிமிடம் 45 செகண்டுகள். 45 செகண்டுகள் ஒரு நிமிஷமாகக்கொள்ளலாம். எனவே இரவு ஒரு உதயம் 58 நிமிடம்.
பகல் பொழுது ஒரு உதயத்தின் அளவு 1 மணி 2 நிமிடம்
இரவுப்பொழுது ஒரு உதயத்தின் அளவு 58 நிமிடம் என்று பார்த்தோம். வெள்ளிக்கிழமை ஆகஸ்ட் 6ம் தேதி பகல் 11 மணிக்கு ஒருவர் ஆருடம் கேட்க வருகிறர் என்று வைத்துக்கொள்வோம். அப்போது உதயம் எந்த ராசியில் விழுகிறது என்று பார்ப்போம்.

சூரிய உதயம் 6.07

அதோடு 1.02 நிமிடம் கூட்ட 7மணி 09 நிமிடம் ஆகும். அன்று தமிழ்த்தேதி 22 ஆடி. லக்னமானது ஜோதிட சாஸ்திரத்தில் ஒரு நாளைக்கு 4 நிமிடம் வீதம் நகரும். இங்கு சாமக்கோளில் பகல் 12 உதய (லக்னங்கள்) இரவு 12 உதய (லக்னங்கள்) என்று பார்த்தோம். இந்த 4 நிமிஷத்தை 2 ஆக பிரிக்க 2 நிமிடம் ஆகிறது, ஆடி 22 தேதி ஆனதால் 22 x 2 = 44 நிமிடம்.

மொத்தம் லக்னம் நகர்ந்து விட்டது எனவே 7.09 லிருந்து
இந்த 44 நிமிஷம் கழிக்க .44

6.25 வரும்

அதாவது ஆகஸ்ட் 6ம் தேதி ஆடி 22 கடக ராசியில் இந்த உதயம் 6.25 உடன் முடியும். சிம்ம உதயம் 6.25 + 1.02 = 7.27 வரை. 7.27 + 1.02 கூட்ட 8இ29 வரை. இப்படியே கூட்டிக்கொண்டு போக வேண்டும்.

துலாம் 9.31 விருச்ச 10.33 தனுசு 11.35 எனவே 11 மணிக்கு தனுசு உதயம். அதே ஆகஸ்ட் 6, ஆடி 22 வெள்ளி இரவு 8.45க்கு ஒருவர் ஆருடம் கேட்கிறார் என்று வைத்துக்கொள்வோம் அப்போது உதயம் எந்த ராசியில் விழும்? சூரிய அஸ்தமன் 6.34 இத்துடன் உதயமான 58 நிமிடம் கூட்ட 7.32 வரும். இதில் முன்போல 44 நிமிடம் கழிக்க 6.48 வரும். அதாவது கடக உதயம் 6.48 நிமிடம் உடன் முடிவுடைகிறது. இத்துடன் 58 கட்ட 7.46 வரை சிம்ம. கன்னி 8.44 வரை. , 8.45க்கு துலாம் உதயமாகும்.

| சேய் | கதி | | பாம் |
|---|---|---|---|
| 12.37 பொ 11.35 | பகல் 11.00 மணி 6.8.93 | | மதி 6.25 |
| | | | 7.27 |
| மால் உ/த 10.33 | 9.31 | புக 8.29 | மந் |

| மால் | பொ | | சேய் |
|---|---|---|---|
| | இரவு 8.45 6.8.93 | | கதி 6.48 |
| புக | | | 7.46 |
| மந் | 0.44 | உத/ மதி | 8.44 பாம் |

சாமக்கோள் கிரக நிலையையும் போட்டுப்பார்ப்போம். காலை 11 மணி 4வது சாமம். எனவே அங்கிருந்துதான் வாராதிபனைப்போட்டு, மற்ற கிரகங்களை அடைக்க வேண்டும். வரிசைக்கிரமம் மாறாமல், இரவு 8.45 2வது சாமம் எனவே படத்தின் கண்டபடி கிரகங்களை அடைக்க வேண்டும்.

# சாமக்கோள் ஆருடம்
## பாடம் 4
## கவிப்பு

சாமக்கோள் ஆருடத்தில் ஆருடம், உதயம் இவை பற்றி அறிந்து கொண்டோம். 3வது அங்கமான கவிப்பு பற்றிப்பார்ப்போம். கவிப்பு என்பது கவிழ்த்தல் என்பதன் திரிபு. வடமொழியில் இதை சத்ரம் என்று அழைப்பார்கள். தமிழில் குடை என்றும் சொல்லலாம்.

குறிப்பாக ஒரு எல்லையை அடைத்து, அதனுள்ளிலிருந்து பல விஷயங்களைக் கண்டறிதல் என்று பொருள். சில சமயம் மீன் பிடிப்பவர்கள் வட்ட வடிவமான ஒரு கூடையை கவிழ்த்துவிடுவார்கள் தண்ணீரில். பிறகு மேலேயுள்ள துவாரத்தின் வழியாக கையைவிட்டு, வேண்டிய (பெரிய) மீன்களை எடுத்துக்கொள்வார்கள். அதுபோல மறைந்து இருக்கும் பல விஷயங்களை கவிப்பு மூலம் அறிந்து கொள்ளலாம். உதயந்தால் எதிர்காலம்பற்றியும். ஆருடத்தால் நஷ்டமும், கவிப்பால் மறைந்திருக்கும் (பொருள், விஷயங்களும்) சொல்லாம், கவிப்பிற்கும் வலு உண்டு, சாமக்கோள் ஆருடத்தில்.

இந்த கவிப்பைக் கண்டறியும் முன்பு சூரிய வீதி பற்றித்தெரிந்திருக்க வேண்டும். சூரிய வீதி என்றால் என்ன? சூரியனுக்கு தக்ஷிணயாணம், உத்ராயணம், பூர்வாயணம் என்ற 3 வீதிகள் உண்டு, சஞ்சாரிதியில் அவற்றை 3 ராசிகளில் குறிப்பிடுவதே சூரிய வீதி எனப்படும்.

வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி மாதங்களுக்கு சூரிய வீதி மேஷம், கார்த்திகை, மார்கழி, தை, மாசி மாதங்களுக்குரிய சூரிய வீதி மிதுனம். புரட்டாசி, ஐப்பசி, பங்குனி, சித்திரை இந்த 4 மாதங்களுக்கு சூரிய வீதி ரிஷபம்.

இன்று ஆவணி மாதம், ஆருடம் கன்னி ராசி என்றும், உதயம் மீனம் என்றும் வைத்துக்கொள்வோம். கவிப்பு எந்த ராசியில் விழும்?

ஆருட ராசி (உள்பட) சூரிய வீதி வரை எண்ணவும். சூரிய வீதி மேஷம் என்று பார்த்தோம். ஆவணி மாதத்திற்கு. எனவே 8. (கன்னியிலிருந்து மேஷம் வரை எண்ண) உதயம் மீனம் என்றும் வைத்துக்கொண்டோம். மீனம் முதல் அதே 8 எண்ண துலாம் ராசி வரும். அதுவே கவிப்பு.

சூரிய

| உதயம் | வீதி | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | கவிப்பு | ஆரு |

கவிப்பு

*3வது பாடத்தில் பகல் 11 மணிக்கு 6, 8, 93 உதயம் மகரம், தனுசு ஆருடம், ரிஷபம் என்று வைத்துக்கொண்டால், கவிப்பு எந்த ராசியில் விழும். 6.8.93 ஆடி மாதம். சூரிய வீதி மேஷமே. ஆருடத்திற்கு 12ம் ராசி சூரிய வீதி. உதயத்திலிருந்து 12ம் இடம் விருச்சிகம், அதுவே கவிப்பு ராசியாகும். அடுத்த மாதம் புரட்டாசி. சூரிய வீதி மாறும். அதாவது ரிஷபத்தில், ஆருடத்திலிருந்து ரிஷபம் வரை, எண்ணி, அதே எண்ணிக்கையை உதயம் முதல் எண்ண வேண்டும். அதுவே தான் கவிப்பு ஆகும்.*

*மேஷ ராசி ஆருடமாக வருகிறது என்று வைத்துக்கொள்வோம். சூரிய வீதியும் மேஷம். எனவே 1. உதயத்திலிருந்து 1 எண்ண உதயமே கவிப்பாகும்.*

*மேற்கண்ட 3ம்பாட உதாரணத்தில் மகரமே சுவிப்பு ஆகும், மேஷம் ஆருடம் ஆக வந்தால்.*

*இந்த சூரிய வீதியை நினைவு வைத்துக்கொள்வது சுலபம். ஆரம்ப காலத்தில் வேண்டுமானால் சூரிய வீதியைக்குறித்து வைத்துக்கொள்ளலாம், கண்ணில் படும்படி. வைகாசி மாதம், புரட்டாசி மாதம், கார்த்திகை மாதம், பங்குனி மாதம், இந்த 4 மாதங்களில் சூரிய வீதி மாறுகிறது. அதை நினைவில் வைத்துக்கொண்டாலும் போதும் மறக்காது.*

*சாமக்கோள் ஆருடத்தின் 3 அங்கங்களை ஆருடம், உதயம், கவிப்பு இவற்றை எப்படிக்கணக்கிடுவது என்று புரிந்து கொண்டோம் இந்த 4 பாடங்களில்.*

*மற்றவற்றை அடுத்த பாடங்களில் பார்ப்போம்.*

*உதயம் சம்பந்தமாக கீழ்க்கண்ட முறையைப்பின்பற்றுவது நல்லது.*

*தினந்தோறும் சூரிய உதயம், அஸ்தமனம் எழுதிக் கொள்ளவும்*

*பெரும்பாலும் 3 நாளைக்கு ஒரு தரம் இவை மாறலாம். மாத தமிழ்த்தேதியும் குறித்துக்கொள்க.*

*உதாரணமாக சூரிய உதயம் 6.09, அஸ்தமனம் 6.18 என்றும் வைத்துக்கொள்வோம். இடைப்பட்ட நேரம் 12 மணி 9 நிமிடம். அதாவது ஒரு உதயம் 1 மணி 3/4 நிமிடம் அல்லது 1 மணி 1 நிமிடம். தமிழ்த்தேதி 12 என்றும் வைத்துக்கொள்வோம். 6.09 + 1.01 = 7.10, 12 நாளைக்கு 2 நிமி. வீதம் 24 கழிக்க, 6.46 ஆவணி மாதம் என்றால் 6.46 உடன் சிம்மம் முடிவடைகிறது. 7.47 வரை கன்னி. 8.48 வரை துலாம், 9.49 வரை விருச்சிகம், 10.50 வரை தனுசு என்றிப்படி கணக்குபோட்டு கட்டத்திலும் குறித்து வைத்துக்கொள்ளலாம். நேரம் வீணாகாது, தவறுகளும் ஏற்பட வழியில்லை.*

1.53 2.54 3.55

12.52 4.56

11.51 5.57

10.50 6.46

9.49 8.48 7.47

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் 5
## சாமக்கோள் ஆருடத்தில் என்னவெல்லாம் கூறமுடியயும்?

ஜோதிட சாஸ்திரத்தில் பலன்கள் யாவும் 6 பெரும் பிரிவில் அடங்கும். அதாவது ஜயம், அபஜெயம், லாபம், நஷ்டம், சுகம், துக்கம் என்ற வகையில், ஆனால் இது ஆருடம் கேட்க வருவர்களை திருப்திப்படுத்தாது. மிகத்துல்லியமாக பல விவரங்களை எதிர்பார்ப்பார்கள். ஜோதிடரும் எடுத்துச்சொல்ல வேண்டும். அப்போது தான் இருவருக்கும் பரஸ்பர திருப்தி ஏற்படும். ஜோதிட சாஸ்திரத்தின் மகிமையை, வழிகாட்டும் தன்மையை பொதுமக்கள் அறிந்து கொள்வார்கள், ஜோதிடரின் புகழும் ஒங்கும்.

ஏற்கனவே ஆரம்பத்திலேயே சாமக்கோள் ஆருடம் மிக உயர்வானது, அதற்கு ஈடு இணையில்லை என்றும் பார்த்தோம். சாமக்கோள் ஆருடத்தில் என்னென்ன விஷயங்களையெல்லாம் எடுத்துக்கூறமுடியும் என்று அறிந்து கொண்டால் வியப்பே நமக்கு ஏற்படும், அதன் விபரங்களைப்பார்ப்போம்.

(1) திசை (2) ஆண், பெண் (3) ஒற்றை இரட்டை (4) குலம் (5) நிறம், (6) கால்கள் (7) வடிவம் (8) விலங்கினங்களில் கொம்பு (9) கிரகங்களில் கதிர்கள் (9) அவற்றின் அளவு (10) தூரம் (11) வயது (12) சுவைகள் (13) வடு, மறு (14) வலம், இடம் (15) ஒளி(வு) (16) நிற்பன (17) சுழல்வன (18) நிற்பனவற்றோடு சுழல்வன (19) நடப்பன (20) பறப்பன (21) தவழ்வன (22) சேரும் இடம் (23) இரவு, பகல் (24) வருஷாதி கால கணிதம் போதுமா?

இன்னும் தாது, மூல, ஜீவன் என்ற பிரிவும் உண்டு. அவற்றைப்பற்றி அறிந்துகொள்வோம். தாதுவாவது மண், கல் பொன், உலோகங்கள், உலோக கனிமங்கள் ( Ores, Minerals, Metals ) மூலமாவது புல், செடி, கொடி, மரம் முதலியவை ( Vegetable, Kingdom & their produce) ஜீவனாவது எறும்பு, பறவை, விலங்குகள் (பலவகை) மனிதன் உள்பட. இன்னும் மூலதாது, ஜீவதாது, என்ற உட்பிரிவுகளும் உண்டு.

மூலதாவதாவது மடிந்த புல், செடி, கொடி. மடியாத பட்சத்தில் பட்டை, பூ, கிழங்கு முதலியன.

ஜீவதாதுவாவது மடிந்து போன ஜீவன்கள், மடியாதவிடத்து அவற்றின் தோல், நகம், மாமிசம் முதலியவை.

இன்னும் பல உட்பிரிவுகளும் உண்டு. அவற்றையெல்லாம் பின்னால் வரும் பாடங்களில் பார்ப்போம்.

இவற்றையெல்லாம் எப்படி நினைவு வைத்துக்கொள்வது என்று ஆரம்பத்தில் மலைப்பாக இருக்கும். போகப்போக சரியாகிவிடும் மலைக்கத்தேவையில்லை, தமிழ் எழுத்துக்கள் மொத்தம் 247. ஆயுதவெழுத்தையும் சேர்ந்து, தமிழ் நன்றாக எழுதப்படிக்க கற்றுக்கொண்ட பின்பு இந்த 247 பற்றி நாம் மலைக்கவா செய்கிறோம் அது போலவே இதுவும்.

மேலும் கேட்கப்படும் கேள்விக்கு ஏற்றவகையில் இவற்றைப்பயன்படுத்த வேண்டும். அனுபவமே வழிகாட்டும்.

முதல்பாடம் பக்கம் 3ல் வந்த உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். பரிட்சையில் தேறாமல் ஒடிப்போன பையன் . தகப்பனுக்கு கவலை பையன் எப்போது திரும்பி வருவான் என்று. தாயின் கவலை அவன் உயிரோடு இருக்கின்றான என்று. ஒரு பிரச்சனைக்கு 2 ஆருடம் என்றும் பார்த்தோம்.

இதற்குப்பலன் சொல்லும்போது, பையன் சென்ற திசை (திக்கு) எவ்வளவு தூரம் போயிருப்பான், பத்திரமாய் இருக்கிறானா? (அவன் உயிருக்கு ஆபத்து ஏதுமில்லை) எப்போது திரும்பி வருவான் என்றவற்றை அலசிப்பார்த்துப்பலன் சொல்ல வேண்டும். (1) திசை (10) தூரம் (22) சேரும் இடம் (24) கால கணிதம் இந்த 4யும் கவனமாகப்பார்த்தல் வேண்டும். அதன்பிறகு 3 ஒற்றை, இரட்டை ஐயும் பார்க்கலாம். பையன் தனியாகப்போயிருக்கறானா? இல்லை கூட்டாளியுடன் சேர்ந்து போயிருக்கிறானா என்றும் மேலும் பையன் ஒரிடத்தில் (ஊரில்) தங்கியிருக்கிறானா, இல்லை இடம் விட்டு இடம் மாறுகிறானா என்றும் சொல்லலாம், சேரும் இடத்தின் தன்மையைப்பொறுத்து.

இப்படிப்பலன் சொல்வது தானய்யா, சாமக்கோள் ஆருடம் புரிகிறாதா?

நான் சாமக்கோள் ஆருடம் கற்க ஆரம்பித்த போது, என் குருநாதர் (காலஞ்சென்ற கலியாணராமய்யர்) சொன்ன பலன் விவரங்களை நினைவு கூறுவது அவசியம் இங்கு. ஒரு கடையில் மாலை அவரை சந்திக்கப்போயிருந்தேன். கடைக்காரர் அவரைப்பார்த்து, சாமி, இந்த கடையை கொடுத்துவிடலாம் என்று நினைக்கிறேன். உங்கள் ஆருடம் என்ன சொல்கிறது என்று கேட்டார். 5 அல்லது 6 நிமிஷங்களுக்குப்பிறகு என் குருநாதர், கொடுத்துவிடு, 40,000/- கிடைக்கும். பெண் கல்யாணத்திற்காக இதைக்கொடுக்கிறாய், வெள்ளாள ஜாதியைச்சேர்ந்தவர் வாங்குவார் . மருந்து கடை வைப்பார் . 6 மாதம் ஓடும் பிறகு மிட்டாய்க்கடைதான் நிலைக்கும் இங்கு, நானிருந்து பார்க்க மாட்டேன், என்னைச்சுட்டிக்காட்டி இவர் இதையெல்லாம் பார்ப்பார் என்றார். அப்படியே நடந்தது. இன்றும் மிட்டாய் கடையைப்பார்க்கும்போதெல்லாம், என் குருநாதர் கூற்று மனதில் பளிச்சிடும். அவர் காலமான பின்பு அல்லியந்தல் அருணாசலம் என் குருநாதர் ஆனார். அவர் சொன்ன ஆருடப் பலன் விவரங்களைப்பார்ப்போம். என் அறையில் அவருடன் பேசிக்கொண்டிருந்த போது, ஒரு நபர் என்ன தொழில் செய்யலாம் என்று கேட்டுக்கொண்டே வந்தார். அல்லியந்தால் அருணாசலம் சில நிமிஷங்களில், காப்பியை ஆற்றும் பாவனையில் கைகளை ஆட்டி அசைத்து, காப்பி கடை வைக்கப்போகிறீர்கள், தீர்மானம் ஆகிவிட்டது, இடமும் பார்த்துவிட்டீர்கள், தெற்கு பார்த்த கடை, நிறைய நகை வியாபாரிகள் இருக்கும் தெரு. கோமுட்டி செட்டியார்கள் . வியாபாரம் சுமாராகத்தான் ஓடும். எதிர்பார்த்த அளவிற்கு லாபம் வராது. இழுபறி நிலைதான் என்றார். 8 ஆண்டுகளுக்கு மேலாக அவர் சொன்ன நிலையிலேயே வியாபாரம் நடந்து வருகிறது, போதுமா?

இந்த மாதிரி விவரங்கள்தான் என்னை வியப்பில் ஆழ்த்தி இந்த ஆருடத்தைக் கற்க வகை செய்தது. பலவிஷயங்களை அல்லியர்தல் அருணாசலம் மூலம் கற்றுக்கொண்டேன். குருநாதர்கள் பாதம் போற்றி, அவர்கள் ஆசிகளுடன் அடுத்த பாடங்களைத் தொடருவோம்.

நடைமுறையில் கையாளப்படும் ஆருட சாஸ்திர வகையெல்லாம் இதன் முன் பதில் சொல்ல முடியாது.

மேலும் அதிகக்கணக்குப் போடவும் தேவையில்லை. 10 நிமிஷங்களில் எந்தப்பிரச்சனைக்கு பதில் கூறமுடியும்.

கால தேசத்தை உத்தேசித்து இன்னும் பல விஷயங்களுக்கு மிகத் தெளிவாகப் பதில் கூறலாம்.

ஆருடம் கேட்பவர் எதற்கு வந்திருக்கிறார் என்றும் கூறமுடியும், போதுமா?.

# சாமக்கோள் ஆருடம்
## பாடம் 6
## ராசிகளின் தன்மைகள்

ஜோதிட சாஸ்திரத்தில் 12 ராசிகள். அவை ஒவ்வொன்றிகும் ஒரு விசேஷம் உண்டு. அந்த முறையே இந்த சாமக்கோள் ஆருடத்திலும் பின்பற்றப்படுகிறது. தவிர சர ஸ்திர உபயம் என்ற மூன்று பிரிவுகள். மேஷம், கடகம், துலாம், மரகம் - இந்த நான்கும் சர ராசிகள்.

ரிஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம் இந்த நான்கும் ஸ்திர ராசிகள் மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இந்த நான்கும் உபயராசிகள் இவற்றையை மற்றொரு வகையில் பிரித்துச்சொல்லப்படுகிறது. சிரோதய ராசிகள்

- மிதுனம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், கும்பம் (6)

சிரோதய ராசிகள்

- மேஷம், ரிஷபம், கடகம், தனுசு, மகரம் (5)

பிருஷ்டோதயராசிகள் - மீனம் மட்டும் - சிரபிருஷ்டோதயம் (1)
விரோதயம் என்பது தலையால் நிமிர்ந்து நிற்கும் அல்லது எழுந்திருக்கும் ராசிகள்.
பிருஷ்டோதயம் பின்பகுதி இவற்றால் எழுந்திருக்கும் ராசிகள்.
சிரோதயத்திற்கு உதாரணம் நீங்களே புரிந்து கொள்ளலாம். பிருஷ்டோதயத்திற்கு உதாரணம் ஆடு, மாடுகள் எழுந்து நிற்றல். ஸ்திர பிருஷ்டோதயத்திற்க உதாரணம் சில பறவைகளும், நீர்வாழ் ஜந்துக்களும்.

இன்னும் விவரமாகப்பார்க்குமிடத்து இருகால் ராசிகள், நாற்கால் ராசிகள், பறவைக்கால் ராசி, பலகால்ராசிகள் என்ற பாகுபாடுகள் உண்டு.

மகரம் ஒன்றே பறவைக்கால் ராசியாகும்
கடகம், விருச்சிகம் பலகால் ராசிகளாகும்
மேஷம், ரிஷபம், சிம்மம், தனுசு - நாற்கால் ராசிகளாகும்
மிதுனம், கன்னி, துலாம், கும்பம், மீனம் - இரு கால் ராசிகளாகும், சில சமயம் மீனம் பல்கால்ராசியாகவும் கருதப்படுகிறது.
மேலும் ராசிகளின் விழிப்புக்காலமும் கீழ்க்கண்டபடியாகும்.
சிரோதய ராசிகள் - பகல் விழிப்பு
பிருஷ்டோதய ராசிகள் - இரவு விழிப்பு
சிரபிருஷ்டோதய ராசி - பகல், இரவு இரண்டு காலமும்.
ராசிகளின் நோக்குகளைப்பற்றி அறிவோம்.

இருகால் ராசிகள் மக்களைப் போல் மேல் நோக்கும்.

நாற்கால் ராசிகள் - மிருகங்கள் பார்ப்பது போல பக்கவாட்டில் நோக்கும்.

சிறகுச்கால் ராசிகள் பறவை போல் மேல் நோக்கும்.

பலகால் ராசிகள் தவழ்வன நோக்குதல் போல் கீழ்நோக்கும்.

பக்கங்கள் வலம், இடம், பின் என்ற 3 வகையில் அடங்கும்.

ஆண், பெண் ராசிகள் எவை?

மேஷம், மிதுனம், சிம்மம், துலாம், தனுசு, கும்பம் - 6ம் ஆண் ராசிகள்

ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் - 6ம் பெண் ராசிகள்

இவற்றில் ஒற்றை, இரட்டை என்ற பாகுபாடுகளும் உண்டு.

மேஷம், சிம்மம், ஆண் ஒற்றை
மிதுனம், துலாம், தனுசு, கும்பம், ஆண் இரட்டை
ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம் பெண் ஒற்றை.
மகரம், மீனம், பெண் இரட்டை
இனி ராசிகளின் நிறம் பற்றிப்பார்ப்போம் :-

| | | |
|---|---|---|
| மேஷம், சிம்மம், தனுசு | - | செம்மை நிறம் |
| ரிஷபம், கடகம், துலாம் | - | வெண்மை நிறம் |
| விருச்சிகம், கும்பம், மீனம் | - | பசுமை நிறம் |
| மிதுனம், கன்னி, மகரம் | - | கருமை நிறம் |

இராசிகளின் வடிவம் என்னவென்று அறிவோம்.

மேஷம் ஆட்டின் வடிவம், ரிஷபம் எருதின் வடிவம், கடகம் நண்டு, சிம்மம் - சிங்கம், விருச்சிகம் - தேள், மிதுனம் - ஆண், பெண் 2ம் கொண்டது. ஆண் கையில் ஒரு கோல், பெண் கையில் வீணை, ஆசனத்தில் அமர்ந்திருப்பர். கன்னி - ஒரு கையில் முளைப்பாலிகையும், மற்றொரு கையில் விளக்கும் கொண்டவள். அமர்ந்திருக்கும் நிலை. துலாம் நின்ற நிலையில் ஒரு புருஷன் தராசை தாங்கி நிற்பது. கும்பம் - தோளில் குடமேந்தி நிற்கும் ஒரு மனிதன். தனுசு - கழுத்துவரை குதிரை வடிவம் அதற்கு மேல், புருஷன் வடிவம். வில்பிடித்து நிற்கும் கோலம்.
மகரம் இடுப்புவரை சுறாமீன் வடிவம் அதற்கு மேல் மான் வடிவமாக நிற்கும் நிலை.
மீனம் இரு மீன்கள், வாலும் தலையுமாக ஒன்றுக்கு ஒன்று நேர் எதிர்ப்புறமாக நீந்துபவை.
இராசிகளின் கதிர்கள் எவ்வளவு? பார்ப்போமே.
மேஷம் - 7, ரிஷபம் - 8, மிதுனம் - 5, கடகம் - 3, சிம்மம் - 7, கன்னி - 11, துலாத்திற்கு - 2, விருச்சகத்திற்கு - 4, தனுசுக்கு - 6, மகரம்-8, கும்பம்-8, மீனத்திற்கு - 27.

இராசிகளில் நிற்பன, சுழல்வன, நிற்பனவற்றோடு சுழல்வன என்ற விவரங்களை அறிவோம்.

ரிஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம் - நிற்பன
மேஷம், கடகம், துலாம், மகரம் - சுழல்வவன
மிதுனம், கன்னி, தனுசு, மீனம் நிற்பனவற்றேடு சுழல்வன.

தவழும், பறக்கும் ராசிகள் எவை?

கடகம், விருச்சிகம் - தவழ்பவன
மகரம், மீனம் - பறப்பன

இராசிகளின் குலம்பற்றிப்பார்ப்போம்;

தனுசு, மீனம் - 2ம் அந்தணர்.
மேஷம், சிம்மம் - 2ம் க்ஷத்திரியர்.
கடகம், விருச்சிகம் - வைசியர்கள்
மிதுனம், துலாம், கும்பம் 3ம் சூத்திரர்கள்.
ரிஷபம், கன்னி, மகரம், மீனம், தாழ்த்தப்பட்டோர்.

இன்னும் மேஷம், கடகம், துலாம், மகரம் - 4ம் தாது ராசிகளாம்
ரிஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம் - 4 ம் மூல ராசிகளாம்

மிதுனம், சன்னி, தனுசு, மீனம் - 4ம் ஜீவராசிகளாம்.

இராசிகளின் திக்குகள் :- மேஷம் - கிழக்கு, சிம்மம், தனுசு - தென்கிழக்கு, ரிஷபம் - தெற்கு, கன்னி, மகரம் - தென்மேற்கு, மிதுனம் - மேற்கு, துலாம், கும்பம் - வடமேற்கு, கடகம், விருச்சிகம், மீனம் - வடகிழக்கு.

இன்னும் அவை வயது, மறுவருக்கள், விலங்கின் கொம்புகள், இராசிகளின் வடிவு, காதம், சேர்விடம், இவற்றையெல்லாம் பற்றி விவரமாக அடுத்த பாடத்தில் பார்ப்போம்.

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 7
## கோள்களின் தன்மைகள்

சென்ற பாடத்தில் ராசிகளின் தன்மைகளைப்பற்றிப் பார்த்தோம். இந்தப்பாடத்தில் கோள்களின் தன்மைகளைப்பற்றி அறிவோம். ராசிகளைப்போலவே கோள்களும், சிரோதய, பிருட்டோதய, சிரபிருட்டோதய என்ற 3 பிரிவில் அடங்கும்.

| | | |
|---|---|---|
| புதன், குரு, சுக்ரன், இராகு | - | சிரோதயம் |
| சூரியன், அங்காரன், சனி | - | பிருட்டோதயம் |
| சந்திரன், கேது | - | சிரபிருட்டோதயம் |

விழிப்பு காலம் - சிரோதய கோள்களின் விழிப்புக்காலம் பகல்
பிருட்டோதய விழிப்புக்காலம் இரவு
சிரபிருட்டோதய விழிப்புக்காலம் பகல் இரவு இரண்டும்.

நோக்கத்தின் இயல்பு : சந்திரன், குரு எதிர் நோக்கு
அங்காரகன் (செவ்வாய்) பக்கங்களில் நோக்கு
சூரியன் மேல் நோக்கு
புதன், சுக்ரன் கீழ்நோக்கு
பாம்பு, சனி சாய்வான நோக்கு

ஆண் / பெண் பாகுபாடு:

| | | | |
|---|---|---|---|
| சூரியன், செல். குரு | - | ஆண் | கோள்கள் |
| சந்திரன், சுக்ரன், ராகு | - | பெண் | |
| புதன், சனி, கேது | - | அலி | |

ஒற்றை / இரட்டை விளக்கம்.

| | | |
|---|---|---|
| சூரியன், செவ்வாய் | - | ஆண் ஒற்றை |
| குரு | - | ஆண் இரட்டை |
| சந்திரன் | - | பெண் ஒற்றை |
| சுக்ரன் - ராகு | - | பெண் இரட்டை |
| புதன், சனி, கேது | - | அலி இரட்டை |

குறிப்பு :- இராசிகளிலே அலி ராசி கிடையாது
கோள்களிலே அலி ஒற்றை கிடையாது.

சாமக்கோளில் பாம்பு என்றுதான் குறிப்பிட்டிருந்தாலும், நன்கு விளக்க ராகு, கேது வாகப்பிரிக்கப்பட்டன. ராகுவைப்பெண்கவும், சேதுவை அலியாகவும் கொள்ளலாம்.

| கோள்களின் நிறங்கள் :- | | |
|---|---|---|
| குரு | - | பொன்னிறம் |
| சூரியன் | - | நெருப்பின் செந்நிறம் |
| செவ்வாய் | - | இரத்தச்சிவப்பு |
| சந்திரன் | - | ஸ்படிகம் போன்ற வெண்மை |
| சுக்ரன் | - | பால் போன்ற வெண்மை |
| புதன் | - | பசுமை |
| சனி, ராகு | - | கருமை நிறம் |
| கேது | - | நெருப்பு, ரத்தம் அல்லாத செந்நிறம். |

| கோள்களின் கால்கள் :- | | |
|---|---|---|
| புதன், குரு, சுக்ரன் | - | 2 கால்கள் |
| சூரியன், செவ்வாய், சனி | - | 4 கால்கள் |
| சந்திரன், பாம்பு | - | பலகால்கள் |

| கோள்களின் குலம் : | | |
|---|---|---|
| சந்திரன், குரு | - | அந்தணர் |
| சூரியன், செவ்வாய் | - | க்ஷத்திரியர் |
| புதன் | - | வைசியன் |
| சுக்ரன் | - | சூத்திரன் |
| சனி, பாம்பு | - | தாழ்த்தப்பட்டோர் |

கோள்களின் வடிவு :

சூரியன் - நான்கு கோணமுள்ள சதுர வடிவு
சந்திரன் - பிறைவடிவு (குறுகிய வட்டம்)
செவ்வாய் - உடுக்கை வடிவு
புதன் - மூன்று கோணங்கள்(முக்கோணம்)
குருவுக்கு - நீண்ட வட்டவடிவம்.

சுக்கிரன் எண் கோணம். சனிக்கு சுளகு வடிவம், பாம்பிற்கு - மாலை போன்ற நீள் வடிவு

கோள்களின் வடிவம் - வேறுவகை

| | | |
|---|---|---|
| சந்திரன், செவ்வாய், சனி | - | குறுகிய வடிவு |
| புதன் குரு, பாம்பு | - | நெடியது |
| சூரியன், சுக்ரன் | - | சமமானது |

கோட்களின் கதிர்: சூரியனுக்கு 5, சந்திரனுக்கு 21, செவ்வாய்க்கு 7, புதனுக்கு 9, குருவுக்கு 10, சுக்கிரனுக்கு 16, சனிக்கு 4, பாம்புக்கு 4. கோட்களில் நிற்பன, சுழல்வன, நிற்பனவற்றோடு சுழல்வன.

| | | |
|---|---|---|
| சூரியன், சுக்ரன் | - நிற்பனவாம் | |
| சந்திரன், செவ்வாய், பாம்பு | - சுழல்வன | |
| புதன், குரு, சனி | - நிற்பனவற்றோடு சுழல்வன | |
| சந்திரன், பாம்பு | - தவழ்வன | |
| புதன் | - பறப்பன | என்ற |
| மற்றைய கோள்கள் | - நடப்பன | கொள்கை உண்டு |

சனி கோலூன்றி நடப்பான். இல்லை முடவன் போல் நடப்பான் என்ற அபிப்பிராயமும் உண்டு.

கோள்களின் ஒளிவு : சூரியனுக்கு 5, சந்திரனுக்கு 2, செவ்வாய்க்கு 14, புதனுக்கு 9, குருவிற்கு 10, சுக்ரனுக்கு 11, சனிக்கு 4, ராகுவிற்கு 4.

குறிப்பு :- இந்த ஒளிவு பற்றி சரியான விளக்கம் எந்த நூலிலும் தரப்படவில்லை. ஒளி, ஆங்கிலத்தில் (LIGHT) வெளிச்சம் என்ற பொருளில் உபயோகிக்கப்படுகிறது. அது இதற்கும் பொருந்தும். ஆனால் என் 12 வருட அனுபவங்களில் இது பற்றி எந்தப் பிரச்சனைக்கும் பதில் அளிக்க வாய்ப்பு ஏற்படவில்லை, என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். கதிர்களைப்பயன்படுத்தி சில பிரச்சனைக்கு பதில் கூறி, சரியாக இருந்தது. அதுபற்றி பின்னால் விவரமாக அறிவோம். ராசிகளின் ஒளிவு பற்றி இந்த சந்தர்பத்தில் அறிந்து கொள்வதில் தவறு ஏதும் இல்லை.

| | |
|---|---|
| மேஷம், கடகம், துலாம், கும்பம் | - தனித்தனியே 8 |
| ரிஷபம், மிதுனம், மகரம் | - 6 |
| சிம்மத்திற்கு | - 7 |
| கன்னி, தனுசு | - 11 |
| விருச்சிகத்திற்கு | - 4 |
| மீனத்திற்கு | - 27 |

கோள்களின் திக்கு :- சூரியன் கிழக்கு, சுக்கிரன் தென்கிழக்க, செவ்வாய் தெற்கு, பாம்பிற்கு தென்மேற்கு, சனிக்கு மேற்கு, சந்திரனுக்கு வடமேற்கு, புதனுக்கு வடக்கு, குருவிற்கு வடகிழக்கு.

இது தவிர ராசி, கோட்கள் இவற்றிற்கப் பொதுவான காதம் (தூரம்) சுவைகள் வயது, மறுவடுக்கள், விலங்குகளின் கொம்பு, சேர்விடம், இரவு, பகல். வருஷாதி காலகணிதம் இவை பற்றி அடுத்த பாடத்தில் பார்ப்போம்.

## சாமக்கோள் ஆரூடம்
## பாடம் - 8
## ராசி கோட்களுக்குப் பொதுவான விஷயங்கள்

சென்ற பாடங்களில் ராசிகளின் தன்மைகள், கோட்களின் தன்மைகள் இவற்றைப்பற்றி விரிவாகப்பார்த்தோம். இந்த பாடத்தில் இவையிரண்டிற்கும் பொதுவான சில விஷயங்களைப் பார்ப்போம்.

ராசி மண்டலத்தில் ஒவ்வொரு ராசிக்கும் ஒரு அதிபதி (கிரகம்) உண்டு. அதற்குரியது ராசிக்கும் பொருந்தும், அந்த அடிப்படையிலேயே சுவை, காதம், கொம்பின் வடிவு, வயது, மறுவடுக்கள் இவைகளைக் கொள்ள வேண்டும்.

முதலில் சுவையை எடுத்துக் கொள்வோம்.

சூரியனுக்கு கரிப்பு, சந்திரனுக்கு துவர்ப்பு, செவ்வாய்க்கு உறைப்பு (காரம்), புதனுக்கு உவர்ப்பு, குருவிற்கு இனிப்பு, சுக்ரனுக்கு புளிப்பு, சனி, பாம்பு இவையிரண்டிற்கும் கசப்பு.

2வது ஆக காதம் - (தூரம்)

காதம் என்பது ஏறத்தாழ 10 மைல் தூரம் என்று எடுத்துக்கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| சூரியன், புதன் | - | 8 காதம் தனித்தனியே |
| சந்திரன் | - | 1 காதம் |
| செவ்வாய் | - | 7 காதம் |
| குரு | - | 9 காதம் |
| சுக்கிரனுக்கு | - | 16 காதம் |
| சனிக்கு | - | 20 காதம் |
| ராகுவிற்கு | - | 20 காதம் அதற்கு மேலும். |

3வது கொம்பின் வடிவம் :

| | | |
|---|---|---|
| சூரியன், புதன் | - | வளைந்த கொம்பு (கோணலானது) |
| சந்திரனுக்கு | - | தட்டைக்கொம்பு- மொட்டைகொம்பு என்றும் கூறுவது |
| செவ்வாய்க்கு | - | கூரிய கொம்பு |
| குரு, சுக்ரன் | - | நெடிய கொம்பு |
| சனிக்கு | - | முறிந்த கொம்பு |
| பாம்பிற்கு | - | அறுபட்ட கொம்பு |

4வது வயது

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | - | 50 வயது |
| சந்திரனுக்கு | - | 70 வயது |
| செவ்வாய்க்கு | - | 16 வயது |
| புதனுக்கு | - | 20 வயது |
| குருவுக்கு | - | 30 வயது |
| சுக்கிரனுக்கு | - | 7 வயது |

5வது மறுவடுக்கள் :

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | - | அத்திப்பூ போல் |
| சந்திரனுக்கு | - | எருக்கம்பூ போல் |
| செவ்வாய்க்கு | - | துவரம்பருப்பு போல் |
| புதனுக்கு | - | அகத்தியிலை போல் |
| குருவிற்கு | - | ஆமணக்கிலை போல் |
| சுக்ரனுக்கு | - | புளியிலை போல் |
| சனிக்கு | - | ஊமத்தியிலை போல் |
| பாம்பிற்கு | - | ஆவாரையிலை போல் |

மறு வடுக்கள் சிறியதாக இருப்பினும் இவற்றின் சாயல் இருப்பதைக் காணலாம்.

மறுவடுக்களின் வல, இடப்பக்க விவரங்கள், காணப்படும் அங்கங்கள்:

| | | |
|---|---|---|
| சூரியன், செவ்வாய், புதன், குரு | - | வலப்பக்கம் |
| சந்திரன், சுக்ரன், சனி, பாம்பு | - | இடப்பக்கம். |

சூரியனுக்கு இடை, சனிக்கு துடை, பாம்பிற்கு கால்பகுதி, குருவுக்கு கை, புதனுக்கு கைக்கு கீழ் (அக்குள்) கையின் உள்பகுதி, செவ்வாய்க்கு முதுகு, சந்திரனுக்கு தலைப்பகுதி முகம், கழுத்து, பிடரி (கழுத்தின் பின்புறம்).

குறிப்பு :

தூரத்திற்கு வடமொழி நூல்களில் யோஜனை என்ற பதம் குறிப்பிடப்படுகிறது. 1 யோசனை 8 மைல் தூரமாகும். மற்றும் குரோசம் என்ற பதமும் குறிப்பிடப்படுகிறது. குரோசம் ஏறத்தாழ 9 மைல் தூரம். ஆனால் கிரகங்களுக்கு உரிய எண்கள் அப்படியேதான்.

| | | | |
|---|---|---|---|
| சூரியனுக்கு | 8 காதம் | - | அதாவது 80 மைல் காதப்படி |
| | 8 x 8 | = | 64மைல் யோசனைப்படி |
| | 9 x 8 | = | 72 மைல் குரோசப்படி |

இந்தக்காலத்தில் கிலோமீட்டர் கணக்கில் தூரம் குறிப்பிடப்படுகிறது. நடைமுறையில் காதம் என்பதையே கையாளலாம்.

இவற்றையெல்லாம் எப்படி நினைவில் வைத்துக்கொள்வது என்று யோசிக்க வேண்டாம். பழகப்பழக சரியாகிவிடும். சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, பிரச்சனைக்கு ஏற்ப இவற்றைப் பயன்படுத்த வேண்டும் அவ்வளவே.

---

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 9
## சேர்விடம்

சேரும் இடம் என்பது (இலக்கண) சந்தியால் சேர்விடம் என்றாயிற்று. அதாவது நஷ்டமான பொருள் அடைந்ததிசை இன்னும் ஆடு மாடு போன்ற கால்நடைகள் தவறிப்போய் சென்றவிடம். காணாமல் போனவர்கள் இருக்குமிடம் அல்லது சென்றதிசை, ஓடிப்போனவர்கள் எங்கிருக்கிறார்கள். இதுபோன்ற விஷயங்கள் எல்லாம் இதில் அடங்கும். யாத்திரை போனவர்கள் எந்தத்திசையில் சென்றிருக்கிறார்கள் என்றும் கண்டறியலாம்.

கிரகரீதியாகவும், ராசிரீதியாகவும் இவற்றைப்பற்றிய விவரங்களைப் பார்ப்போம் :

சூரியன், செவ்வாய், சனி, இவை மூன்றிற்கும் காடு.
சந்திரம், சுக்ரன், இவைகளுக்கு நீர்.
புதன், குரு, இவைகளுக்கு ஊர்.
பாம்புக்கு மூங்கில்புகர், இதுபோன்ற அடர்த்தியான செடிகள் அடங்கிய இடம் (எளிதில் புகமுடியாத இடமாகும்)

இன்னும் உறுதியாக சொல்ல கிரகங்களின் நட்பு, ஆட்சி, பகை, உச்சம் / நீசம் இந்த நிலைகளையும் பார்க்கவேண்டும்.

கிரகங்கள் நட்புநிலையில் - வீட்டிற்குள் (மனைக்குள்)
கிரகங்கள் ஆட்சிநிலையில் - ஊருக்குள்
கிரகங்கள் உச்சம் நிலையில் - ஊருக்கு வெளியே (புறத்தில்) (எக்ஸ்டென்ஷன்)
கிரகங்கள் பகை நீச்சம் நிலையில் - வெகுதூரத்தில்.

மேலும் சில விவரங்களை அறிவோம் :

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | - | சாப்பிடும் இடம், உறி. |
| சந்திரனுக்கு | - | காடிச்சால் |
| செவ்வாய்க்கு | - | குடுவை |
| புதனுக்கு | - | சுவர் |
| குருவிற்கு | - | மிடா (பெரிய வாய்கன்ற பானை) |
| சுக்ரனுக்கு | - | நீர்ச்சரகம் (ஜலக்கரையோரங்கள்) |
| சனிக்கு | - | யுத்தம் பண்ணுமிடம் (இங்கு மல்யுத்தம் செய்யும் உடற்பயிற்சி சாலையே பொருத்தமாகப்படுகிறது) |
| பாம்பிற்கு | - | புற்று |

இது தவிர மிகத் தெளிவாகவும் கூறப்படுகிறது.

| | | |
|---|---|---|
| சூரியன் - குரு | - | பூஜை வீடு, மேலும் (உயர்வான இடம், பரண்) |
| சந்திரன் - சுக்ரன் | - | நீர் |
| செவ்வாய்க்கு | - | பூமி (நிலம்) |
| புதனுக்கு | - | பாயல் |
| சனிக்கு | - | ஹோமகுண்டம், அடுப்பு, அடுக்களையில் உள்ள பானை. |

பாம்பிற்கு - மரப்பொந்து, வளை

ராசி ரீதியாகப் பார்ப்போம்

| | |
|---|---|
| மேஷம், சிம்மம், விருச்சிகம், தனுசு - | காடு |
| ரிஷபம், கடகம், மகரம், மீனம் - | நீர் |
| மிதுனம், கன்னி, துலாம், கும்பம் | ஊர் |

மேற்கண்ட விதியை பொதுவாக எடுத்துக் கொள்ளலாம். இன்னும் விரிவாகப் பார்க்கலாம்.

மேஷத்திற்கு, காடு, ரிஷபத்திற்கு கழனி (வயல்) மிதுனத்திற்கு ஊர், கடகத்திற்கு நீர், சிம்மத்திற்கு மலை, கன்னிக்கு ஊர், துலாத்திற்கு ஆறு அல்லது நதி, விருச்சிகத்திற்கு கிணறு (இறங்கும் கிணறும் இதில் அடங்கும்) வெட்டுப்பள்ளம், தனுசிற்கு தோட்டம், மகரத்திற்கு அகழி, கும்பத்திற்கு சமுத்திரம், மீனத்திற்கு சுனை (சிலர் சமுத்திரம் என்றும் எடுக்கிறார்கள்)

மிதுனத்திற்கு தோட்டம், கடகத்திற்கு வாய்க்கால், துலாத்திற்கு ஆற்றங்கரை அல்லது குளம், தனுசு, மகரம், கும்பம், மீனம் இவற்றிக்கு (கேணி) கிணறு அல்லது குளம் (தூர்ந்த குளம்) என்றும் சொல்லாம். அகழி என்றும் கூறப்படுகிறது.

இன்னும் சில இடங்களில் துலாத்திற்கு ஊர் என்றும், தனுசிற்கு தோட்டம், மகரத்திற்கு உப்பளம் அல்லது பாழ்நதி, கும்பத்திற்கு ஏரி அல்லது தாங்கல் (சிறிய ஏரி, பறவைகள் சரணாலயம் - வேடந்தாங்கல், பழவந்தாங்கல் உதாரணம்) மீனத்திற்கு சமுத்திரம்.

பாழ்நதியை - மலட்டாறு என்று சொல்லும் வழக்கமும் உண்டு. நீர் பெருக்கே வராத ஆறு மழை நீர்மட்டும் சிலசமயம் ஒடும் ஆறு.

மேஷம், தனுசு - காடு, மிதுனம், கன்னி ஊர், துலாம், மகரம், மீனம். இவைகளுக்கும் ஆறு என்றும் கூறப்படுகிறது.

நஷ்டம், முட்டி, சிந்தனை இவை மூன்றிற்கும் இவையே பொருந்தும். நஷ்ட விளக்கம் தேவையில்லை. முட்டி என்பது (கையில் மறைந்து வைக்கப்படும் பொருள் என்றும் அர்த்தம் கொள்ளவேண்டும்). இதல்லாமல் மறைந்திருக்கும் பொருள் என்றும் கொள்ள சிந்தனையில் நினைக்கப்படும் இடம் என்றாகவும் பொருள் கொள்ளவேண்டும். அதாவது சிந்தனை எந்த இடம் பற்றியது என்றறிவது.

இந்த விவரங்கள் எல்லாம் மிக விரிவானவை என்று மலைப்பும்தோன்றும். ஆனாலும் மலைக்கத் தேவையில்லை. அனுபவமும், நம் சிந்தனைத்திறனும், தெய்வானுகம் நிச்சயம் வழிகாட்டும். இது என் அனுபவத்தில் கண்ட உண்மை. கடத்தல் பொருள் சமுத்திரத்தில் அடியில் போடப்பட்டிருக்கிறது. அதிக ஆழத்தில் இல்லை. கரையோரமாகவே. அதிகமாகப் பறவைகள் நடமாடும் இடம் என்று குறிப்பிட்டுச் சொன்னேன் மிகச் சரியாக இருந்தது என்று பாராட்டினார்கள். மற்றொரு பிரச்சனையில் முக்கியமான பத்திரம் பரண் மேல் வைக்கப்பட்டிருக்கிறது என்றும், ஒரு கிழவி அதை அறி யாமல் எடுத்து பத்திரப்படுத்தி வைத்திருக்கிறாள் என்றும் கூறுவது மிகச் சரியாக இருந்தது என்று அகமகிழ்ந்து கூறினார்கள். மற்றொரு கேஸில் உங்கள் மச்சினியே நகையை எடுத்துப் போயிருக்கிறார்கள். தெற்கு திசை கடற்கரை ஒரம் ஊர். சுமார் 700 மைல் தூரம் என்று கூறியதும் சரியாக இருந்தது. பெருமைக்காக இதை எழுதவில்லை சாமக்கோளின் அருமையை நீங்கள் புரிந்து கொள்ளவே இதை எழுதுகிறேன்.

எவ்வளவு துல்லியமாகச் சொல்லமுடியும் சாமக்கோளில். இதுதான் சாமக்கோள் ஆருடம், ஐயா.

---

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 10
## காலநிர்ணய கணிதம்

ஜோதிட சாஸ்திரத்தில் வாழ்க்கையில் பல நிகழ்ச்சிகளை முன்கூட்டியே அறிய முடியும். உதாரணமாக இந்த வயதில் இந்த மாதத்தில் இந்த தேதியில் வெளிநாடு செல்வார் என்றெல்லாம் கூறலாம். திருமணமும் இப்படி சொல்லாம் இந்த ஆண்டு வேலையில் அமர்வான் என்றும் கூறலாம் இது கடினம் என்று பலர் நினைப்பார்கள். ஏன் ஜோதிடர்கள் உள்படதான். ஆனால் தசாபுத்தி, அந்தரம், கோசாரம் இவற்றையெல்லாம் கணக்கில் எடுத்து அலசினால் நிச்சயமாகக் கூறமுடியும்.

இதே போல்தான் சாமக்கோள் ஆருடத்திலும் கால நிர்ணய கணிதமும். தசாபுத்தி, அந்தரம், கோசாரம் என்றெல்லாம் பார்க்காவிட்டாலும், சில அடிப்படை விதிகளைப் பின்பற்ற வேண்டும். அவை யாவை? பார்ப்போம். இந்த விதிகள் சாமக்கோள் ஆருடத்திற்கு மட்டுமே பொருந்தும் என்றால் மிகையாகாது.

கோட்களுக்கு உள்ளவையே ராசிக்கும் பொருந்தும். ஏனெனில் 12 ராசிகளுக்கும் கிரக அதிபர்கள் உண்டு. சூரியன், சந்திரன் இவையிரண்டும் சிம்ம, கடகராசிக்கு அதிபர்கள். மற்ற 5 கிரகங்களும் தலைக்கு 2 ராசிகளுக்கும் அதிபர்கள் ஆகிறார்கள். ராகு, கேதுகளுக்கு ராசிகள் இல்லை. ஏற்கனவே ஜோதிடர்கள் அறிந்த விஷயங்களே இவைகள்.

சாமக்கோளில் கீழ்க்கண்டபடி கால நிர்ணயம்

| | | |
|---|---|---|
| சனி, பாம்பு | - | தனித்தனியே ஒரு ஆண்டு |
| சூரியனுக்கு | - | ஒரு அயனம் (6 மாதம்) |
| புதனுக்கு | - | 2 மாதம் |
| குருவுக்கு | - | 1 மாதம் |
| சுக்ரனுக்கு | - | 1 பட்சம் (15 நாள்) |
| செவ்வாய்க்கு | - | 1 தினம் |
| சந்திரனுக்கு | - | 1 முகூர்த்தம் |

ஏற்கனவே கிரகங்களின் கதிர்கள் பற்றி அறிவோம். இதையும் சேர்த்துப் பார்த்தால் இன்னும் விவரமாகப் பலன் சொல்லாம், காலத்தைப் பொறுத்தவரையில்.

உச்சகோட்களுக்கு அவற்றின் கதிர்கள் எத்தனையோ, அத்தனை நாழிகைகள் ஆட்சி கோட்களுக்கு அவற்றின் கதிர்கள் படி நாட்கள். நட்பு கோட்களுக்கு அவற்றின் கதிர்படி மாதங்களும். பகை, நீச்சக் கோட்களுக்கு அவற்றின் கதிர்படி வருஷங்களாம்.

இன்னொரு வகையாகவும் காலம் நிர்ணயம் செய்யலாம்

1. சந்திரன் நிற்கும் ராசியிலிருந்து உதயராசி வரை எண்ணிக்கண்ட தொகையை நாளாகக் கொள்ளல் வேண்டும்.

2. சந்திரன் நின்ற நட்சத்திரத்திலிருந்து உதயம் எந்த நட்சத்திரத்தில் விழுகின்றது என்ற பார்த்து கணக்கிடலாம்.

3. சந்திரன் ராசி அதிபதிக்கும், உதயாதிபன் நிற்கும் ராசி அதிபதிக்கும் உள்ள ராசிகளை எண்ணி நாளைச் கணக்கிடலாம்.

4. சந்திரன் எந்த நவாம்ச ராசியில் நிற்கின்றானோ அதிலிருந்து உதயம் வரை கணக்கிடவும் செய்யலாம்.

குறிப்பு :

2வது விதியில் நட்சத்திரங்கள் வரிசையாக எண்ணிக்கொண்டு போக வேண்டும் ஒரே நாளில் 2 நட்சத்திரங்கள் வரும். அதனால் மலைக்க வேண்டாம். இந்த விதிகள் சுலபமாக நினைவில் வைத்துக் கொள்ள சுலபமான வழிகள்.

1. ராசி முதல் ராசி
2. நட்சத்திரம் முதல் நட்சத்திரம்
3. ராசி அதிபதி முதல் உதயராசி அதிபதி
4. சந்திர நவாம்ச அதிபதி முதல் உதயம்.

அதாவது சந்திரனையும், உதயத்தையும் 4 வகைகளில் இணைத்து கால நிர்ணயம் செய்ய நாட்கணக்கில் எந்த நாளில் ஆருடபலன் கைகூடும் என்பதைக் கண்டுபிடிப்பது.

அடுத்தபடியாக இடபோது தயத்தை வைத்து வலிவு பெற்ற கிரகத்தைக்கொண்டு காலநிர்ணயம் செய்ய வேண்டும் என்ற விதி சினேந்திரமாலையில் கூறப்பட்டிருக்கிறது. இடபோதுதயம் - ரிஷப (இடம்) உதயம் ஆகும். அதில் விளக்கம் கூறுமிடத்து ஆய்ந்த உதயம் என்ற சொற்றொடரையும் இணைத்தால், இடம், போது, உதயம் என்று விரிவடையும். இடம் என்பது ஊரையும் (Place), போது என்பது நேரத்தையும் (Time), (பொழுது என்ற சொல் திரிந்து வழக்கியலில் போது என்று மருவியது) என்பது அந்த அட்சாம்ச, ரேகாம்சத்தின் நேரத்திற்கு உதயமாகும் லக்னத்தையும் குறிக்கும் (LATITUDE / LONGITUDE).

நடைமுறையில் இதுதான் சிறந்தது. இதையே பின்பற்ற வேண்டும். எல்லா அட்சாம்சங்களிலும் பலிக்கிறது. மலேசியா, ஐரோப்பா, அமெரிக்கா முதலிய தேசங்களில் இந்த முறையைப் பின்பற்றியே வந்தேன். நல்ல பலன் கிடைத்தது. இல பலபகுதிகளுக்கு சென்றபோது இன்னும் முறையே என்னால் அனுசரிக்கப்பட்டது. பாட்டு ஆய்ந்த உதயத்தைச் கொண்டு என்ற சொற்களுக்கு இதுவேதான் சரியான விளக்கம்.

மேலும் பிரச்னாருட பல நிர்ணயம் என்ற வடமொழி நூலில் காரியஸித்தியே என்ற தலைப்பில் 7 விதிகள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றையும் பின்பற்றி கால நிர்ணயம் கணிதம் செய்ய முடியும். அந்த 7 விதிகள் அப்படியே தரப்படுகிறது.

1. 10க்குடையவன் லக்னாதிபன் இவர்கள் லக்னத்திலிருந்தாலும்
2. லக்னாதிபன் 10க்குடையவன் இவர்கள் 10ம் இடத்தில் இருந்தாலும்
3. லக்னத்தை லக்னாதிபனும், 10 மிடத்தை 10க்குடையவனும் பார்த்தாலும்
4. 10க்கு டையவன் லக்னத்தை அடைந்து லக்னாதிபனைப் பார்த்தாலும்
5. லக்னாதிபன் 10மிடத்தையடைந்து, 10க்கு உடையவனைப் பார்த்தாலும்
6. லக்னாதிபன் 10மிடத்தையும் 10க்குடையவன் லக்னத்தைப் பார்த்தாலும்
7. 10க்குடையவன் லக்னாதிபனையும் லக்னாதிபன் 10க்குடையவனைப் பார்த்தாலும்

காரியம் ஸித்தியாகும்.

காலநிர்ணய கணிதத்தில் அனுபவமே கைகொடுக்கும். ஆழ்ந்த சிந்தனையும், கிரகங்களும், தெய்வமும் நமக்கு நிச்சயம் வழிகாட்டும் இது என் அனுபவம்.

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 11
## காலநிர்ணய உதாரணம்

உள் கட்டத்தில் ஏன் அன்றைய கிரக நிலைகளைப் போடவேண்டும்? அது தேவையற்றது போலவும் தோன்றும். காரணம் நாம் பலன் சொல்லும்பபோது சாமக்கோள்களின் அடிப்படையிலேயே அதன் நிலைகளைக் கவனித்த பலன் சொல்லுகிறோம். எனவே உள்கட்ட கிரக நிலைகள் தேவையில்லை என்றும் தோன்றும்.

ஆனால் கால நிர்ணயம் சொல்லும்போதும், இன்னும் சில விஷயங்களை விளக்கிச் சொல்லவும் உள்கட்ட கிரக நிலைகள் அவசியப்படுகின்றன. அனுபவம் இதை நன்கு உணர்த்தும். சமயம் வரும் போது இன்னும் விளக்கமாகச் சொல்கிறேன். தற்சமயம் ஒரு உதாரணம் கொண்டு மட்டும் விளக்குகிறேன்.

மேலும் எந்த ஆருடப் பிரச்சனையாய் இருந்தாலும் அப்போதைய சந்திரன் நிலை தெரிய வேண்டும். அந்த ரீதியிலும் உள்கட்ட கிரக நிலைகள் அவசியம். உள்கட்ட நிலைகள் கோசாரம் அல்ல. கால நிர்ணயம் செய்யப் பெரிதும் உதவும். அதில் ஐயமில்லை.

உதாரணத்திற்கு வருகிறேன். 6-7-83 புதன் கிழமை மதியம் 11 மணி 59 நிமிஷம் 45 செகண்டுகளுக்கு ஒரு பிரச்னை என்னிடம் வந்தது. காலேஜில் அட்மிஷன் சம்பந்தமான பிரச்னை. பையனுக்கு மாலை நேர வகுப்புகளில் தான் இடம் தந்துள்ளனர் (Evening College) - அதை வழக்கம் போல் கல்லூரியில் மாற்ற முயற்சிகள் ( Regular College Day Scholar) - செய்து வருகிறோம். அது நிலைவேறுமா என்பதே பிரச்னை. என்றனர் வந்தவர்கள். வந்தவர்களில் ஒருவருக்கு ஜோதிடம் ஓரளவு தெரியும். சாமக்கோளில் முடிவு தெரிந்துகொண்டு போக வந்திருந்தார். புதன்கிழமை ஆயிற்றே 12-1 ராகுகாலம். எனவே 12க்குள் சாமக்கோள் ஆருடக் கட்டத்தைப் போடுங்கள் என்று துரிதப்படுத்தினார் என்னை.

நானும் நிலைமையை உணர்ந்து கட்டத்தைப் போட்டு மீனம் என்று ஆருடலக்னத்தைக் குறித்துக் கொண்டேன் . 11 - 59 - 45க்கு மேல் ஆகிவிட்டதால் 12 மணிக்கு உள்ள சாமக்கோள் கட்டத்தையே போட்டேன்.

உள்கட்டம் அன்றைய கிரக நிலை
வெளிக்கட்டம் சாமக்கோள் ஆருட நிலை

| | | பாம்பு | | மதி | |
|---|---|---|---|---|---|
| கதிர் | ஆருடம் | சந் | | சூரி, ராகு செவ், புத | மதி |
| | | 6-7-1983 புதன் பகல் 11.59 | | | மந் |
| சேய் | | | | | |
| பொன் | கவிப்பு கேது | குரு உத | சனி | | புகர் |
| | | | மால் | | |

உதயம் விருச்சிகம், சிரோதயம் ஸ்திரம் அதன் அதிபன் செல்.உச்சம் 3ம் வீட்டில் பெரிய இடத்து சிபார்சும் உண்டு. அனுகி ஏற்படும் செய்து இருக்கிறீர்கள் என்றேன். சரி 100% உண்மை என்றனர். ஆருடம் உபயராசி. அங்கேயே சூரியன் சுக்ரன் வேறு பார்வை. உதயத்திற்கு 5-ல் பாவியான சூரியன் . புகர் நீச பார்வை நஷ்டமில்லை. காரிய வெற்றி உறுதி என்றேன்.

எப்போது என்றார் பெரியவர் ஆவலோடு, சந்திரன் மேஷத்தில் உதயம் வரை 8 ராசிகள் ஒரு ராசிக்கு 2 ¼ நாள் விதம் 20 நாட்கள் எனவே 20 நாட்களுக்குள் கண்டிப்பாக அவன் கல்லூரிக்கு வழக்கம் போல் போவான் என்றேன். அவன் ரெகுலர் காலேஜூக்கு செவ்வாய்க்கிழமை முதல் போனால் ஆச்சரியப்படுவதற்கில்லை என்றேன். அநேகமாக 19ம் தேதியாய் இருக்கும் என்று பகர்ந்தேன்.

தேதியையும் கிழமையையும் குறித்துக் கொண்டார்கள்.

அதே போல் 18ம் தேதி மாலை மகிழ்ச்சியுடன் என்னை வந்து சந்திந்து பீஸ் இன்று காலை கட்டிவிட்டோம். நாளை முதல் அவன் காலேஜ் போகிறான். எல்லாரையும் போல வழக்கம் போல என்று தெரிவித்தும் சென்றார்.

உள்கட்ட சந்திர நிலையாலேயே கால நிர்ணயம் செய்யமுடிந்தது இப்போது உள்கட்ட கிரக நிலைகள் தேவைதானே. மற்றொரு சந்தர்ப்பத்தில் வியாபார சம்பந்தமான பிரச்னையில் உள் கட்டத்தில் 4 கிரகங்கள். வெளிக்கட்டத்தில் ஒரே ஒரு கிரகம் மட்டும். எனவே ஐந்து பார்ட்டனர்கள் . 4 பேர் கணக்கில். கூட ஐந்தாவது பேர்வழி கணக்கில் கொண்டு வரப்படவில்லை. ஆனால் அவருக்கு வாபம் போகிறது. அவரும் கூட்டாளியே என்றேன்.

இது அவர்களுக்கு மட்டுமே தெரிந்த இரகசியம். முதலில் சம்மதிக்கவில்லை நன்றாகப் பாருங்கள் என்று கூறி ஆழம் பார்த்தனர். நானே கிரகங்கள் பொய் சொல்லாமல் உண்மையையே எடுத்துக்காட்டும். 5 பேர்கள் பார்ட்டனர்கள் இல்லையென்றால் ஜோதிடம் சொல்லிப் பயன் இல்லை என்று பேனாவை மூடி வைக்க கடைசியில் வழிக்கு வந்து உண்மையை ஒப்புக்கொண்டனர். இந்த இரகசியம் எப்ப கண்டுபிடிக்கப்பட்டது என்று மிகவும் வியந்தனர். அதுதான் சாமக்கோள் ஆருடத்தில் மகிமை புரிகிறதா?

பல பேர் சாமக்கோள் ஆருடத்தில் ஆர்வம் காட்டுவது பற்றி மகிழ்ச்சி குழப்பங்கள் ஏற்பட்ட பின்பே தெளிவும் ஏற்படும். புதிதாக ஒன்றைக் கற்கும் தங்களுக்கு குழப்பம் ஏற்படவே செய்யும்? அப்படியே எல்லாம் தெற்றென விளங்கிடுவதும் இல்லையே.

மேலும் புராதன ஜோதிடத்தை (Traditional Astrology) குறை கூறக்கூடாது. அந்த முறையில் தேதி, நேரம் எல்லாம் கூறலாம். அப்படி கூறியும் வந்திருக்கிறார்கள். விஷயத்திற்கு வருவோம்.

உள்கட்டம் ஸ்திர சக்கரம். வெளிக்கட்டம் சாமக்கோள் சக்கரம். ஸ்திர சக்கரம் ஏன்? 4-வருஷக் கிரகங்கள். 4 மாத கிரகங்கள், நித்ய கிரகமான சந்திரன் ஆகிய 9ம் அடங்கியது. சந்திரன் நிலைதான் மாறும் தினமும்.

4 வருஷக் கிரகங்கள் : சனி, ராகு, கேது, குரு.
4 மாதக் கிரகங்கள் : சூரி, செவ், புதன், சுக்.

நித்ய கிரகம் : சந்திரன்.

சாமக்கோள் ஆருடத்தைப் போட்டு இந்தச் சக்ரத்துடன் இணைத்துப் பலன் செய்ய வேண்டும்.

---

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 12
## சில விளக்கங்கள்

அன்பார்ந்த சாமக்கோள் ஆருட அபிமானிகளே, அருமை மாணவர்களே என் குருநாதர்கள் சார்பிலும், என் சார்பிலும் முதற்கண் நல்லாசிகளைத் தெரிவித்துக்கொள்கிறேன். புரட்டாசி மாதத்தில் (இம் மாதம்) குருப்பெயர்ச்சி. குரு துலாத்திற்கு வருகிறார். குருபகவான் எல்லா நலன்களும் நல்கப் பிராத்திக்கிறேன்.

10 பாடங்கள் முடிந்து கால நிர்ணய கட்டம் வரை வந்துவிட்டோம். கால நிர்ணயத்திற்கு பாடம் 11 உதாரணமாக அமைகிறது. இன்னும் அவ்வப்போது கால நிர்ணயம் பற்றிய சில விளக்கங்கள் உதாரணத்துடன் வரும் என்பதை தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். இன்னும் 39

பாடங்களில் பல விஷயங்களை அறியப்போகிறீர்கள். ஆஹா! இவ்வளவு அருமையான ஆருடமா என்று பாராட்டுவீர்கள்.

பல மாணவர்கள் கற்கும் ஆவலில், 50 பாடங்களையும் ஒன்றாகச் சேர்த்து அனுப்பப் கோரி கடிதம் எழுதி உள்ளனர். இன்னும் சிலர் நேரிலேயே வந்தும் கேட்டுவிட்டனர்.

இது சம்பந்தமான என்னுடைய கருத்துக்களைத் தங்கள் முன் சமர்ப்பிக்கிறேன். 50 பாடங்களையும் ஒரு சேர அனுப்புவது சாத்தியமில்லை. காரணம் ஒவ்வொன்றாகப் படித்து, நீங்கள் அதில் தேர்ச்சியடைய வேண்டும் என்பதே. எனவே இந்தப் பாடத்திட்டத்தை மாற்றுவது சாத்தியமில்லை. மேலும் எல்லோராலும் ஒரே சமயத்தில் 500ரூ பணம் அனுப்ப முடியாது என்பதையும் கருத்தில் கொண்டுதான் 10 தவணைகள் என்று தீர்மானிக்கப்பட்டது.

மேலும் இந்த ஆருடம் பலன் சொல்லும்போது, பலன் தவறவே கூடாது. அதுதான் இதன் பெருமை. தவறவும் தவறாது. நூற்றுக்கு நூறு சரியாக இருக்கும். என் அனுபவம் இது.

எனவே இது நிதானமாகப் படித்து பல விதிகளை நினைவில் வைக்க வேண்டிய சாஸ்திரம். சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும் என்று பழமொழி கேட்டிருப்பீர்கள். (மனச்) சட்டியில் (விதிகள்) இருந்தால் ஆருடம் சொல்லும் போது (வாய்என்ற) அகப்பையில் வரும். வந்துவிடும். இதில் ஐயம் வேண்டாம். சில சமயம் தானாகவே தங்குதடையின்றி வந்துவிடும். என் அனுபவத்தின் அடிப்படையிலேயே இதை எழுதுகிறேன்.

சில குறிப்புகளும் தருகிறேன்.

1. தினந்தோறும் டி.வி. அல்லது ரேடியோ மூலம் கைக் கெடியாரத்தைச் சரி செய்து கொள்வது அவசியம்.
2. ஆருடம் கேட்கும் சமயத்தில் நேரத்தை கவனிப்பது அவசியம் . அதைச்சரியாக குறித்துக் கொள்ள வேண்டும்.
3. உள் கட்டத்தில், கேட்கும் நேரத்திற்கு கிரகங்களைப் போட வேண்டும்
4. வெளிக்கட்டம் பாவம். உள்கட்டம் பாவ நிர்ணயம், உள்கட்டம் கால நிர்ணயம் செய்ய வழிகாட்டும்.
5. சில சமயம் வெளிக்கட்டமே பாவ நிர்ணயம் காட்டும். அதாவது என்ன காரியத்திற்காக வந்திருக்கிறார்கள் என்று. உச்சியால் சிந்தனை என்ற பாடத்தில் இது பற்றி விளக்கம் பெறலாம்.

6. நீங்கள் பார்க்கும் ஆருடங்களையெல்லாம் பத்திரப்படுத்தி வைப்பது அவசியம். பின்னால் திறமை வளரும் பார்க்கப்பார்க்க.
7. ஒவ்வொரு ஆருடத்திலும் தேதி, கிழமை, நேரம், ஊர் இருப்பது அவசியம்.

இந்த ஆருடத்தில் 10 நிமிஷங்களுக்கு மேல் வேலையில்லை. பலன் சொல்லி முடித்து விடலாம். மேலும் ஆருடம் கேட்க வருகிறவர்கள் பிரச்சனையைச் சொன்னால் போதும். சிலசமயம் அவர்கள் எதற்கு ஆருடம் கேட்க வந்திருக்கிறார்கள் என்றே சொல்லி விடலாம்.

மேலும் வந்தவர்கள் ஒத்துழைப்பு தேவையில்லை. அவர்கள் ஏதும் கூறாமலே பல விஷயங்களை நாமே சொல்லிவிடலாம். சொல்லி விடமுடியும். என் அனுபவத்தில் பல சமயங்களில் வந்தவர்கள் பிரமித்தோ அல்லது மலைத்தோ போய் இருக்கிறார்கள். அதன் விளைவாக நீங்கள் ஒரு யட்சிணியை வசப்படுத்தி வைத்துக்கொண்டு சொல்கிறீர்கள் என்றும் கூறியிருக்கிறார்கள். அதெல்லாம் ஏதுமில்லை என்றாலும் நம்ப மறுக்கிறார்கள். அவ்வளவு துல்லியமாகப் பலன் சொல்ல முடியும்.

அடுத்தடுத்து சில நிமிஷ நேரங்களில் வெவ்வேறு விதமான பிரச்சனைகள் கேட்டாலும், துல்லியமாகப் பதில் கூறமுடியும். நாம் கவனிக்க வேண்டியது ஜாமம் மாறிவிட்டதா? உதயம் மாறிவிட்டதா என்பதே, சில சமயம் அவர்கள் கேட்கும் ஆவலில் இடம் மாறியும் அமரலாம். அப்போது ஆருடம் மாறுமில்லையா? அதையும் கவனிக்க வேண்டியது அவசியம். மேலும் 6 மாத காலம் வரையில் ஒருவருக்கு 12 பால பலன்களும் இந்த ஆருடத்தில் மூலம் கூறமுடியும். அப்படி பலபேருக்கு கூறி, அவர்கள், திருப்தியடைந்து, மீண்டும் வந்து இன்னும் ஒரு 6 மாதம் அல்லது 3 மாதங்களுக்குப் பலன் கேட்டுப் போகிறார்கள்.

இன்னும் விளையாட்டுப் போட்டிகளில் எந்த கட்சி ஜெயிக்கும் என்றும் கூறலாம் கிரிக்கட், கால்பந்து. கபடி, கூடைப்பந்து இதுபோன்ற விளையாட்டுகளில் யார் ஜெயிப்பார்கள் என்று கூறலாம். சரியாகப் பலித்திருக்கிறது. மேலும் குதிரைப் பந்தயத்திற்குப் இந்த ஆருடத்தைப் பயன்படுத்தி நல்ல பலனும் கண்டிருக்கிறேன் என்றால் மிகையாகாது. ஒரு ஆஸ்திரேலிய ஜோதிடருக்கு இதுபற்றிய குறிப்புகள் கொடுத்து பரீட்சித்துப் பார்க்கச் சொன்னேன். 90 கேஸ்களில் 89 கேஸ்சில் வெற்றியடைந்தாக எழுதியிருந்தார், ஏறத்தாழ 36,600 ரூபாய் சம்பாதித்தாகவும், என் காணிக்கையாக 3,660 ரூபாயும் அனுப்பியிருந்தார். கொடைக்கானல் டி.வி. நிலையம் ஆரம்பித்த அன்றே ஒரு கறுப்பு வெள்ளை டி.வி

வாங்கினேன், அந்தப் பணத்தைக் கொண்டு, சாமக்கோள் ஆருட டி.வி. என்று காரணப்பெயரும் சூட்டிவிட்டனர் என் குழந்தைகள் . நானே சென்னை, பெங்களூர் ரேஸ்களில் சாமக்கோள் ஆருடத்தைப் பரிட்சை செய்து வெற்றியுங் கண்டிருக்கிறேன். ஆனால் ரேஸில் விளையாடப் போகமாட்டேன்.

இந்த ஆருடத்தினால் தர்ம சங்கடமும் ஏற்பட்டிருக்கிறது. அதாவது களவு போன பொருள் பற்றி கேட்கும் போது பல விவரங்கள் துல்லியமாக கூறப்பட்டதில், பொருளை இழந்தவர்கள் அதை மீட்கும் ஆவலில் காவல் துறையினரிடம் இந்த விவரங்களை எல்லாம் கூறிவிட்டனர். அதன் விளைவாக காவல் துறையினர் என்னைச் சந்தேகக் கண்களோடு பார்த்து, விசாரிக்கவும் செய்தனர். என் ஆபீஸிற்கு வந்து அவர்கள் வாதம் என்னவென்றால், நீங்கள் திருட்டுப்போன பொருட்களைப் பற்றியும், திருடனைப் பற்றியும் விவரங்கள் கூறும்போது திருடர்களுக்கு இது மாதிரி இந்த இடத்தில் திருட பொருள்கள் கிடைக்கும் என்று ஏன் சொல்லித்தரமாட்டீகள். நாங்கள் சந்தேகப்படவே செய்வோம் என்று. என் தர்மசங்கடத்தை உணர்ந்தேன். வந்த காவல்துறை அதிகாரிகளுக்கு என்னைப் பற்றி நன்கு தெரியும். மேலும் நான் மாஜி விமானப்படை ஆபீஸர் என்றதாலும், "என் ஸார் உங்களுக்கு இந்த வம்பு? நாங்கள் பார்த்துக்கொள்கிறோம் அதையெல்லாம்" என்றார்கள். அதை ஒரு எச்சரிக்கையாக எடுத்துக்கொண்டு அன்று முதல் திருட்டுக் கேஸ்களுக்கு நான் ஆருடம் சொல்வதை நிறுத்திவிட்டேன். எனவே நீங்கள் திருட்டு கேஸ்களுக்கு சாமக்கோள் ஆருடம் சொல்லவேண்டாம். அதனால் பல வீண் தொல்லைகள் ஏற்படும் என்றும் எச்சரிக்கிறேன். அனுபவசாலி என்ற முறையிலும், ஆசான் என்ற முறையிலும், மேலும் கற்பு நிலைப்பற்றிக் கேட்கும் போதும் எச்சரிக்கை மிக, மிக அவசியம். இதனால் ஒரு குடும்பம் சீர்குலைந்து போகலாம். எனவே அதுபற்றி சொல்லாமல் இருப்பது நலம். இவையெல்லாம் உங்கள் நன்மை கருதியே எழுத நேரிடுகிறது.

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 13
## தாது மூல சீவன்

காலம் சென்ற ஏ.கே. அருணாசலம்.
அல்லியந்தல் - 604 503.

உதயம் ஆருடம் கவிப்பு இம்மூன்றிலும் கேட்பவர் சிந்தனையை, நட்டத்தை, இறப்பு நிகழ்வு எதிர் ஆக முக்காலத்துக்கும் யூகித்து கூறப்படுகிறது. அதன் விளக்கம் இங்கு தரப்படுகிறது. அபிமானிகள் பிரதிகளை ஒழுங்காக வைத்திருந்து கவனித்துக் கொண்டு வந்தால் துல்லியமாக ஆய்வு செய்ய வழியாகும். தாது ராசிகள் மேஷம், கடகம், துலாம், மகரம். மூல ராசிகள் ரிஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம். ஜீவ ராசிகள் மிதுனம், கன்னி, தனுசு, மீனம், தாது கிரகங்கள் அங்காரகம், சனி, பாம்பு, சூரியன், சந்திரன் இரண்டு மாத்திரம் ஆட்சியில் தாது கிரகங்கள், கன்னியில் புதன், மூலக் கிரகங்கள் சூரியன், சந்திரன், சுக்கிரன், சீவக் கிரகங்கள், புதன், வியாழன்.

தாது ராசியில் தாது கிரகங்கள் நின்றால் நோக்-
கினால் கவிப்பு ஆனால் தாது.
மூல ராசியில் மூல கிரகங்கள் நின்றால் நோக்-
கினால் கவிப்பு ஆனால் மூலம்.
சில ராசியில் சிவ கிரகங்கள் நின்றால் நோக் -
கினால் கவிப்பு ஆனால் சீவன்.

உள்ளது உள்ளபடியே இந்தவகை உதாரணம் விரிச்சிக ராசியில் சுக்கிரன் நேர்ந்தால் மூலம் விர்ச்சிகம் அங்காரகள் பூ; அதில் நின்ற சுக்கிரனுக்கு காய் இரண்டும் மூலவர்கமே. இதே மாதரி மற்றவை தாது ராசியில் மூலம் மூல ராசியில் சீவன் சிவராசியில் தாது இப்படி மாறி வருதலின் விளக்கம் கீழே தரப்படுகிறது.

தாதுமுலங் கூடிற் சிவனுந்
தாதுவோடாகிற் லருமுலந் - தாதுவா
மூலமுஞ் சிவனு மூன்று முடனாகிற்
சால வலிதறிந்து சாற்று

உதயமோ ஆருடமோ பார்க்கவேண்டிய ராசியை நிர்ணயித்து உள்ள கிரகங்கள் அதிபதி கிரகம் பார்வைகிரகம் அடைந்த இடம் அனைந்தையும் தெரிந்து யூகித்து உணரவேண்டும். அவைகளின் விவரம் வருமாறு.

| ஆருடம் உதயம் | நோக்கு | அடைந்த - இடம் (கவிப்பு) | கண்ட முடிவு |
|---|---|---|---|
| தாதுராசி | மூலக்கோள் | மூலராசி | சீவன் |
| மூலராசி | தாதுக்கோள் | தாதுராசி | சீவன் |
| தாது தாசி | சீவக்கோள் | சீவராசி | மூலம் |
| சீவராசி | தாதுக்கோள் | தாதுராசி | மூலம் |
| மூலராசி | சீவக்கோள் | சீவராசி | தாது |
| சீவராசி | மூலக்கோள் | மூலராசி | தாது |

| 2 உதயம் ஆருடம் | வலிது நோக்கில் | |
|---|---|---|
| தாது ராசியாய் | மூலக்கோள் | மூலசீவன் |
| | சீவக்கோள் | சீவமூலம் |
| மூல ராசியாய் | சீவக்கோள் | சீவதாது |
| | தாதுச்கோள் | தாதுசீவன் |
| சீவராசியாய் | தாதுக்கோள் | தாதுமூலம் |
| | மூலக்கோள் | மூலசீவன் |

அதிபதிக் கோள்நிலை

| | | |
|---|---|---|
| 3 தாது ராசியில் | மூலக்கோள் | மூலசீவன் |
| மூல ராசியில் | சீவக்கோள் | சீவதாது |
| சீவராசியில் | தாதுக்கோள் | தாதுமூலம் |

4. உதயராசி கிரகம் நின்றநோக்கில்
தாதுவாய் மூலக்கோள் தாதுராசியில் தாது
மூலராசியாய் மூலக்கோள் மூலராசியில்
மூலம். மற்றை ராசியில் சீவன்
சீவராசியில் சீவக்கோள் சீவராசியில் சீவன்
மற்றை ராசியில் மூலம்.

5. அதிபதிக் கோள்நிலை

தாதுக்கோள் மூலராசியில் நிற்கவரும் தாது மூலதாது
சீவராசியில் நிற்கவரும் தாது சீவதாது
மூலக் கோளாய் சீவ ராசியில் நிற்கவரும் மூலம் மூலசீவன்
தாது ராசியில் நிற்க வரும் தாது தாதுமூலம்
சீவக்கோளாய் தாது ராசியில் நிற்க வரும் சீவன் தாது சீவன்
மூலராசியில் நிற்க வரும் தாது மூல சீவன்

குறிப்பு:-

பிளாஸ்டிக், பாலியஸ்டர், பாலிதீன் இன்னும் இதுபோன்ற செயற்கை பொருள்களால் செய்யப்பட்ட பொருள்களை உபயோகிக்கிறோம் இந்த பாடம் எவ்வளவு தூரம் அதற்கு உதவி செய்யும் என்று கேட்காதீர்கள். அவர்கள் வாழ்ந்த காலம் வேறு. நாம் வாழும் காலம் வேறு இருப்பினும் சிறுதுரும்பும் பல்குத்த உதவும் என்ற பழமொழியை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அவ்வளவே.

---

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 14
## எதற்காக வந்திருக்கிறார்கள்?

10.10.1993 ஞாயிறு பிறபகல் உணவிற்குப் பின் ஓய்வெடுத்து தூங்கிக் கொண்டிருந்தேன். சுமார் 3.30 மணிக்கு குரல் அழைப்பு (டெலிபோன்) மணி அடித்தது. எடுத்துப் பேசியதில், ஐயா சேலத்திலிருந்து வருகிறோம். உங்கள் சாமக்கோள் ஆருட மாணவர்களில் ஒருவன் நான். சில விளக்கங்கள் பெறவும், பலன் கேட்பதற்கும் வந்திருக்கிறோம். உடன்வரமுடியுமா? என்ற வேண்டுகோளையும் விடுத்தனர். உடனே வருவதற்கில்லை. மாலை டீ குடித்துவிட்டு 4.30 மணிக்கு வந்துவிடுகிறேன் . காத்திருக்கவும் என்று பதில் கூறிவிட்டு, மீண்டும் உறங்கத் தொடங்கினேன். சரியான தூக்கம் வரவில்லை. 4 மணிக்கு எழுந்து, முகம், கைகால் கழுவிவிட்டு மணியைப் பார்த்தேன். மணி 4.03. எதற்காக வந்திருக்கிறார்கள் என்று பார்க்கமனம் தூண்டியது. கட்டத்தைப் போட்டு,

சாமக்கோள ஆருடத்தை போட்டேன. அதன விவரம வருமாறு.

இடம் திருச்சி, தேதி 10.10.93 (ஞாயிறு), நேரம் மாலை 4.03. சூரிய உதயம் 6.07, சூரிய அஸ்தமனம். 5.57. என் வீட்டிலிருந்து என் அலுவலகம் இருக்கும் திசை மேஷ ராசி. எனவே ஆருடம் மேஷமாக நிர்ணயிக்கப்பட்டது. (என் அலுவலகத்திற்கு கீழே உள்ள டெலிபோன் கட்டணம் கட்டிப் பேசும் கடையிலிருந்து அவர்கள் பேசினார்கள்)

பகல் மானம் (அஹஸ்) 17.57-6.07 11.50 அல்லது 710 நிமி. இதை 12ல் வகுக்க 710 / 12 59 2/12 அல்லது 59 நிமி. 10 செக. 10 செக. ஐ தள்ளிவிட்டு ஒரு உதயம் 59 நிமி. சூரிய உதயத்துடன் அதை கூட்ட 7மணி 6 நிமி. தமிழ் தேதி புரட்டாசி 24 நாளைக்கு 2 நிமி. விதம் 24x2=48 நிமி. இதை 7.06லிருந்து கழிக்க 6.18. அதாவது காலை 6.18 உடன் கன்னியாலக்னம் முடிவடைகிறது. 7.17 துலாம், 8.16 விருச்சிகம், 9.15 தனுசு, 10.14 மகரம், 11.13 கும்பம், 12.12 மீனம், 1.11 மேஷம், 2.10 ரிஷபம் , 3.09 மிதுனம், 4.08 கடகம் முடிவு. 4.03க்கு ஆருடம் கேட்கப்பட்ட நேரம். எனவே கடகம் உதயம், மேஷம் ஆருடம் என்று ஏற்கனவே பார்த்தோம். புரட்டாசியில் சூரிய வீதி ரிஷபம். மேஷத்திலிருந்து எண்ண ரிஷபம் வரை 2. இதே 2ஐ உதயத்திலிருந்து எண்ண சிம்மம் கணிப்பு.

சாமக்கோள் ஆருடக் கட்டத்தைப் பாருங்கள். செவ். ஆட்சி, மேஷத்தில் (சந்திரன் ஆட்சி உள்கட்டத்தில்) அவனே உதயாதிபனும் கூட. அங்கேயே பாம்பு துலாத்தில் சனி உச்சம். மீனத்தில் குரு ஆட்சி. (உள்கட்டத்தில் கடகத்தில் பூச நட்சத்திரத்தில் சந். அன்று)

| | | சேய் | | கதிர் | |
|---|---|---|---|---|---|
| பொன் | | ஆருடம் | கேது | | |
| | சனி | | | உத / சந் | பாம்பு |
| மால் | | | | கவிப்பு | |
| புக | | ராகு | செவ் புத | சுக்.சூரி குரு | மதி |
| | | | மந்தன் | | |

1. குடும்பப்பிரச்சனை 7,8க்கு உடைய சனி 4ல் உச்சம் உள்கட்டத்தில் சனி 8ல்
2. குழப்பம் உதயத்தில் பாம்பு சந்திரன். சந்திரனுக்கு 8ல் சனி.
3. ஏவல், பில்லி, செய்வினைக் கோளாறு பற்றிய சிந்தனை. ஆருடத்தில் உள்ள செவ். சனியைப் பார்க்கிறார்

4. பயன்பட ஏதுமில்லை. 9ல் குரு உதயத்தைப் பார்க்கிறார்.

4.25 சுமாருக்கு அவர்களை ஆபிஸில் சந்தித்த போது, நீங்கள் எதற்கான வந்திருக்கிறீர்கள் என்று சாமக்கோளில் தெரிந்து கொண்டேன். அதன் விபரங்கள் இதோ என்று எழுதிய காகிதத்தை காட்டினேன். அசந்தே போய்விட்டனர். எது வும் பேசமுடியவில்லை அவர்களால். மேலும் சாமக்கோளில் வந்த 2 பேருக்குமே ஜோதிடம் தெரியும் என்ற உண்மையயும் கண்டுபிடிக்கலாம். கடகத்தில் சந்திரன் குருபார்வை 7ல் புதன் இருந்து உதயத்தைப் பார்க்கிறார். மேலும் 2ம் இடத்தை வாக்குஸ்தானம் சனி (உள்கட்டம்) 7ம் பார்வையாகப் பார்க்கிறார். ஜோதிடம் தெரிந்தவர்கள் என்ற எவ்வளவு தெளிவாக கிரகங்கள் எடுத்துக் காட்டுகின்றன். பலன் எழுத எடுத்துக் கொண்ட நேரம் 7 நிமிஷமே. இதுதான் சாமக் கோள் ஆருடம் புரிகிறதா? 4.10க்கு சுடச்சுட டீ வந்தது. குடித்துவிட்டுக்கிளம்பினேன்.

---

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 15
## செய்வினைக் கோளாறு?

சென்ற பாடத்தில் எதற்கான வந்திருக்கிறார்கள் என்பதைப் பார்த்தோம். அந்த 2 நபர்களுக்கும் விளக்கிச் சொன்னதில் 15 நிமிஷங்களுக்கு மேல் சென்றுவிட்டன. வந்தவர்களில் ஒருவர் நீங்கள் சொல்வது எல்லாம் நூற்றுக்கு நூற்று சரியே, ஆனால் செய்வினை செய்யப்பட்டிருக்கிறதா என்பதைப் பற்றி சொல்லவில்லையே என்ற கேள்வியை எழுப்பினர். கடியாரத்தைப் பார்த்தேன். மணி அப்போது 4.42 மாலை வழக்கம்போல் கட்டத்தைப் போட்டேன். சாமக்கோள் ஆருட கிரகங்களைப் பார்ப்போம். உள்கட்டம் ஏற்கனவே போட்டிருக்கிறோம். அதில் மாறுதல் இல்லை.

| | | கதிர் | | பாம்பு | |
|---|---|---|---|---|---|
| சேய் | | | | | |
| | | தனுசில் இருந்து ஆருடம் கேட்டார் | | | மதி |
| பொன் | கவிப்பு | | | உதயம் | |
| மால் | ஆருடம் | | | | மந் |
| | | | புகர் | | |

சிரோதயம் அதன் அதிபன் சூரியன் உச்சம் 9ல். சந்திரன் தன்வீடு - 12ல். கவிப்பில் உள்ள நீச்ச குருபார்வை சந்திரனுக்கு. கவிப்பு 6ம் வீடு. பகைவர் ஸ்தானம். எதிரிகள் உண்டு. ஆருடம் 5ம் வீடு அதில் புதன். சுபக்கோள், புதன், சுபக்கோள், புதன் நிற்கில். எதிரிகள் செய்யும் மாறுபட்ட காரியங்கள் எல்லாம் அடிபட்டுப்போகும்.

எனவே செய்வினைகள் ஏதும் செய்யப்படவில்லை. 6-ம் வீட்டை உள் கட்டத்தில் உள்ள குரு 5ம் பார்வையாகப் பாக்கிறார். அவர் நீச்ச வீடு. எனவே எதிரிகள் ஏதும் செய்யவில்லை இதுவரை. அப்படிச் செய்திருப்பார்களோ என்பது உங்கள் எண்ணமே என்று கூறிமுடித்தேன்.

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 16
## பலன் சொல்லும் முறை

மாணவர்களுக்கும், ஜோதிட அபிமானிகளுக்கும் உளங்கனிந்த தீபாவளி நல்வாழ்த்துக்கள். இதுவரை 15 பாடங்களில் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டீர்கள். சில மாணவர்களுக்கு ஆருடம் பற்றிய சந்தேகங்கள் இருந்தன. அவை விளக்கப்பட்டுவிட்டன. இன்னொரு மாணவர் ஆருடத்தை நிர்ணயம் செய்ய கீழ்க்கண்ட முறைகளை ஏன் பயன்படுத்தக்கூடாது என்று கேட்டிருக்கிறார். அமரும் திசையிலிருந்து ஆருடத்தை நிர்ணயம் செய்வது கடினமாகத் தோன்றுகிறது. எப்போதுமே ஆருடம் பிசகியிருக்கலாம் என்ற பயமும் வருகிறது மனதில். எனவே வருகிறவர்களை 108க்குள் ஒரு எண் சொல்லச் சொல்லி அதன் மூலம் நிர்ணயம் செய்யலாமா? அடுத்து, வெற்றிலை பாக்கு எண்ணிக்கையில் ஆருடம் நிர்ணயம் செய்யலாமா என்றும்.

மேற்கண்ட 2 முறைகளும் சாமக்கோள் ஆருட விளக்கங்களில் இடம் பெறவில்லை. மேலும் தாம்பூல(ம்) ஆருடம் வேறு வகையைச் சேர்ந்தது, வெற்றிலைப்பாக்கு, தக்ஷிணை (காணிக்கையாக) வைக்கப்படும் பணம் இவற்றைக் கணக்கெடுத்துக்கொண்டு வெற்றிலையின் தன்மை, பாக்கின் தன்மை, பணம் இவற்றின் எண்ணிக்கை எல்லாவற்றையும் பார்த்துத்தான் ஆருடம் சொல்லுவார்கள்.

ஒரு உதாரணங்கொண்டு எப்படி அதுவும் தவறிப் போகலாம் என்று பார்ப்போம். ஆருடம் கேட்க வந்தவர் 4 வெற்றிலை, 1 பாக்குப் பொட்டலம், 2ரு நோட்டுக்கள் இரண்டு, 1 ருபாய் நாணயம் இவற்றை வைத்து ஆருடம் கேட்கிறார் என்ற வைத்துக்கொள்வோம். வெற்றிலை 4, பாக்கு 1, நோட்டுக்கள் 2 ருபாய் நாணயம் 1 4+1+3 ஆக 8. 8க்கு ஆருடம் மேஷம். வெற்றிலை, பாக்கு 5ரு. எல்லாவற்றையும் சேர்த்தால் 4+ 1+ 5 = 10 ஆருடம் ரிஷபத்தில். 5ரு நோட்டு ஒன்று வைத்து வேறு ஒருவர் கேட்டால் 4 + 1 + 1=6 என்றும் எடுக்கலாமே. நோட்டின் எண்ணிக்கை 1 தானே. அதன் மதிப்பு எவ்வளவு ஆக இருந்தால் என்ன? என்ற கேள்விக்கு இடம் உண்டல்லா? மேலும் சில சமயம் 2 வாழைப்பழம் அல்லது 1 சாத்துக்குடி அல்லது 1 ஆப்பிள் 1 முழம் பூ வைத்தும் ஆருடம் கேட்பார்கள். எல்லாவற்றையும் கணக்கில் எடுப்பதா, வேண்டாமா? தாம்பூலப் பிரச்னத்தில் வெற்றிலையின் தன்மை, பாக்கின் தன்மை அவற்றின் எண்ணிக்கை வைக்கப்பட்ட பணத்தின்

எண்ணிக்கை (நாணயங்கள்) இவற்றையேதான் கணக்கில் எடுப்பார்கள். பழம், பூ பற்றி விளக்கம் இல்லை.

அந்த நாட்களில் 2ரூ, 1ரூ, 5ரூ. நோட்டுக்கள் பழக்கம் இருந்திருக்காது. எல்லாமே நாண யங்கள். மேலும் பழம், பூவின் எண்ணிக்கை என்ன ஆவது? அதுவும் காணிக்கையோடு வைக்கப்படுவதுதானே ! விடை காணுவது சிரமம். சாஸ்திரசம்மதம் இல்லை. அதேபோல் தான் சாமக்கோளிலும். அந்த மாணவர் மேற்கண்ட முறைப்படி ஆருட நிர்ணயம் செய்து பலன் வெற்றிகரமாகச் சொன்னால் வரவேற்கத்தக்கதே. அவர் ஆர்வத்திற்கு அணைபோட விரும்பவில்லை நான். வெற்றிகண்ட பிரச்னைகளை எழுதி அனுப்பினால் மிகவும் கடமைப்பட்டிருப்பேன். அதனால் ஜோதிட உலகம் பயன் அடையும் நிச்சயமாக. இந்த ஆருடத்திலிருந்து பல விஷங்களை எளிதில் அறியலாம் என்பதனாலேயே, அதற்கு முக்கியத்துவம் கொடுத்து சாமக்கோள்களுடன் இணைத்து சாமக்கோள் ஆருடம் என்ற காரணப்பெயர் சூட்டப்பட்டது. ஆரம்பாடத்திலேயே இது விளக்கப்பட்டிருக்கிறது.

மேலும் ஜோதிடத்தில் எந்த ஒரு விஷயத்திற்கும் சாஸ்திர அடிப்படை வேண்டும் இல்லை சாஸ்திர சம்மதம் இருக்க வேண்டும். புதிய கண்டுபிடிப்புகள் இருக்கலாம். அதற்கு சாஸ்திர ரீதியில் பொருத்தமான விளக்கம் அவசியம். நடைமுறையிலும் ஒத்துவரவேண்டும். அதுவே என் அபிப்பிராயம். கொள்கையும் கூட. மீண்டும் நம் ஆருட த்திற்கு வருவோம்.

சாமக்கோள் 1.30 மணியில் இடம் மாறுகின்றன. உதயம் 1 மணிக்கு ஒன்று. சூரிய உதய அஸ்தமனத்தால் சிறுது மாறலாம். ஆருடம் அப்படியல்ல. 1 மணியில் (உதயத்தில்) பலமுறை மாறும். இந்த ஆருடத்தால் பல விஷயங்களைக் கண்டறியலாம். ஆருட வலியால் (வந்தவர்) சிந்தனையை அறியலாம், ஆருடத்தால் நஷ்டமும் கண்டுபிடிக்கலாம். இந்த ஆருடம் பிரச்னையின் காலத்தையும் எடுத்துக்காட்டும். உதயத்திலிருந்து

3,6,9,12 ஆருடமாக வந்தால் கடந்த காலம்.
1,4,7,10 ஆருடமாக வந்தால் எதிர் காலம்.
2,5,8,11 ஆருடமாக வந்தால் நிகழ்காலம்.

பொதுவாக 6, 8, 12 ஆருடமாக வந்தால், அந்தக் காரியம் வெற்றியடையாது என்றே கூறலாம்.

பொதுவிதி :

இன்னும் சிரோதயம் உதிக்க பிருஷ்டோதயம் ஆருடமா வரில் நஷ்டம். பிருட்டோதயம் உதிக்க, சிரோதயம் ஆருடமாகவரில் நஷ்டமில்லை. உதய ஆருடங்களில் சுபக்கோள்கள் நிற்கில் நஷ்டம் விரைந்து கானும். நஷ்டம் என்பதை பொருள் நோக்கில் பார்க்காமல், காரிய வெற்றி இல்லை என்று கொள்ளல் வேண்டும். நஷ்டமில்லையென்றால் காரிய ஸித்தி, லாபம் என்றும் கொள்ளலாம்.

| உதயம் | ஆருடம் | விளைவுகள் |
|---|---|---|
| துலாம் | மேஷம் | நஷ்டம் இல்லை |
| மேஷம் | துலாம் | நஷ்டம் உண்டு |
| ரிஷபம் | விருச்சிகம் | நஷ்டம் உண்டு |
| விருச்சிகம் | ரிஷபம் | நஷ்டம் இல்லை |
| தனுசு | மிதுனம் | நஷ்டம் உண்டு |
| மிதுனம் | தனுசு | நஷ்டம் இல்லை |
| மகரம் | கடகம் | நஷ்டம் இல்லை |
| கடகம் | மகரம் | நஷ்டம் உண்டு |
| சிம்மம் | கும்பம் | நஷ்டம் இல்லை |
| கும்பம் | சிம்மம் | நஷ்டம் உண்டு |
| மீனம் | கன்னி | நஷ்டம் உண்டு |
| கன்னி | மீனம் | நஷ்டம் இல்லை |

பாடப்பாட ராகம் என்பது போல், பழகப்பழக ஆருட நிர்ணயம் சுலபமாகிடும். இந்த ஆருடம் உதயம், கவிப்பு, இந்த 3ம் பல விஷயங்களை எடுத்துக்கூறும். ஒரு குறிப்பிட்ட தேதி நேரத்திற்கு உதயம் ஆருடம் மாறுவதால் என்னென்ன பலன்கள் சாத்தியம் என்று போட்டுப் பார்ப்போம். உதாரணமே ஒழிய அப்படியே நடந்ததாகவோ, நடக்கப்பேரகிறதாகவோ நிர்ணயம் செய்து கொள்ள வேண்டாம். உங்கள் திறமையை எடை போடவும், உங்களுக்கு பலன் சொல்ல தைரியம் ஊட்டவுமே இந்த உதாரணம். நிதானமாகப் பார்க்கவும். நிச்சயம் வியப்பு ஏற்படும் அதில் ஐயமில்லை. தேதி 27.10.1993. புதன் காலை 10.15. இடம் திருச்சி. பிரச்சனை தொழில் ஆரம்பிக்கலாமா? என்ற கேள்வி, விருச்சிக ஆருடத்திலிருந்து. உதயத்தில் சனி. 10ல் ராகு உச்சம். சனியின் பார்வை வேறு. 10ம் இடம். ஆருடமாக வருவதால் ஆக்கம்.

சேய் கதிர் பாம்பு

| | | | |
|---|---|---|---|
| சந் | | கேது | |
| சனி / 2 | | | |
| | | | கவிப்பு |
| | ராகு / ஆரு | குரு, புத சூரி, செவ் | சுக் |

பொன் மால்

மதி மந்த

புகர்

உண்டு. காரியம் தாமதமாகும். 7க்குடைய சூரி. உச்சம். உதயத்திற்கு 3ல் கவிப்பும் சூரியன் வீட்டில். 3 விளம்பர ஸ்தானம். விரிவாக விளம்பரம் செய்ய ஆசை. 6ல் சந்திரன். எதிர்பார்த்த அளவிற்கு பணம் புரட்ட முடியவில்லை. கடன் வாங்கி வேண்டிவரும். 2.11க்குடைய குரு நீச்சம். தைரியமாக கடன் வாங்கிச் செய்யலாம். கதிர் உச்சமாக இருப்பதால் 6 மாதத்தில் காரியம் வெற்றியாகும். ராகுவும், சூரி. ரசாயனத்தோடு சம்பந்தப்பட்டவை. பார்மசூடிகல்ஸ் வியாபாரம் செய்ய எண்ணம். இப்படித்தான் பார்க்கவேண்டும் பிரச்சனைகளை.

ஒரு மணி நேரத்தில் என் அனுபவத்தில் குறைந்தது 6 அல்லது 7 ஆருடப்பிரச்னை களுக்கு பதில் துல்லியமாக கூறமுடியும். மற்றொருவர் குடும்பப்பிரச்னை என்கிறார் என்று வைத்துக்கொள்வோம். மேஷம் ஆருடம். உதயம் மாறவில்லை. அப்படியே ரிஷப வீதியில் சூரியன் கவிப்பு மீனம். எப்படி? ஆருடத்திலிருந்து சூரியவீதிவரை எண்ண 2. உதயத்திலிருந்து எண்ண மீனம் 2ம் வீடு - கவிப்பு.

மனைவி கோபித்துக்கொண்டு போய் விட்டாளா? 3ம் இடம் மறைவு ஸ்தானம். 7க்குடையவர் சந்திரன் 2ல். (குடும்ப ஸ்தானத்தில்) அவனும் சனிசாரத்தில் சுகஸ்தானம் (4ம் வீட்டில் கேது) 2ல் வீட்டில் செல். சனி
வாக்குஸ்தானம்
பார்வை. நீங்கள் ஏதோ சுடு சொற்களால் கண்டித்திருக்கிறீர்கள், கோபித்துக்கொண்டு போய்விட்டாள். 6ல் சந். மனநிம்மதி இல்லை. ஆருடத்தை குரு பார்க்கிறார். சூரி பார்க்கிறார். புதன், செல். பார்க்கிறார். குருவுக்கு பகைவீடு. வெளிக்கட்டத்தில் சுக். அவனும் ஆருடத்தைப் பார்ப்பதாலும் விரைவில் வந்து சேருவாள்.

இந்த சம்பந்தத்தில் இறங்கலாமா? இந்தப் பெண்ணை எடுக்கலாமா என்ற கேள்வியோடு கும்பத்தில் ஆருடமாக ஒருவர் வந்து கேட்கிறார் என்று வைத்துக்கொள்வோம். உதயத்தில் சனி. 7க்குடைய சூரியன் உச்சம் 3ம் வீட்டில். 3ம் வீடு மறைவு ஸ்தானம் என்று பார்த்தோம். 8ல் சுக் - நீச்சம். உள்கட்டத்தில். வெளிகட்டத்தில் 2 லிருந்து செவ். சனியைப் பார்க்கிறார். உதயமே ஆருடமாக வருவதால் 4ம் வீடு கவிப்பு. அதாவது ரிஷபம் எப்படி? ஆருடம் முதல் சூரியவீதி (ரிஷபம் வரை எண்ண 4) உதயத்திலிருந்து 4 எண்ண ரிஷபம். அங்கேயே கேது. மேலும் 2.11க்குடைய குரு வேறு நீச்சம். வேண்டாமய்யா வேறு பெண் பாருங்கள் , அது நல்லது.

மற்றொருவர் வியாபாரப்பிரச்னை என்று கடகத்தில் அமர்ந்து ஆருடம் கேட்கிறார் என்று வைத்துக்கொள்வோம். உதயம் மாறவில்லை. 6ம் இடம் வரிஸ்கானம். சந்திரன் அங்கேயே. எனவே இதுவரை வரிகட்டி வந்திருக்கிறீர்கள். 3.12க்குடைய (ஆருடத்திற்கு) புதன் 6ல். மேலும் உதயத்திற்கு 5,8க்குடையவனும் அவனே. வரியை ஒளித்து இருக்கிறீர்கள். 6,8, 5,12, 3 எல்லா இடமும் சம்பந்தம் வருவது குறிப்பிடத்தக்கது. வரி ஏய்ப்பு என்றும் கூறலாம். ஆருடத்திற்கு 10ல் சூரி உச்சம். 7க்குடையவனும் அவனே. சூரி. அரசாங்கத் தொடர்பை குறிக்கும். புதன் கணக்கைக் குறிக்கும். கவிப்பு 11ம் இடம். அதாவது தனுசு. குரு நீச்சம். ஆருடத்திற்கு 7ல் ஏதாவது தண்டம் (FINE) கட்ட வேண்டிவரும். அது நிச்சயம்.

இப்படிப் பலதரப்பட்ட பிரச்சனைகளை அலசலாம். கிரகங்கள் எவ்வளவு துல்லியமாக விஷயங்களை எடுத்துக் கூறுகின்றன. இதுதான் சாமக்கோளின் மகிமை. வேறு எந்த ஆருட முறையிலும் இவ்வளவு துல்லியமாக ஏறத்தாழ 10 நிமிடங்களில் இவ்வளவு விவரங்களோடு பலன் சொல்வது சாத்தியமே இல்லை.

துப்பு துலக்குவது போல் கிரகங்களை நிதானமாக ஆராயப் பல உண்மைகள் வெளிப்படும். அனுபவமே சிறந்த வழிகாட்டி. நம்புத்திக் கூர்மையும், தெய்வானுகூலமும் துணைபுரியும் நமக்கு.

ஆருடம் உதயம் முதல் 12 ராசிகளில் என்னென்ன பலன்களைத் தரக்கூடும் என்பதையும் பார்ப்போம்.

உதயமே ஆருடமாகவரில் நட்டமான பொருள் கிட்டும். வியாதி தீரும்.
4ம் இடம் ஆருடமாகவரில் நினைத்தது கைகூடும். பொருள் கிட்டும்.
7ம் இடம் ஆருடமாகவரில் நஷ்டம், கைப்பொருளும் நஷ்டமாகும்.
10ம் இடம் ஆருடமாகவரில் ஆக்கமுண்டு. நன்மைகள் வரும். காரிய வெற்றியும் உண்டு

3ம் இடம் ஆருடமாகவரின் சுபகர்மங்கள் என்று கூறலாம். குரு முதலிய சுபக்கோட்கள் அதில் நிற்க மிகவும் நன்மை.

5,9 இடம் ஆருடமாகவரில் நினைத்தது நடைபெறும். வழக்கு வெல்லும் சத்துருக்கள் சமாதானம் அடைவர். யாத்திரைச் சென்றவர்.

2,6,8,12 ஆருடமாகவரில், எதிரீ கை ஓங்கும். ஜெயிப்பார். காரியம் கைகூடாது கைப்பொருளும் நஷ்டமாகும்.

11ம் இடம் ஆருடமாகவரில் எல்லா நன்மைகளை சொல்லாம்.

கவிப்பிற்கும் இதேபோலத்தான். கவிப்பு 11ம் இடமாக வந்தால் நஷ்டமே. சந்திர ராசிக்கு 11 வந்தால் மட்டும் லாபம் என்று கூற வேண்டும்.

உதய குரு முதல் பட்சம், ஆருட குரு 2வது பட்சம். கவிப்பு குரு 3வது பட்சம் ஆக எடுத்துக்கொள்ளல் வேண்டும். உதய ஆருட கவிப்புகளில் சந், சுக், புதன் நிற்சில் நன்மை. தடை இராது வழக்கு வெல்லும். எதிரிகள் சாந்தமடைவர். பிணி தீரும், தொல்லைகள் அனைத்தும் போம்.

வை உதய ஆருடக் கவிப்புகளில் சனி, செல், சூரி. நிற்கில் நஷ்டம், பிணி தீராது. வழக்கு தோல்வி மரணமும் வரலாம். ராகு நிற்சில் கொலை, களவு, விஷம், மரணம் எல்லாம் தீங்கும்.

வை இடங்களை சுபக்கோள்கள் நோக்கில் பல நன்மை. பகை கோட்கள் நோக்கில் பல தீமைகள், மகப்பேறும் இல்லை.

நட்பாச்சி கோட்கள் நோக்கில் பெண் வேறு உண்டு. சுமாரான இதர நன்மைகள் ஏற்படும். வை உதய ஆருட கவிப்பிற்கு இவை நட்பு ஆட்சியாகில் இன்னும் விசேஷம் பகைக் கோள்கள் நோக்கில் பயம், மரணம், தளை, (கட்டுப்படுதல்)

1,4,7,10ல் சந்.குரு நிற்கில் பயமில்லை. நஷ்டமானது கிட்டும். பாய கோள்கள் நிற்கில் பல தீமைகள், விரோதப்பலன்கள்.

10,11ல் குரு முதலிய சுபக்கோட்கள் நிற்கில் கெடுதல் இல்லை. நினைத்த காரியம் கைகூடும்.

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 17
## விளையாட்டுப் போட்டிகளில் சாமக்கோள் ஆருடம்

அன்பார்ந்த மாணவர்களே, இன்று 16.11.93 அரசாங்கமே ஆதரிக்கும் பந்த். இயல்பு நிலை வாழ்க்கை பாதிக்கப்பட்டுள்ளது பல நகரங்களில். நம்மைப்பொறுத்தவரை கார்த்திகைமாதம் பிறந்துவிட்டது. இதன் முக்கியத்துவம் என்ன? சூரிய வீதி மாறுகிறது. அதாவது, இது நாள் வரை ரிஷபம் சூரிய வீதியாக இருந்தது. இன்றுமுதல் மிதுனம் இன்னும் 4 மாதங்களுக்கு (கார்த்திகை, மார்கழி, தை, மாசி) மிதுனமே. இதைக் கவனத்தில் கொண்டு பிரச்சனைகளைப் பார்க்க வேண்டும். மிகத்துல்லியமான கணக்குப் பார்க்க வேண்டும் என்றால் இன்று காலை 8.36 க்கு சூரியன் விசாகம் நாளில் பிரவேசம். அந்த நேரம் முதல் சூரியவீதி மிதுனம் ஆகும்.

மற்றொரு விஷயமும் தெளிவுபடுத்த விரும்புகிறேன். ஏற்கனவே உதயம் பார்க்கும் போது, நாளைக்கு 2நிமி.வீதம் (எத்தனை தமிழ்தேதிகள் சென்றனவோ) கழிக்க வேண்டும் என்றும் அறிவீர்கள். இன்று மாதமே பகலில் பிறந்தால், 2நிமி. கழிக்கத் தேவையில்லை. இரவு 8.36 மாலை 5.17க்கு மேல் பிரச்சனைகள் பார்த்தால், 2நிமி. கழிக்கவேண்டும். உதயம் கணக்கிட. இன்று சூரியஉதயம் 6.16 அஸ்தமனம் 5.45 மாலை இராபபொழுது 12 மணி நேரம் 31 நிமிஷம். எப்படி? 5.45 மாலை முதல் காலை 5.45 வரை 12 மணி 15+16 நிமி. 31நிமி. எனவே 12.31. அதாவது 751 நிமி. 12ல் வகுக்க 62 $\frac{7}{12}$ நிமி. பாதிக்கு மேல் பின்னம் இருப்பதால் 1 மணி 3 நிமி. ஆகக்கொள்ளலாம். எனவே 5.45 உடன் 1 மணி 3 நிமி. கூட்ட 6.48 மாலை. அதில் 2 நிமி. கழிக்க 6.46 வரை விருச்சிகம் இரவில். நாளை 17.11.93 தமிழ்த்தேதி 2. எனவே பகலில் 2 நிமி. இரவில் 2நிமி. வழக்கம் போல் கழிக்க வேண்டும். 2 x2 = 4 நிமி. புரிகிறதா? உங்களுக்கு சந்தேகம் வரக்கூடாது. மிகத்துல்லியமான கணக்காவும் இருக்க வேண்டும். எனவே இந்த விளக்கங்கள்.

16.11.93 செவ். அன்று அஹமதாபாத்தில் இந்தியாவிற்கும் மேற்கு இந்திய அணிக்கும் ஒரு கிரிக்கட்போட்டி நடைபெற்றது. அதை டி.வி. யிலும் ஒளிபரப்பினார்கள். சாமக்கோள் ஆருடம் மூலம் யார் ஜெயிப்பார்கள் என்று பார்த்து, போட்டி ஆரம்பித்தவுடனேயே எழுதி வைத்தேன். அதன்படியே விளையாட்டுப் போட்டியின் முடிவும் இருந்தது. அதன்

விவரங்களைப் பார்ப்போம்.

கதிர் பாம்பு மதி

| கவி | ஆரு | கேது | |
|---|---|---|---|
| சனி | | | |
| 2 | | | |
| சந் | ராகு, செவ் சூரி | குரு, புத சூரி | |

சேய் (left) — மந் (right) — புகர் (right)

பொன் மால்

செவ்வாய் 16.11.93 திருச்சி. காலை 9.00 (சூரிய விதி மிதுனம்) மேஷம் ஆருடம். உதயம் மகரம். கவிப்பு மீனம். உதயத்தில் செவ். உச்சம். ஆருடமும் செவ். வீடு. அந்த வீட்டை செவ்வாயும் பார்க்கிறார். முதலில் ஆட்டத்தில் இறங்கும் கட்சிக்கே வெற்றி என்று எழுதி வைத்தேன். முதலில் மேற்கு இந்திய அணி ஆட்டத்தில் இறங்கினர் அவர்களே வெற்றி பெற்றனர். உதயம், ஆருடம், கவிப்பு எல்லாம் சாதகமே. 3ம் இடம் கவிப்பாக வந்தால் நன்மை. அதில் சூரியன் இருப்பதால் சிரமப்பட்டு ஆடினார்கள். 30 ரன்களுக்கு உள்ளேயே 2 விக்கட்டுகளை இழந்தனர். ஆயினும் வெற்றி பெற்றுவிட்டனர். விளையாட்டுப்போட்டிகளில் முதலில் எந்த சட்சி ஆடத் தொடங்குகிறதோ அதையே உதயமாக எடுக்கவேண்டும். யாருக்க யார் போட்டி என்று முதலில் யார் கட்சி குறிப்பிடப்படுகிறதோ அதுவே உதயம் ஆக எடுக்க வேண்டும்.

10-11-1993 புதன்கிழமை டியூராண்ட் கால்பந்து போட்டி (Durand Football Match)- பிற்பகல் 2.14க்கு ஒளிபரப்பட்டது. யார் ஜெயிப்பார்கள் இதில் கூறுங்களேன் என்று நண்பர் (மிதுனத்தில் ஆருடமாக அமர்ந்து) கேட்டார். அவரும் என்னுடன் அமர்ந்து இறுதிவரை ஆட்டத்தை ரசித்தார். வழக்கம் போல் கிரகநிலைகளைப் போட்டு, கிழக்கு பெங்கால் அணி ஜெயிக்கிறது என்று கூறியது மட்டுமின்றி, பேப்பரில் குறித்தும் வைத்தேன். அதன் விவரம் வருமாறு.

இடம் திருச்சி, தேதி 10-11-1993, நேரம் பிற்பகல் 2.14. சூரிய உதயம் 6.14. அஸ்தமனம் 5.46. பகல்பொழுது 11 மணி 32 நிமி. அல்லது 692 நிமி. 12ல் வகுக்க $57\frac{8}{12}$ நிமி. இதில் 58 நிமி. எடுக்கலாம் 6.14+58= 7.12.

தமிழ்த்தேதி புரட்டாசி 25. 25x2 = 50 நிமி. 7.12 லிருந்து 50ஐக் கழிக்க 6.22. துலாம் 6.22 உடன் முடிவடைகிறது. விருச்சிகம் 7.20, தனுசு 8.18. மகரம் 9.16. கும்பம் 10.14. மீனம் 11.12. மேஷம் 12.10. ரிஷபம் 1.08. மிதுனம் 2.06. கடகம் 3.04 வரை. எனவே உதயம் கடகம். ஆருடம் மிதுனம் என்று ஆரம்பத்திலேயே பார்த்தோம். சூரியன் ரிஷப வீதி ஆருடத்திற்கு 12ம் வீடு. உதயத்திற்கு 12. கவிப்பு மிதுனம். ஆருடமும், கவிப்பும் அதுவே (மிதுனமே). கிழக்கு வங்காள அணி, பஞ்சாப் மின்சார வாரிய அணியோடு

| | | மந் | | புகர் | |
|---|---|---|---|---|---|
| மதி | | | கேது | ஆரு கவி | |
| | சூரி | | | உத | மால் |
| பாம்பு | | | | | |
| கதிர் | | ராகு, செவ் | குரு, புத சூரி, சுக் | சந் | |
| | | | சேய் | பொன் | |

மோதுகிறது எனவே முதலில் குறிப்பிடப்படும் அணிக்கு உதயம் கடகம். புதன் அங்கேயே. 7க்குடைய போட்டி அணிக்கு மகரம் உதயம். பாம்பு அங்கேயே. மேலும் அந்த வீட்டுக்குடைய சனி நீச்சம் உதயத்திலிருந்து 10ம் வீட்டில். எதிர் அணிக்கு வலிவு இல்லை. மேலும் கிழக்கு வங்காள அணிக்கு 9ம் வீட்டில் (பாக்கியம்) சந்திரன். குருவின் பார்வை வேறு. எனவே கிழக்கு வங்காள அணி வெல்கிறது என்று எழுதி வைத்தேன். பாதி ஆட்டம் (Rirst Half) - வரை எந்தக் கட்சியும் கோல் போடவில்லை. நண்பர் 2 கட்சியும் கோல் போடவில்லையாதலால், இந்த நேரத்திற்கு யார் ஜெயிப்பார்கள் என்று பார்க்கக்கூடாதா, ஸார் என்ற கேள்வியை எழுப்பினார். அது தேவையில்லை. வெற்றி தோல்வி நிர்ணயம் ஆகாவிட்டால், கடைசியில் 2 கட்சிகளுக்கும் கோல் போட வாய்ப்பு அளித்து, யார் அதிகம் கோல் போடுகிறார்களோ அவர்களே வெற்றி பெற்றவர்கள் என்று தீர்மானம் ஆகும்.

Tie Breaker - என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். அதைக்கூட சாமக்கோள் ஆருடத்தில் கூற முடியும் என்று பதில் அளித்தேன்.

********

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 18
## குலதெய்வப் பிரச்னைகள்

காலம் மாறிவருகிறது. வேகமான பஸ், ரயில் போக்குவரத்து, விமானப் பயணம் இவற்றால் மாகாணங்களின் எல்லைகளும், நகரங்களும் ஒரு நாட்டின் எல்லைகளும் நகரங்களும் மிகச்சுலபமாக அடைக்கூடிய நிலையில் வந்துவிட்டன. ஒரே மூச்சில் 7மணி நேரம் பறந்து அட்லாண்டிக்மகாசமுத்திரத்தை கடந்து விடலாம். அமெரிக்கா சென்றடைந்து விடலாம். 2.30 மணி நேரம் கிழக்கு நோக்கிப் பறந்தால் மலேசியா நாடு. மேற்கு திசையில் பறந்தால் அரபு நாடுகள்.

எனவே பல இந்தியர்கள் உத்யோக நிமித்தம், வயிற்றுப் பிழைப்பின் காரணமாக இந்த நாடுகளுக்குச் சென்று வசிக்கின்றனர். வாழ்கின்றனர். வசதிப்பட்டவர்கள் அங்கேயே குடிஉரிமை (Citizenship) பெற்று தங்கியும் விடுகின்றனர். இதில் வியப்பொன்றும் இல்லை வெளிநாட்டுப் பயணம் அவ்வளவு சர்வசாதாரணமாகிவிட்டது இன்று.

அண்டைய மாநிலங்களில் உத்யோகத்திற்கு, வியாபாரத்திற்குச் செல்பவர்களின் நிலையும் இதேதான். பல ஆண்டுகள் அங்கேயே தங்கியும் விடுகின்றனர். கலியாணம், கார்த்திகை, குழந்தைகுட்டி பெறுதல், குடும்ப வாழ்க்கை, ஓய்வு பெற்ற பின்பும், அங்கேயே தங்க வேண்டிய சூழ்நிலை இவையும் சிலருக்கு ஏற்பட்டு விடுகிறது.

இதனால் பிறந்த மண்ணின் தொடர்பும், உற்றார் உறவினர் தொடர்பும் படிப்படியாகக் குறைந்து கொண்டே வருகிறது. சில ஆண்டுகளில் அற்றே போய்விடுகிறது என்றால் மிகையாகாது. இந்தச் சூழ்நிலையில் சில குடும்பத்தின் இளைய தலைமுறைக்குத் தங்கள் குலதெய்வம் என்ன என்பதே தெரியாமல் போய்விடுகிறது.

குலத்தைக் காக்கும் தெய்வம் குல தெய்வம். காரணப் பெயர். இந்தக்குல தெய்வத்தில் மறைந்த முன்னோர்களும் (பிதுர்க்கள் - தாய்வழி, தகப்பன் வழி) அடங்குவர். அதில் சந்தேகம் வேண்டாம்.

குலதெய்வத்தை மறப்பதும், மறைந்த முன்னோர்களுக்கு சடங்குகளைச் சரிவர செய்யாமல் இருப்பதும் ஒரு தோஷமே, இயற்கையில் எச்சரிக்கையின்றி எதுவும் நடப்பதில்லை. அதே அடிப்படையில் இந்த தோஷங்கள் ஜாதகத்தில் நிதர்சனமாக எடுத்துக்காட்டப்படுகின்றன. அதில் ஐயம் வேண்டாம். 40 வருட என் அனுபவத்தில் பல ஜாதகங்களை ஆராய்ந்த போது இந்த உண்மை புலப்பட்டது குறிப்பாக 2ல் ராகு 8ல் கேது இல்லை. இவை இடம் மாறியிருப்பதாலோ, குலதெய்வப்பிரார்த்தனையில் ஏதோ விட்டுப்போயிருக்கிறது என்பதும், மறைந்த பிதுர்க்கள் திருப்திப்படவில்லை என்பதும் மிகத் தெளிவு. அடித்துக் கூறலாம். ஆரம்பத்தில் இல்லை என்று சாதித்தாலும், பிறகு உண்மைய ஒப்புக் கொள்வார்கள். நிற்க. நினைவு தெரிந்து, பிறந்த மண்ணை மதிக்காத நிலையிலும், உற்றார் உறவினர் என்று யாரும் எடுத்துச் சொல்லக்கூடிய நிலையில் இல்லாத போதிலும் சாமக்கோள் ஆருடம் மூலம் குல தெய்வத்தைக் கண்டுபிடித்துக் கூறலாம். நூற்றுக்கு நூறு சரியாக இருக்கும். இதுவரை சுமார் 70 குடும்பங்களுக்கு எடுத்துக் கூறி அவர்களுக்கு வழிகாட்டியும் உள்ளேன். குலதெய்வப் பிரார்த்தனை செய்து வந்த பிறகு மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். நவம்பர் 1991 பெங்களூர் பி.வி. ராமன் அஸ்ட்ரலாஜிக்கல் மேகஸைனில் வெளியான என் கட்டுரையின் தமிழாக்கத்தைத் தங்களுக்கு தருகிறேன்.

இடம் திருச்சி. தேதி 10.5.1991. நேரம் காலை 10.52 ஏ.எம் வெள்ளி. உதயம் கடகம். ஆருடம் கும்பம். கவிப்பு துலாம்.

சாமக்கோளில் என் கணிப்பு : குலதெய்வம் விஷ்ணு அம்சம். பெண் தெய்வம் துர்க்கையாக இருக்கலாம். காவிரி நதிக்கரையில் சுமார் 20 கி.மீ. கிழக்கு திசையில் அடியார்களால் பாடல் பெற்ற ஸ்தலம். ஆண்ட மன்னர்களின் ஆதரவைப் பெற்ற இடம். பிரபலமானதும் கூட.

| | சேய் | கதிர் | | பாம்பு | |
|---|---|---|---|---|---|
| | புத சந் | சூரி | | செவ் கேது | சுக் |
| | ஆரு | 10.5.1991 காலை 10.52 வெள்ளி திருச்சி | | உத / குரு | மதி |
| பொன் | சனி | | | | |
| மால் | ராகு | ராகு, செவ் சூரி | கவிப்பு | | மந் |
| | | | புகார் | | |

2ம் வீடு குடும்பத்தைக் குறிக்கும். அந்த வீட்டதிபதி சூரியன். உள்கட்டம், வெளிக்கட்டம் இரண்டிலும் உச்சம் பெற்ற நிலை. தன் வீட்டிற்கு 9ம் வீடு. உதயத்திற்கு 10ம் இடம். சூரியன் நாராயண அம்சம், சூரிய நாராயணன் என்று அவனைக் குறிப்பிடுகிறோம் எனவே விஷ்ணு அம்சம் என்று தீர்மானிக்கப்பட்டது. ஏன் பெண் தெய்வம்?

ஆருடம் உதயத்திற்கு எட்டில் சனி வீடு. 8ம் வீடு மறந்ததைக் குறிக்கும். அந்தச் சனியே உதயத்திற்கு 7ல் இருந்து கவிப்பைப் பார்க்கிறார். கவிப்பில் சுக்ரன் சூரியன் பார்வையும் கவிப்பிற்கு, சுக்ரனுக்கு. மேலும் சனியானவர் அன்றைய சந்திரனை 7ம் பார்வையாகவும் பார்க்கிறார். அந்தக் கவிப்பே (துலாம்) சனிக்கு உச்ச வீடு. சனி அழிவிற்கு அதிபதி. கவிப்பையும், சுக்ரனையும் பார்ப்பதால் பெண் தெய்வமாகும். காரணம் லக்ஷ்மியே தான் துர்க்கை அவதாரம் எடுத்தவள். சுக்ரன் லக்ஷ்மியை குறிக்கும். இங்கு துர்க்கையையும் குறிக்கம் சனியின் பார்வையினால்.

காவிரிக்கரை எப்படி? துலா ராசிக்கும் காவிரிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. துலா காவிரி ஸ்நானம் விசேஷமானது. கங்கையே தன் பாவங்கயைப் போக்கிக் கொள்ள, துலா மாதத்தில் காவிரியோடு கலக்கிறாள் என்று ஐதீகம். ஐப்பசி மாதம் 30 நாளும் காவேரி ஸ்நாம் தொடர்ந்து செய்தால், கங்கைக்கு [illegible] பலன் கிட்டும் என்ற நம்பிக்கை முடியாத முடவனுக்கு ஐப்பசி மாதம் சென்று கார்த்திகை பிறந்தும், அவனுக்கு அருள் புரிந்தாராம் பகவான். அதனால்தான் முடவன் முழுக்கு என்ற வாசகம் எல்லாப் பஞ்சாங்களிலும் குறிப்பிடப்படுகிறது இன்று கூட.

20 கிலோ மீட்டர் நிர்ணயம் எப்படி? சூரியனுக்கு கதிர் 5. அவன் உச்சம் என்று ஏற்கனவே பார்த்தோம். 3மடங்கு அவன் பலம் கதிர்ப்படி. 3x5=15. மேஷத்திற்கு கதிர் 7. எனவே 15+7= 22 கி.மீட்டர். 20 கிலோ மீட்டர் என்று நிர்ணயம் செய்யப்பட்டது. கிழக்கு திசை ஏன்? உச்சமாக சூரியன் திசை கிழக்கு.

பாடல்பெற்ற ஸ்தலம் ஏன்? கவிப்பை குருவும் பார்க்கிறார். குரு உதயத்தில் உச்சம் குரு அடியார்களையும், தவசிரேஷ்டர்களையும் குறிக்கம். சுக்ரன் பாடல்களைக் குறிக்கும். எனவே பாடல் பெற்ற ஸ்தலம். சந்திரனுக்கு குருபார்வை (9ம் பார்வை) உச்ச சூரியன். கவிப்பைப் பார்க்கிறார். சுக்ரன் தன் வீடு சூரியன், அரசர்களையும், ஆகும் வம்சத்தினரையும் குறிக்கும். எனவே அரசர்கள் ஆதரவு அந்த ஸ்தலத்திற்கு. அடியார்கள் பாடி, அரசர்கள் ஆதரவு தர, அந்த ஸ்தலம் பிரபலமானதே.

இவ்வளவு சொல்லி முடித்தபிறகு, கூட வந்தவர்களில் ஒருவர் ஐயா, உங்கள் வாக்கு தெய்வ வாக்கு. கும்பகோணத்தை அடுத்து 20 கி.மி. தொலைவில் உள்ள பட்டீசுவரம் துர்க்கைதான் இவர்கள் குலதெய்வம். பாடல் பெற்ற ஸ்தலம். சோழ மன்னர்களால் ஆதரிக்கப்பட்டதும் கூட.

இந்த இளைஞரின் முதாதயரை எனக்குத் தெரியும். பர்மாவிற்குப் பிழைக்கப் போனவர்கள். பிறகு ஏதும் தகவல் இல்லை, யுத்த காலத்திற்குப் பிறகு. தம்பியை நேற்றுத்தான் பார்த்தேன். உங்களிடம் அழைத்து வந்தேன். குலதெய்வத்தைப் பற்றி அறிந்து கொள்ள. இனி கவலையில்லை. அதற்கு பிரார்த்தனைச் செய்துவிட்டு தம்பி வியாபாரம் செய்ய உத்தேசித்து உள்ளார். இங்கேயே தங்கி என்றார்.

*********

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 19
## கால்பந்து போட்டி

முந்திய பாடத்தில் டைபிரேக்கர் (Tie Breakar) முறையில் வெற்றி தோல்விகளையும் சாமக்கோள் ஆருடத்தில் நிர்ணயம் செய்ய முடியும் என்பது பற்றி கூறப்பட்டது. காலபந்து போட்டியில் இம்முறையில் வெற்றி தோல்வி முன்கூறியே அறிவிக்கப்பட்டதை கீழ்க்கண்ட உதாரணத்தில் காணலாம்.

இளைஞர்களுக்கு சுபர்டோ முகர்ஜி கால்பந்து போட்டி ஆண்டுதோறும் டெல்லியில் நடைபெற்று வருகிறது. பல உலக நாட்டு இளைஞர்களும் அதில் பங்குபெற்று, நல்ல திறமையும், அனுபவமும் பெறுகின்றனர். வருங்காலத்தில் திறமைமிக்க கால்பந்து வீரர்களை உருவாக்கும் சிறந்த பணிகளில் இதுவும் ஒன்று.

22.10.1993 வெற்றி பிற்கல் 3.10க்கு இந்த நிகழ்ச்சி டி.வி.யில் ஒளிபரப்பட்டது. இந்தியாவில் சார்பில் பீஹார் பள்ளி மாணவர்களும், ரஷ்யாவின் சார்பில் உசபெய்க்கிஸ்தான் பள்ளி மாணவர்களும் போட்டியில் இறங்கினர். வழக்கம் போல் சாமக்கோள் ஆருடத்தில் கட்டத்தைப்போட்டு, டைபிரேக்கர் முறையில் இந்தியா ( பீஹார் பள்ளி மாணவர்கள் ) 4க்கு 3 என்ற கோல் விகிதத்தில் வெற்றி பெறுவார்கள் என்று எழுதி வைத்தேன். ஆட்டத்தின் முடிவும் அதன்படியே இருந்தது. சாமக்கோள் ஆருடமல்வா

மந் புகர்

மதி | பாம்பு | கதிர் (left side)

| | | | |
|---|---|---|---|
| | | ஆரு கேது | |
| சனி | | | உத / கவிப்பு |
| சந் | | | |
| | ராகு | குரு, புத சூரி, செவ் | சுக் |

மால் | பொன் (right side)

சேய்

இது இடம் திருச்சி. தேதி 22.10.93 வெள்ளி. நேரம் பகல் 3.10 சூரிய உதயம் 6.08. அஸ்தமனம் 5.55. உதயம் கடகம். ஆருடம் ரிஷபம். உதயமே கவிப்பு. எப்படி? சூரியன் ரிஷபவீதியில். ஆருடமும் அதுவே. எனவே உதயமே கவிப்பு. எண்ணிக்கை 1 என்று எடுத்துக் கொண்டாலும், உதயமே கவிப்பாக வரும். உதய பலமில்லை. பலகால் ராசி. உதயாதிபன் 7ல் (சந்திரன்) அங்கேயே ராகு வெளிக்கட்டத்தில்.

உதயத்தில் புதன் வலிவு என்றாலும், 7ல் ராகு அதிக வலிவு பெறுகிறான். மேலும் சாமக்கோளில் எந்தக்கிரகமும் உச்சம் பெறவில்லை. இன்னும் 7க்குடையவன் (எதிர் அணி) சனி நீசம், 11ம் இடம் ஆருடம். பிருஷ்டோதய ராசியானாலும், 10க்குடைய செவ்வாயால் பார்க்கப்படுகிறது. உள்கட்டம் வெளிக்கட்டம் 2லும் செவ். நிற்பது குறிப்பிடத்தக்கது. 6க்குடையவன் குரு. அவன் கன்னியிலிருந்து ஆருடத்தை 9ம் பார்வையாகப் பார்க்கிறான். 7ம் வீட்டிற்கும் அவன் பார்வை (5ம் பார்வை) விழுகிறது.

எனவே எந்தக்கட்சியும் கோல்போட்டு வெற்றிபெறுவது சாத்தியமில்லை. எக்ஸ்ட்ரா டைம் (அதிக நேரம்) தரப்பட்டாலும், இதே நிலைதான். எனவே டைபிரேக்கரில்தான் வெற்றி தோல்வி நிர்ணயிக்கப்படும். இந்திய அணி பீஹார் இளைஞர் 4க்கு 3 என்ற கோல் போட்டு வெற்றி வாகை சூடுவார்கள் என்றும் தீர்மானித்து எழுதியும்வைத்தேன். எப்படி? கடகத்திற்கு கதிர் 3. செவ்வாய்க்கு கதிர் எழு. ஏற்கனவே செவ். ஆருடத்தை உள் கட்டம் வெளிக்கட்டத்திலிருந்து பார்வை 7ம் வீடு மகரத்தில் செவ். உச்சம் 7ல் 3 போனால் 4. எனவே 4 கோல்கள் கணக்கில் பீஹார் இளைஞர்கள் வெற்றி பெற்று வாகை சூடினர். விந்தையில்லை இது.

சாமக்கோள் ஆருடம் வாழ்க

## மந்திர ஸித்தி உண்டா?

இந்த கேள்வி பம்பாயில் 20-6-85 வியாழன் மாலை 4.28க்கு கேட்கப்பட்டது என்னிடம். சாமக்கோள் கட்டம் பின்வருமாறு. பம்பாய் சூரிய உதயம் 6.02. சூரிய அஸ்தமனம் 19.08 பி.எம். உதயம் மீனம். ஆருடம் கன்னி. கவிப்பு துலாம்.

| | | மால் | | பொன் | |
|---|---|---|---|---|---|
| பு க | உத | சுக் ராது | | சூ,செவ் புத,சந் | |
| | சனி | | | உத / கவிப்பு | சேய் |
| ம ந் | குரு (வ) | | கவிப்பு | | |
| | | | கேது, சனி (வ) | ஆ | |
| | மதி | | பாம் | கதிர் | |

குலதெய்வப்பிரச்னை பாடத்தில் தான் (உதய) லக்னத்திற்கு 2ல் ராகு, 8ல் கேது இருந்தா குலதெய்வத்தை மறந்த தோஷமும், பிதுர்க் கடன் சரிவரச் செய்யாமையும் எடுத்துக் காட்டப்படுகிறது என்று விளக்கம் கூறினேன். இங்கே எவ்வளவு துல்லியமாக ராகுவும் கேதுவும் அதை எடுத்துக்காட்டுகின்றன பாருகள். ராகு சுக்ரனோடு சம்பந்தம். சனி கேதுவுடன் அதை எடுத்துக்காட்டுகின்றன பாருங்கள். ராகு சுக்ரனோடு சம்பந்தம். சனி கேதுவுடன் சம்பந்தம். சனி (வ) உச்சகிரகம் வக்ரமடைந்தால் நீச பலனையே தரும். நீச கிரகம் வக்ரமடைந்தால் உச்சபலனயேதரும். குரு வக்ரம் குறிப்பிடத்தக்கது இங்கு.

மந்திர ஸித்திக்கு வைராக்யம் அவசியம். இடைவிடா தியானமும் அவசியம். வைராக்கியத்திற்கு அதிபதியான செவ். பூர்வபுண்யஸ்தானமான 5ல் நீசம். வக்ர குரு பார்வை வேறு. சனியின் பார்வை வேறு. எனவே மந்திர ஸ்த்தி பெற வேண்டும் என்ற ஆசை அவருக்கு உதயத்திலேயே சுக்ரன் வேறு உச்சம். 8ம் இடம் கவிப்பு. சுக்ரன் வீடு. அங்கேய பாம்பு.

எல்லாவற்றையும் கருத்தில் கொண்டு, குலதெய்வத்தின் அருள் இல்லை. பிதுர்க்கள் ஆசிர்வாதமும் இல்லை. தங்கள் முயற்சியில் பல தடங்கல் வந்துகொண்டேயிருக்கின்றன. குலதெய்வ வழிபாடும், பிதுர்க்கடனும் செய்துவிட்டு மந்திரம் பற்றி யோசிக்கவும், என்று சூசகமாக

விடை அளித்தேன். பல தடங்கல் வருவது உண்மை. ஆனால் தாங்கள் கூறும் காரணம் நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்று ஒரேயடியாகச் சாதித்துவிட்டார். மந்திர ஸித்தி எங்கே கிடைக்கும்? மந்திர ஸித்தி சாமான்ய விஷயமாக என்ன?

*****

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 20
## சில விளக்கங்கள்

பாடம் 19 வரை நடந்துவிட்டது. பல மாணவர்கள் சந்தேக விளக்கங்கள் கேட்டு இருக்கின்றனர். எல்லாருமே இதில் ஆர்வம் காட்டி, பலன் சொல்லத்துடிக்கும் நிலையில் உள்ளனர். என்பதை நன்கு அறிவேன். சாமக்கோள் ஆருட கிரக நிலை அன்றைய (அப்போதைய) கிரக நிலை, உதயம், ஆருடம், கவிப்பு எல்லாமே போட்டுவிடுகிறோம். பலன் சொல்வது எப்படி என்று தெரியவில்லை. எப்படி ஆரம்பிப்பது என்று வழிகாட்டுங்களேன் என்று கேட்டுள்ளனர். மிக்க மகிழ்ச்சி.

பாடம் 16ஐ மீண்டும் படியுங்கள். அதில் 3 பிரச்சனைகளுக்கு பலன் சொல்லும் வழிமுறைகள் தரப்பட்டுள்ளன.

மீண்டும் சிலவற்றை திரும்பப் பார்ப்போம். ஏற்கனவே உதயம், ஆருடம், கவிப்பு எப்படிக் கண்டுபிடிப்பது என்று அறிவோம். சாமக்கோள் ஆருட கிரகநிலைகள் அப்போதைய கிரகநிலைகள் பாவ நிர்ணயம் செய்ய உதவுகின்றன. அதாவது பலன் சொல்ல வழிகாட்டுகின்றன என்றும் அறிவோம்.

உதயம், ஆருடம், கவிப்பு 3ஐயும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். உள்ராசிக் கட்டம், வெளிராசிக்கட்டங்களில் என்ன என்ன கிரகங்கள் இருக்கின்றன என்ன பார்க்கவும் அவற்றில் எவை உச்சம், நீச்சம், ஆட்சி, நட்பு, பகை என்பதையும் அறியவும். பிறகு உதயம், கண்டங்கள் (கேந்திரங்கள்) பார்க்க. அதாவது 4, 7, 10ம் வீடுகள் (4 நீர்க்கீழ்ராசி (Nadir), 7 பாட்டு ராசி (Descendant), - 10 உச்சி (Zenith) ) என்றழைக்கப்படும். அதன் பின்பு ஆருடத்தைக் கவனிக்கவும். பிறகு 1,5,9 கோணங்களைப் பார்க்கவும்.

இந்தப்பரிசிலனையிலேயே பிரச்னம் (ஆருடம் கேட்பவரின் கேள்விக்கு) பதில் அடங்கியிருக்கும். அப்படியும் இல்லை என்றால், குரு, புதன், நின்ற ராசியைப் பார்க்கவும். அதிலும் ஒன்றும் புலப்படவில்லையானால் உதயக்கோள் நின்றராசியைப் பார்க்கவும். என் அனுபவத்தில் கடைசி 2 விதிகளை பின்பற்ற அவசியம் இதுவரை ஏற்படவில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் ஆருடப்பலன் சொல்வது அவ்வளவு எளிதல்ல. ஆரம்பத்தில் மலைப்புத் தோன்றுவது சகஜம். அதே சமயம் ஆருடப்பலன் சொல்வது அவ்வளவு கடினமும் அல்ல. அனுபவமே சிறந்த வழிகாட்டி. பழகப்பழக தானே தைரியம் வந்துவிடும்.

மிக உன்னதமான ஒரு கலையைக் கற்றுக் கொள்ளும் போது ஆரம்ப காலத்தில் தயக்கம், சந்தேகம், அதைரியம் இதெல்லாம் ஏற்படும். கிரகநிலைகளின் தெளிவு, நமக்கு ஒரு துணிவை உண்டாக்கும். அதிலிருந்து தைரியமும் பிறக்கும். முயற்சியுடையார், இகழ்ச்சியுடையார் என்பதையும் நினைவில் வைத்துக்கொள்ளவும். உழைப்பும், உறுதியுமே நம் உற்ற துணைவன். அதையும் மறக்கக்கூடாது.

ஆரம்ப காலங்களில் பலன்கள் தவறிப்போனால் அதைரியப்பட வேண்டாம். மனம் சளைக்க வேண்டாம். எங்கு தவறு நடந்திருக்கிறது? எப்படி? என்று ஆராய்ந்தால் போதும். நமக்குப் பல உண்மைகள் புலப்படும். இது மாதிரி தவறுகள் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளலாம் நிச்சயமாக. இன்னும் ராசிகளின் வலிமை, உச்ச, நீச்ச இத்யாதி கிரகநிலைகளின் வலிமை, பார்வையில் வலிமை எப்படி என்றெல்லா விவரங்களையும் சற்றே விரிவாகப் பார்ப்போம்.

உபயராசி 3 பங்கு வலிது. ஸ்திரம் 2பங்கு, சரம் 1 பங்கு. உச்சகிரகம் 10 பங்கு வலிது. ஆட்சி கிரகம் 2பங்கு. நட்பு உள்ளபடியே. பகை 1/2 பங்கும், நீச்சம் 1/4 பங்கும் வலிது. கோள்களிலேயே பாம்பு மிக வலிது. புதனுக்கு செவ்வாய் வலிது. புதன், செவ்வாய்க்கு சனி வலிது. புதன், செவ், சனி இவற்றிற்கு குரு வலிது. புதன், செவ், சனி, குரு வெற்றிக்கு சுக்ரன் வலிது. புதன், செவ், சனி, குரு, சுக். இவைகளைவிட சந்திரன் வலிது. புதன், செவ், சனி, குரு, சுக், சந். இவை ஆறிற்கும் சூரியன் வலிது.

சாமக்கோள் ஆருடத்தில் ராசிகளுக்கும் பார்வை உண்டு
உபயராசிகள் 7ம் இடம் நோக்கும் அதன் வலிவு முழுமை.
ஸ்திரராசிகள் 9ம் இடம் நோக்கும் அதன் வலிவு 1/2 பங்கு
சரராசிகள் 11ம் இடம் நோக்கும் அதன் வலிவு 1/4 பங்கு
சூரி, சந், புதன். சுக். 4லும் 7ம் நோக்கும் முழுவலிது.

செவ்வாய் 4,8 நோக்கும் 4 நோக்கு கால் பங்கு 8ம் இடம் 1/8 பங்கு.
குரு 5,9 நோக்கு 1/4 பங்கு வலிது.
சனி 3,10 நோக்கு 3 கால்பங்கும், 10 முக்கால்பங்கும்
பாம்பிற்கு 3,11 நோக்க - 2ம் 1/4 பங்கே வலிது.




கிரகங்களின் திக்கைப் பற்றி அறிவோம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியன் | - கிழக்கு | குரு | - | வடகிழக்கு |
| சந்திரன் | - வடமேற்கு | சுக் | - | தென்கிழக்கு |
| செவ்வாய் | - தெற்கு | சனி | - | மேற்கு |
| புதன் | - வடக்கு | பாம்பு | - | தென்மேற்கு |

இதையெல்லாம் எப்படி கார் நினைவில் வைத்துக் கொள்வது என்று மலைக்க வேண்டாம். 6 x 6 அட்டையில் இல்லையென்றால் சௌகரியம்போல் ஒரு அட்டையில் ராசிக்கதிர்கள், கிரக கதிர்கள், கிரக்காதம், இந்தப்பாடத்தில் குறிப்பிட்ட சில விஷயங்களையும் தீவிரமாக யோசித்து உங்கள் கண்களில் படும்விதத்தில் வைத்துக்கொள்ளவும். தினமும் அதைப் பார்ப்பதால் மனதில் பதியும். இதை வீட்டுப்பாடமாக எடுத்துக் கொண்டு எழுதி அனுப்பவும் எனக்கு உடனே. அட்டையை நீங்கள் வைத்துக் கொள்ளுங்கள். கடிதத்தில் (75 பை) எழுதி அனுப்பினால் போதும்.

*******

ஸ்ரீ மகா கணபதி துணை — நவக்கிரக சகாயம்

சாமக்கோள் ஆருடம்

பாடம் - 21

## மேலும் சில விளக்கங்கள்

ஆரம்ப பாடத்தில் சாமக்கோள் ஆருடத்தின் மூலம், சினேந்திர மாலை என்று பார்த்தோம். வெக அருமையான ஆருட நூல். அந்த நூலில் மொத்தம் 23 காண்டங்கள் உள்ளன. முதலில் இருப்பது காண்டப் பொழிப்பு. அடிப்படை விஷயங்கள் எல்லாமே அவற்றில் விவரமாகக் கூறப்பட்டுள்ளது. அதையெல்லாம் முந்தியபாடங்களில் பார்த்தோம். அடுத்து வருவது தாது மூல, ஜீவகாண்டங்கள். இது பற்றிய பாடமும் உங்களுக்கு அனுப்பப்பட்டுவிட்டது. அடுத்த 2 காண்டங்களும் மிக முக்கியமானவை, நட்ட முட்டி சிந்தனை காண்டமும், நலந்தீங்கு காண்டமும். இதுபற்றிய விவரங்களும் உதாரணங்களோடு விளக்கப்பட்டுவிட்டன. நலத்தீங்கு காண்டத்தில் அநேகமாக எல்லா விஷயங்களுமே அடங்கும் என்று கூறலாம்.

இது தவிர பிணி, மரணம், உண்டி, கனவு, சகுனம், மங்கலகாண்டம், காமம், மகப்பேறு, சுரிகை(சுத்தி), சல்லியம் (புதையல்), கீழ்நீர்க் (காண்டம்), படைவரவு, யாத்திரை, ஆற்று நீர்வரவு, மழைவரவு (பெய்தல்) அஃகமலிவு, மரக்கலவரவு (கப்பல்), மாநிமித்தம் ஆகிய காண்டங்களும் உள்ளன.

கால மாற்றத்தின் அடிப்படையில் பார்க்கும்போது சில காண்டங்களை ஒதுக்குவதைத்தவிர வேறு வழியில்லை. பழையன கழிதலும், புதியன புகுதலும் என்ற விதிப்படியும் இவை பொருந்தும். உண்டி, கனவு, சுரிகை (சுத்தி), சல்லியம், கீழ்நீர், படைவரவு, ஆற்று நீர்வரவு, மழைவரவு, அஃக விலைமலிவு, மரக்கல வரவு இந்த காண்டங்கள் இக்காலத்திற்கு பொருந்தா. காரணம் விளக்கத் தேவையில்லை.

ஒரே ஒரு முறை என்ன கனவு கண்டேன் என்று ஒருவர் கேட்டார். தகுந்த பதில் கூறப்பட்டது, மிகச் சரியாக. அதன் பிறகு யாரும் கனவுப் பற்றிக் கேட்கவில்லை என்னிடம். உண்டி காண்டமும் (என்ன சாப்பாடு) அப்படியே. திருவண்ணாமலை ஸ்ரீ ரமணாஸ்ரமம் அல்லியந்தல் அருணாசலத்தோடு (என் குருநாதர்) சென்றபோது, என்ன சாம்பார் இருக்கும் என்ற கேள்விக்கு, முள்ளங்கி சாம்பார் என்று பதில் அளித்தார். மிகச்சரியாகவும் இருந்தது. நான் கூட நம்பவில்லை. ஆசிரமங்களில் முள்ளங்கி சாம்பார் என்று பதில் அளித்தார். ஆசிரமங்களில் முள்ளங்கி உபயோகிக்கமாட்டார்கள். ஆனால் பக்தர் காணிக்கையாக அளித்த முள்ளங்கியை உபயோகித்தனர், அவர் மனம் நோகக்கூடாது என்பதற்காக. அதன் பிறகு உண்டி காண்டம் பற்றி பிரச்சனைகள் வரவில்லை என்னிடம். நிற்க. இன்று வாழ்க்கையில் எவ்வளவோ பிரச்சனைகள் வருகின்றன. அதற்கு விடை காண முடியும், சாமக்கோளில். குல தெய்வப்பிரச்சனை, மந்திர ஸித்தி, விளையாட்டுகளில் சாமக்கோள் ஆருடம் இவையெல்லாம் பார்த்தோம். கூட்டு வியாபாரம் செய்யலாமா, என்ன தொழிலில் இறங்கலாம், பையனுக்கு மேல் படிப்பிற்கு கல்லூரியில் இடம் கிடைக்குமா? என் கடன் எப்போது தீரும்? ஷேர்மார்க்கெட் வியாபாரம் செய்யலாமா, ஆபரேஷன் செய்து கொள்வது அவசியமா? நான் கருத்தரித்திருக்கிறேன் என்ன பயிர் போடலாம்? வியாபாரத்தை விஸ்தரிக்கலாமா? கணவன் மனைவி உறவு நிலை இப்படி எவ்வளவோ பிரச்சனைகள். இது தவிர இன்னும் பல பிரச்சனைகள் ஆராயப்பட்டதை வரும் பாடங்களில் விளக்குவோம்.

*தபால் ஊழியர்கள் வேலைநிறுத்தம் :*

*தபால் ஊழியர்கள் வேலை நிறுத்தம். அண்மையில் நடந்த தபால் ஊழியர்கள் வேலை நிறுத்தம் பற்றிய ஒரு கேள்வியை என் நண்பர் தொடுத்தார். வேலை நிறுத்த எப்போது முடியும் என்று சாமக்கோளில் கூறமுடியுமா? என்று. முடியும் என்று பதில் அளித்துவிட்டு கட்டத்ததைப் போட்டேன். அதன் விபரங்கள் பின்வருமாறு.*

| | 10.23 மதி | 11.20 | 12.17 | |
|---|---|---|---|---|
| பாம்பு 9.26 | கவிப்பு | | உத கேது | | மந் |
| | சனி | | | | புகர் |
| 8.29 கதிர் 7.32 | | | | ஆருடம் | |
| சேய் | | ராகு, சூரி. செவ். புத. சுக் | குரு | சந் | |
| | 6.35 | | பொன் | மால் | |

*ஆருடம் சிம்மம். நேரம் பகல் 11.24. வியாழன். தேதி 9.12.1993. இடம் திருச்சி. சூரிய உதயம் 6.26. அஸ்தமனம் 5.48. உதயம் பிருஷ்டோதயம். உதயாதிபன் சுக். 3ல். சனி ஆருடத்தைப் பார்க்கிறார். 3ம் பார்வையாக ஆருடதிபதி சூரியன் தன் வீட்டிற்கு 5ல், உதயதிலிருந்து 9ம் இடம். 10ம் இடத்திற்கு விரயஸ்தானம் 9. எனவே வேலைநிறுத்தம் ஆருடம் கேந்திரம். சனி பார்வை. எனவே வேலை நிறுத்தம் நீடிக்கும். 2,5க்குடை புதன் உச்சம். பொருளாதார ரீதியில் தொழிலாளர்கள் கோரிக்கை வலுப்பெறுகிறது. 11ம் இடம் கவிப்பாக வந்தால் நஷ்டம் யாருக்கு? அரசாங்கத்திற்கு, மேலும் தொழிலாளர்களுக்குமேதான். வேலை நிறுத்த நாட்களுக்கு சம்பளம் இல்லையென்று அரசாங்கத்தின் அறிவிப்பு. நிற்க.*

*வேலை நிறுத்தம் எப்போது முடியும்? சனிக்கிழமை அதாவது 4நாள் கழித்து. எப்படி நிர்ணயம் செய்யப்பட்டது. வேலை நிறுத்தம் ஆரம்பித்த அன்று உத்திரநட்சத்திரம் சிம்மராசி. உதயம் முதல் சிம்மராசி வரை எண்ண 4ராசி. 4 நாட்கள். மேலும் 3க்குடைய சந்திரன் குருவைத் தாண்ட வேண்டும். குரு ஸ்வாதியில். குருவை ஏன் எடுக்க வேண்டும்? குரு 6ல் உள்கட்டம், வெளிக்கட்டம் 2டிலும், 6ம் இடம். வேலை நிறுத்ததைக் குறிக்கும். மேலும் குரு தபால், தந்தி, இவற்றிற்கு காரகத்துவம் பெறுகிறது. (Planet of Communication ..................... மேலும் 8.11க்கு உடையவர்.)*

அவரைத் தாண்டிய பிறகே வேலை நிறுத்தம் முடிய வாய்ப்பும். எனவே சனிக்கிழமை என்று தீர்மானிக்கப்பட்டது. அதன்படியே சனிக்கிழமை வேலை நிறுத்தம் முடிந்தாக அறிவிக்கப்பட்டது. இதுதான் சாமக்கோள் ஆருடம்.

மேலும் 7ல் பாம்பு மிக வலிது. சனியின் பார்வை வேறு. சந்திரன் விருச்சிகராசியில் பிரவேசித்து, சனியின் பார்வையைப் பெற்று (விருச்சிகத்தில் சந்திர நீச்சம் என்பது குறிப்பிடத்தக்கது) பாம்பைத் தாண்டிய பிறகு, தபால் பட்டுவாடா வழக்கம் போல் நடைபெறும் என்றும் தெரிவித்தேன். ஞாயிறு விடுமுறை. திங்கள் முதல் வழக்கம் போல் தபால் பட்டுவாடா. திங்கள் கேட்டை நட்சத்திரம் என்பதும் குறிப்பிடத்தக்கது. 2, 5க்குடைய புதன் நட்சத்திரம், தொழிலாளர்கள் பொருளாதார ரீதியில் வெற்றியும் பெற்றனர்.

*****

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 22

## என் கணவர் தனியாக எப்போது வியாபாரம் செய்வார்?

அன்பார்ந்த மாணவர்களே, ஜோதிட அபிமானிகளே 1994 ஆங்கிலப் புத்தாண்டு வாழ்த்துக்கள். 1993ல் 21 பாடங்கள் அனுப்பப்பட்டன. 1994ல் 22வது பாடம் அனுப்பப்படுகிறது. மேலும் பல புதிய பிரச்சனைகளையும் அவற்றை அணுகும் முறையையும் விளக்கி, இன்னும் பல பாடங்கள் வரவிருக்கின்றன, என்பதையும் இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டுள்ளேன். நிற்க.

மேலே குறிப்பிட்ட கேள்வியோடு என்ன ஒரு பெண்மணி அணுகினாள். அதன் விவரங்கள் கீழே காண்க. இன்னும் பல குடும்பங்கள் கூட்டுக்குடும்பமாகவே வாழ்கின்றன. அவற்றில் பெற்றோர் அல்லது சகோதரர் ஆதிக்கம் இருக்கவேச் செய்யும். நடைமுறைப்படி சில பெண்களுக்கு இது பிடிப்பது இல்லை. எத்தனை நாளைக்கு அப்பா அல்லது அண்ணன் கையையே எதிர்பார்த்து வாழ்வது? குடும்பச்செலவிற்கு எல்லாம் பணம் தந்துவிடுகிறார்கள். தனியாகவே குடித்தனம் செய்கிறோம். அதில் ஏதும் குறை கூறுவதற்கில்லை. எங்கள் தேவைக்கு, குறிப்பிட்ட நேரத்தில், நாளில் பணம் கிடைப்பதில்லை. அதுதான் பிரச்சனை. கேள்வியின் பின்னணி புரிந்துவிட்டதா?

வழக்கம்போல் கட்டத்தைப் போட்டேன். இடம் திருச்சி. தேதி 29.12.93, புதன்கிழமை. பகல் 12.02 மணி. சூரிய உதயம் 6.36. அஸ்தமனம் 5.58. பகல் நேரம் 11மணி 22நிமி. அல்லது 682 நிமி. 12-ஆல் வகுக்க 56 $\frac{10}{12}$ நிமி. 57 நிமி. எடுத்துக் கொள்ளல் வேண்டும். சூரிய உதயத்துடன் 57 நிமி ஐக் கூட்ட 7.33. தமிழ்த்தேதி 14. தேதிக்கு 2 நிமி. விதம் 28 நிமி. கழிக்க 7.05 வரை தனுசு. உதயம் மிதுனத்தில் விழுகிறது. இந்தப் பெண்மணி தன் கணவரின் வியாபாரம் பற்றிக் கேட்பதால் மிதுனத்திற்கு நேர் 7ம் இடமான தனுசுவை உதயலக்னமாக எடுக்க வேண்டும். பிறகு பிரச்சனையை அந்த உதய லக்னத்தில் அடிப்படையில் அலக வேண்டும். அதுதான் சிறந்த வழி. நூல்களின் விதியும் அதையே தான் கூறுகின்றன. அவற்றை முதலில் பார்ப்போம். உதயம் - தனக்கும், 2ம் இடம் குடும்பம் பற்றியதும், 3ம் இடம் சகோதரர்களுக்கும், 4ம் இடம் தாயாருக்கும், 5ம் இடம் பித்ருக்களுக்கும், 6ம் இடம் சத்ருக்களுக்கும், 7ம் இடம் களத்திரத்திற்கும், 8ம் இடம் ஆயுளுக்கும், 9ம் இடம் தகப்பனாருக்கும், 10 இடம் செய்தொழிலுக்கும், 11ம் இடம் லாபத்திற்கும், 12ம் இடம் நஷ்டத்திற்கும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று. ஆனால் நடைமுறையில் சில சிக்கல்கள் உண்டு. அவற்றைக் சந்தித்தும் இருக்கிறேன். 5ம் இடம் பித்ருக்களுக்கு என்று கூறப்பட்டிருப்பினும் எந்த வழிப்பிதுர்க்கள் என்ற விளக்கம் இல்லை. தாய் வழியா, தகப்பன் வழியா? மேலும் 5ம் இடம் புத்திரஸ்தானம். ஜோதிட உலகம் கூறும் உண்மை இது. அதை மறுக்க முடியாது. ஒருவர் புத்திரனைப் பற்றி கேட்கிறார் என்று வைத்துக்கொள்வோம். எந்த வீட்டை எடுப்பது? நியாயமான சந்தேகம். ஆனால் 5ம் வீடு பித்தருக்களுக்கு என்று தானே குறிப்பிடப்பட்டிருக்கிறது? மேலும் 3 இடம் இளைய சகோதரம், 11ம் இடம் மூத்த சகோதரம். இவர்களைப் பற்றி பிரச்சனை எழுந்தால் இளைய சகோதரனுக்கு 3ம் இடத்தை எடுக்கலாம். மூத்த சகோதரனுக்கு எந்த இடத்தை எடுப்பது? 5ம் இடம் புத்திரஸ்தானம் என்று வைத்துக் கொண்டே பார்ப்போம். பிரச்சனை கேட்பவர் ஏதும் சொல்லாமல் என் பையன் ஓடிப்போய்விட்டான் என்றால் எத்தனையாவது பையனாக இருக்கக்கூடும் என்ற சந்தேகம் ஜோதிடருக்கும் வரும். எப்போதும் மூத்த பையனே ஓடிப்போக வேண்டும் என்ற கட்டாயம் இல்லையே. 5வது பையனைக் காணவில்லை என்று வருகிறார் என்ற வைத்துக்கொள்வோம். எந்த வீட்டை எடுப்பது? முதல் புத்திரஸ்தானத்திலிருந்து அதையும் சேர்த்து 3 வீடுகள் தள்ள 9வது வீடு 5வது பையனைக் குறிக்கும் தீர்க்க ரீதியில்.

5, 7, (9) 11, 1 இப்படி இது சரியா? நூல்களில் விளக்கம் இல்லை.
(1) (2) (3) (4) (5)

இது தவிர இன்னும் சில உறவுகளையும் பார்ப்போம். என் மருமகளுக்கு ஊசி போட்டு, ஸெப்டிக் ஆகிவிட்டது. ஆபரேஷன் செய்து , செய்து, மீண்டும் ஆப்ரேஷன். கைக்குழந்தைக்காரி. உயிருக்கு ஆபத்து இல்லையே? சாமக்கோளில் பார்த்துச் சொல்லுங்கள் என்ற பிரச்சனை வந்தால் ? எந்த வீட்டை எடுப்பது? மாப்பிள்ளை போக்கு சரியில்லை ஸார், பணத்தைப் பாழ்பண்ணுகிறார். ஏகப்பட்ட நஷ்டம். பெண்ணையும், பேரனையும் வீட்டிற்கு அழைத்து வந்துவிட்டேன். நிலைமை சரியில்லை என்று. இது எத்தனை நாளைக்கு நீடிக்கும்?

எத்தனையாவது மருமகள்? எத்தனையாவது மாப்பிள்ளை. அவர்கள் சொல்லவில்லை. ஜோதிடருக்கும் தெரியாது. எப்படி ஆருடப்பலன் சொல்வது? சித்தப்பாவிற்கு ஹார்ட் அட்டாக். பிழைப்பாரா? அப்பாவிற்கு தம்பியோ, இல்லை அம்மாவின் தங்கை சித்தியின் கணவரா? என் மைத்துணிக்கு மேஜர் ஆபரேஷன்? அவள் உயிருக்கு ஆபத்தில்லையே? பிழைப்பாளா? ஸார் பெண் பார்க்கப் போன இடத்தில் எதிர்பாராத பிரச்சனை உருவாகிவிட்டது. உறவினர் வீட்டில்தான் தங்கிப் பெண் பார்த்தோம். வரும்போது எங்கள் உறவினர்களே அந்தப்பெண் நம் குடும்பத்திற்கு வேண்டாம். அவள் மீது முனி வருகிறது (தெய்வகுற்றம் உள்ளவள்) என்கிறார்கள். பெண்ணைப் பார்த்தால் எந்த குற்றமும் சொல்ல முடியாது. கண் தெளிவாக உள்ளது முகத்தில் கவர்ச்சியும் இருக்கிறது. எங்களைப் பார்த்துப் பேசிய வகையில், எந்தக் குற்றமும் கண்டுபிடிக்க முடியவில்லை. என்ன செய்வதென்றே தெரியவில்லை. உங்கள் ஆருடம் என்ன சொல்கிறது என்று கேட்கிறார்கள்.

ஜோதிடருக்கு தலைவலி போதுமா? கற்பனையில் எழுதவில்லை. என்னிடம் கேட்கப்பட்ட பிரச்சனைகளின் மாதரிகளில் சிலவற்றையே குறிப்பிட்டிருக்கிறேன்.

9.56 மதி 10.53 11.50 மந்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாம்பு 8.59 | | ஆருடம் | கேது | உத. சந். | |
| | சனி / கவிப்பு | 12.02. பி.எம். பகல் 29.12.1993 திருச்சி, புதன் கிழமை | | | புகர் |
| 8.02 கதிர் | | | | | |
| 7.05 சேய் | சூரி.செவ் புத.சுக் (உதயம் கணவர்) | ராகு | குரு | | மால் |

பொன்

இதற்கு வழி என்ன? இந்த பிரச்சனைகளைப் பார்த்துவிட்டு, அடுத்த பாடத்தில் வழிகளைப் பார்ப்போம்.

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 23
## இடைச்செருகலும், நேரடி உதயமும்

ஏற்கனவே முந்திய பாடத்தின் உறவு முறைகளைத் தீர்மானிப்பதில் உள்ள கஷ்டங்களையும், தெளிவற்ற விதிமுறைகளையும் பற்றிப் பார்த்தோம். உதாரணத்திற்கு ஒரு பிரச்சனையும் அலசினோம். அனுபவத்தின் வாயிலாகப் பார்க்கும்போது, இந்த விதிமுறைகள் மட்டும், இடைச்செருகலாகவே இருக்க முடியும் என்ற முடிவுக்கு வருவதைத் தவிர வேறு வழியில்லை, கம்பராமாயணத்தில் இடைச்செருகல் இருப்பதைப் போல.

இடைச் சொருகல் என்றால் என்ன? ஒரு பிரபலமான கவி அல்லது புலவர் பாடல்களுக்கு இடையில், வேறு ஒரு புலவர், தன்பாடலை நைஸாகப் புகுத்திவிடுத்து. அந்தப்பாடலின் பொருள், நயம், தரம், சந்தம், சுவை குறைவாகவே இருக்கும், மிகச் சிறந்த ரசிகர் ஒருவரால்தான் அதை இனம் கண்டுகொள்ள முடியும். காலஞ்சென்ற ரஸிகமணி டி.கே.சி. அவர்கள் கம்பராமாயணத்தில் உள்ள இடைச்செருகல்களை அழகாக எடுத்துக்காட்டி அவற்றை ஒதுக்கியும் விடுவார். அந்த வழியையே நாமும் பின்பற்றலாமே வடமொழி நூல்களிலும் இது உண்டு. சாஸ்திர விதிகளிலும் இந்த இடைச்செருகல் உண்டு. 5ம் இடம் பித்ருஸ்தானம் என்பது இதைக்காட்டிகொடுத்து விடுகிறது. உத்ர காலாம்ருதம், பலதீபிகை, ஜோதிஷப்பிரக்ஞானத்பிகை இந்த பிரதான நூல்களிலும், வேறு நூல்களிலும், 5ம் இடம் பித்ருஸ்தானத்தைக் குறிப்பிடுவதாகக் கூறப்படவில்லை. பூர்வ புண்யம், புத்திர ஸ்தானம், (தநயன்) மந்திரம், வேத நூலறிவு இப்படிப்பல விஷயங்கள்தான் கூறப்பட்டிருக்கின்றன. இந்த நூல்களின் அடிப்படையின் ஆதாரத்திலும் இதை இடைச்செருகலாகவே கொள்ள வேண்டும். அதுதான் சரி.

எனவே நேரடியாகவே உதயத்தைப் பிடிப்பது நல்லது. அதுதான் முறை. அது அடிப்படையிலும் பலன்கள் சரியாகவே வருகின்றன. ஜோதிடரைப் பொருத்த வரையில் எல்லாப் பிரச்சனைகளும் மூன்றாம் மனிதர்களுடையது தான். (THIRD PARTY)- அந்த அடிப்படையிலேயே அவர் பிரச்சனைகளை அலசுகிறார். அப்படிப்பார்ப்பதே காலச் சிறந்தது.

பாடம் 22ன் உதாரணத்தை எடுத்துக்கொண்டு. (உதயத்திற்கு) நேரடியாகப் பலன் சொல்லுவோம். உதயபலம் உண்டு. சிரோதயம் 2க்கு டைய சந்திரன் அங்கேயே ஆருடம். மேஷமாய் இருந்தாலும் சாமக்கோளில் சந்திரன் அங்கேயே. குருபார்வை உள்கட்டம் வெளிக்கட்டம் 2லிருந்தும். குரு 5ம் வீட்டில். பூர்வ புண்ய ஸ்தானம் - புதன் 4லில் உச்சம். எனவே குடும்ப வியாபாரம். 7ல் செவ். 6,11க்குடையவன் சகோதரனோடு சேர்ந்து வியாபாரம். கவிப்பு சிம்மம். சனியின் பார்வை 2 கட்டத்திலும். சாமக்கோளில் சனியின் 3ம் பார்வை. உள்கட்டத்தில் 7ம் பார்வை, கவிப்பிற்குடையவன் சூரியன் எட்டில், ஏற்கனவே 3ம் இடம் தைரிய ஸ்தானம் என்று பார்த்தோம். சுயமாக இவருக்கு தொழில் செய்ய தைரியம் இல்லை. 10 இடம் ராகு இதை நிருபிக்கிறது. ஆயினும் சகோதரகாரர்கள் செவ் 7ல் இருந்து 4ம் பார்வையாக ராகுவைப் பார்ப்பதாலும், உச்ச புதன் 10ம் வீட்டைப் பார்ப்பதாலும், இவர் சகோதரரேயே இவருக்கு வியாபாரம் அமைத்துக் கொடுக்கலாம் 20 நாளில். 20 நாள் எப்படி என்று ஏற்கனவே பார்த்தோம்.

******

ஸ்ரீ மகா கணபதி துணை — நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 24

## வியாபாரத்தில் கூட்டு சேரலாமா?

திருச்சியில் 27.7.1993 செவ்வாய் மாலை 6.48க்கு இந்தக்கேள்வி. அதற்கு பதில் என்ன, பார்ப்போம். சூரிய உதயம் 6.06. அஸ்தமனம் 6.36. தமிழ்த்தேதி 12 ஆடி மாதம். சூரிய அஸ்தமனத்திற்குப்பின் இந்தக் கேள்வி. உதயம் 57 நிமி. 6.36 + 57 நிமி - 7.33. இதிலிருந்து 12 x 2 = 24 நிமி. கழிக்க 7.09 வரை கடகம் உதயம். ஆருடம் மகரம். சூரிய வீதி மேஷம். ஆருடம் முதல் மேஷம் வரை எண்ண 4. கடகத்திலிருந்து எண்ண துலாம் கவிப்பு

| | | கதிர் | | ராகு | |
|---|---|---|---|---|---|
| சேய் 9.26 | | | கேது | புதன் கக். | |
| | சனி (வ) | | | உத சூக் | சந் |
| பொன் | ஆரு | | | செவ் | |
| மால் | | ராகு | கவிப்பு சந் | குரு | மந் |
| | | | புகர் | | |

உதயம், சந்திரன் வீட்டில் இருப்பதால் பலம் பெருகிறது. ஆருடத்தில் குரு நீச்சம். ஆயினும் உள்கட்டத்தில் இருக்கும் குரு ஆருடத்தைப் பார்க்கிறார். எனவே அதற்கும் பலம் ஏற்படுகிறது. கவிப்பில் சந். வெளிக்கட்டத்தில் புகர். துலாம்.

அவன் வீடு. எனவே கவிப்பும் வலுப்பெறுகிறது.

உதயத்திற்கு 10ல், 2ம் வீட்டுக்குடைய சூரியன் உச்சம். சந். ஸ்வக்ஷேத்திரம் புகர். தன்வீட்டில். புதனும் தன் வீட்டில் சுக். உடன்.

எனவே வியாபாரத்தில் கூட்டுச் சேரலாம். வெற்றியாகும். வியாபாரம் வீட்டிலேயே செய்யப்பட்டால் ஆச்சிரியப்படுவதற்கில்லை. காரணம் 4ம் இடம் வீடு. 4ல். சுக் சந்திரனுடன். மேலும் 9ல் செவ். கடகம் லக்னத்திற்கு யோககாரகனும் கூட. அவன் 12ம் வீட்டைப் பார்க்கிறான். புகன் வீடு, புதன் 6ல் சாமக்கோளில். 6,12ம் வீடு முதலீட்டைக் குறிக்கும். 6,9,12ம் வீடு இவையெல்லாம் ஜீவராசிகள். புதன், சுக் இருப்பதால் ரெடிமேட் ஆடைகள் உற்பத்தி.

ஐயா, உங்கள் ஆருடம் சூப்பர். எல்லாம் நூற்றுகு நூறு உண்மை என்று புகழ்ந்தார். இருங்கள் 10ல் சூரி. உச்சமாக இருப்பதாலும், உதயத்திலேயே சூரியன் இருந்து 7ம் வீட்டைப் பார்ப்பதாலும், அதுவே ஆருடமாக இருப்பதாலும், குரு நீச்சமாக இருப்பதாலும் லைசென்ஸ் இல்லாமல் வீட்டில் தொழில் நடக்கிறது. விரைவில் லைசென்ஸ் வாங்க ஏற்பாடு செய்யுங்கள். என்றேன். அசந்துபோய்விட்டார். அதே சமயம் மிகவும் ஆச்சரியமும் அவர் முகத்தில். அப்படியே செய்கிறோம் என்றார். போகிற போது, சாமக்கோள் ஆருடத்தில் இவ்வளவு விஷயங்கள் துல்லியமாக சொல்ல முடியும் என்பதை இன்றுதான் அறிந்து கொண்டேன். வாழ்க உங்கள் சாமக்கோள் ஆருடம். வாழ்க உங்கள் சேவை என்று பாராட்டிவிட்டுக் சென்றார்.

சாமக்கோள் மாணவர்களுக்கு, கீழ்க்கண்ட விஷயங்களை எப்போதும் கவனத்தில் வைப்பதும் அவசியம்.

1. கேள்வி கேட்கப்படும் நேரம்- கடிகாரம் சரியாக இருக்க வேண்டும். அதை டி.வி. அல்லது வானொலி நேரத்திற்கு சரிசெய்து கொள்வது நல்லது, தினமும் காலையில்.
2. வாராதிபன்- கிழமை
3. தேதி- தமிழ் + ஆங்கிலம்
4. அன்றைய சூரிய உதயம், அஸ்தமனம்
5. சூரிய வீதி எது?

மேற்கண்ட 5 விஷயங்களையும் எப்போதும் கவனத்தில் கொள்வது மிகமிக அவசியம்.

பலன் எப்படி சரியாக வருகிறது பார்த்தீர்களா?

தெய்வக்கோளாறு உண்டா? முனி பிடித்த பெண்ணைப்பற்றிய உண்மையைக் கண்டு பிடிப்போம்.

28-12-93. பகல் 1.25 செவ். திருச்சி. தமிழ்த்தேதி மார்கழி 13. சூரிய உதயம் 6.36. அஸ்தமனம் 5.58. உதயத்தில் பொன் (குரு) உச்சம் மிகவலிவு. ஆருடாதிபன் 2க்குடையவன் நீச்சம். எனவே இந்தக் கருத்து. சனி ஆருடத்தை 8 இடத்திலிருந்து (உள் கட்டம்) பார்க்கிறார்.

உறவினர்களின் விஷமத்தனத்தைக் காட்டுகிறது. 11ம் இடம் கவிப்பு. அதில் கேது, விஷமத்தனமான செய்தி சந்தேகத்தைக் கிளப்பும் வகையில் 11ம் இடம் கவிப்பு நஷ்டம். தெய்வக்கோளாறு இல்லை. அடித்துக் கூறலாம். ஆனாலும் 2 குடும்பத்திற்கும் ஏமாற்றம். ஒரு திருமணம் வதந்தியால் நடைப்பட்டுவிட்டது. வதந்தி எப்படி? 3ம் இடம், பேச்சு தொடர்பு ஸ்தானம். வதந்தியே.

| | 9.58 புகர் | 1.55 கவிப்பு | 11.52 மால் | | |
|---|---|---|---|---|---|
| மந் 9.01 | | | கேது | சந் | |
| 8.00 மதி | சனி | | | உத | 12.49 பொன் |
| | | | | ஆ | |
| 77.07 பாம்பு | சூரி, புத, செவ்,சுக் | ராகு | குரு | | சேய் |

கதிர்

இன்னும் தீவிரமாக விசாரித்ததில் அந்த பெண்ணைப்பற்றி சில தகவல்கள் கிடைத்தன. அந்த பெண்ணிற்கு புகை, அலர்ஜி, ஒவ்வாமை. சாம்பிராணி புகை அவளுக்கு ஒத்துக்கொள்ளாது. கண்களில் கண்ணீர் வரும். யாருடனும் பேசமாட்டாள். மலங்க, மலங்க விழிப்பாள். சற்றே மூச்சும் திணரும். இதையெல்லாம் பார்த்துவிட்டு அந்தப் பெண்ணிற்கு முனிபிடித்துவிட்டது என்று கதைகட்டி விட்டார்கள். அந்த பெண்ணின் தாயார் இந்த குழந்தையை பெற்ற ஒரு முனீஸ்வரன் கோயில் அருகில்

உள்ள வீடு. போதுமா! ஜோதிட ரீதியாக 8ம் இடத்தில் சனி அலர்ஜியைக் குறிக்கும். மேலும் உதயத்திற்கு 12ம் இடம் மிதுனம். அங்கேயே புதன். மிதுனம் சுவாச கோகங்கள் (நுரையீரல்)க்கு அதிபதி. இத்தனைக்கும் திறமையான இரு ஜோதிடர்களால் இந்த பெண்ணின் ஜாதகம் விவாகத்திற்கு பொருத்தம் பார்க்கப்பட்டது. அதன் பிறகே பெண் பார்க்கச் சென்றார்கள். 3வது நாளில்தான் இந்த பிரச்சனை.

******

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 25
## ஸ்ரீ பரமாச்சார்யாரின் ஸித்தி

இந்தப்பாடம் எழுதும்போது, துக்கத்தால் நெஞ்சு கனக்கிறது. கண்கலங்குகிறது. எழுத்தில் வர்ணிக்க இயலாத வேதனை உள்ளத்தை வாட்டுகிறது. எப்படியோ சமாளித்து எழுதுகிறேன் என்றால் மிகையாகாது.

அவருடைய ஆசிகள் பெற்று, ஜோதிடத் தொழிலில் இறங்கியதை நினைத்தாலே, மெய்சிலிர்க்கிறது. அவருடைய பாதுகைகளை என் நிறுவனத்தின் சின்னமாக (Symbol) வைத்து, ஸ்ரீபாதுகா பப்ளிகேஷன்ஸ் என்ற நிறுவனம் தொடங்கப்பட்டது. அதன்வாயிலாக ஜோதிடக்கடல் மாதமிருமுறை சுமார் 9 ஆண்டு காலம் வெளிவந்தது. அதற்கு ஸ்ரீமுகம் அருளியதையும் நினைத்து மகிழ்கிறேன் இவ்வேளையில்.

அவர் இழப்பு ஈடு செய்ய முடியாத ஒன்று. அவருடன் சந்தித்து உரையாடியதை என்றுமே நெஞ்சம் மறப்பதற்கில்லை. 1989 அவரைச் சந்தித்தபோது, நவக்கிரகங்களின் இதர சஉறஸ்ர நாமங்களையும் வெளியிடப்பணித்தார். அதுவும் புத்தகம் 6.50 ரூ. விலையில் இருக்கவேண்டும் என்று பணிந்தார். சனீஸ்வர பகவானின் சஹஸ்ரநாமம் வெளியிடப்பட்டது, 1993 மார்ச்சு சனிப்பெயர்ச்சியின் போது. மற்றவற்றையும் வெளியிட வேண்டும். அவர் அருளால் சாத்தியமாகும் என்று நம்புகிறேன். ஜோதிடக்கடலில் அவருடைய ஜாதகத்தை வெளியிட்டு திதி, வாரம், நட்சத்திரம், யோகம், காரணம் என்று பஞ்ச அங்கங்களை கொண்டே பலன்கள் அலசப்பட்டு பலரின் பாராட்டைப் பெற்றது.

இன்று அவருடைய ஸித்தி காலம் பற்றி சாமக்கோள் ஆருடத்தில் எழுத நேரிடுகிறது. மரணத்திற்குப்பின் எந்த கதியை ஒருவர் அடைவார் என்பதைப் பற்றி ஜோதிட சாஸ்த்திரத்தில் கூறமுடியும். இன்னும் மறுபிறவி உண்டா இல்லையா என்பதற்கெல்லாம் ஜோதிட சாஸ்திரத்தில் விதிமுறைகள் உள்ளன. சில நாடிகளில் முற்பிறவி பற்றிய விவரங்களும் பரவிக்கிடக்கின்றன. அவற்றையெல்லாம் பரிசீலனை செய்து ஆராய்ச்சி செய்ய சாத்தியமில்லை, பல காரணங்களால்.

இருப்பினும் மனிதருக்கு மறுபிறவி உண்டு. முற்பிறப்பும் உண்டு. அதில் ஐயம் வேண்டாம். சாமக்கோளில் ஒருவர் மரணம் அடைந்தபின் அவர் அடைகின்ற பதவி, பிறவி இவற்றைப் பற்றி விவரங்கள் தரப் பெற்றுள்ளன.

ஸ்ரீ பரமாச்சார்யார் மரணடையவில்லை. ஸித்தியடைந்தார் என்றே கூறவேண்டும். பத்திரிக்கையின் குறிப்புப்படி 8-1-1994 சனிக்கிழமை பிற்பகல் 3.20க்கு அந்த நிகழ்ச்சி. சாமக்கோளைப் போட்டுப் பார்ப்போம்.

இடம் காஞ்சிபுரம். நேரம் பகல் 3.20 தேதி 8-1-1994 ஸ்ரீமுக மார்கழி 24, அனுஷ நட்சத்திரம். தேய்பிறை துவாதசி திதி. சூரிய உதயம் 6.38, சூரிய அஸ்தமனம் 5.54. உதயம் துலாம். ஆருடம் கடகம் 10ம் இடம் கவிப்பு கன்னி. புதன் உச்சம் 12ம் இடம். புதன் உச்சம் அதிக வலிவைப்

9.34 மதி 10.30 11.26

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாம்பு 8.38 | | | கேது | | மந் 12.22 |
| 7.42 | சனி | | | ஆருடம் | புகர் 1.18 |
| கதிர் 6,46 | | | | | 2.14 |
| சேய் | சூரி,செவ் புதன்,சுக். | சந் ராகு | குரு உத | கவிப்பு | |

பொன் 3.10 மால்

பெறுகிறார். மேலும் 12ம் இடம் மோட்ச ஸ்தானம். எனவே அவருக்கு கிரக ரீதியாக சாயுஜ்ய பதவி நிச்சயம். ஜீவன்முக்தராகிவிட்டார். அல்லது கைவல்யம் அடைந்துவிட்டார் என்றும் சொல்லாம் மறுபிறவியும் கிடையாது. ஜீவன்முக்தர்கள் என்றென்றும் வாழ்வார்கள். அவருடைய ஆத்ம சக்தியை பக்தர்கள் உணரவே செய்வார்கள். நம் அஞ்சலியை அவருக்கு சமர்ப்பிப்போம்.

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 26
## கிரக நட்பு, பகை சில விளக்கங்கள்

ஜோதிட சாஸ்திரத்தில் கிரகங்களின் நட்பு, பகை (சத்ரு, மித்ரு) சமம் (Neutral) என்ற விளக்கங்கள் உண்டு. இவற்றிற்கும் சாமக்கோளில் கிரக நட்பு, பகை இவற்றிற்கும் முரண்பாடுகள் உண்டு. மேலும் சாமக்கோளில் சமம் என்ற நிலையும் கிடையாது.

மேலும் தற்கால மித்ரு, சத்ரு என்ற நிலையும் கிடையாது. இந்த முரண்பாட்டினால் சந்தேகம் எழவே செய்யும். எந்த விதிகளை பின்பற்றுவது என்று. உதாரணங்கொண்டு சில விளக்கங்களைப் பார்ப்போம் பிரச்னாருடைய பல நிர்ணயம் என்ற வடமொழி நூலில், சூரியாதிகளின் சத்ருக்கிரஹங்கள் என்ற சூத்திரங்களில் (21,22) சனிக்கு எல்லா கிரகங்களும் சத்ருக்கள், அவர்களுடைய வீடுகளும் சத்ருக்களேயாகும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது போலவே சூரியனுக்கு குருவைத் தவிர்த்து மற்ற சுக்கிரன், சந்திரன், செவ்வாய், புதன், சனி இவர்கள் சத்ருக்கள் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தவிதி நிச்சயம் பொருந்தாது எந்த வகையில் பார்த்தாலும். மேலும் மொழிபெயர்ப்பாளரே அர்த்தம் சரியில்லை இங்கு என்று விளக்கமும் தந்துள்ளார்.

பல ஜோதிட வித்வான்களால் இந்த நூல் சினேந்திர மாலையின் முன்னோடி என்றும், இதன் விரிவான மொழிபெயர்ப்பு அல்லது தமிழாக்கமே சினேந்திரமாலை என்றும் நம்பப்படுகிறது. மேலும் காலஞ்சென்ற மேதை கடலங்குடி நடேச சாஸ்திரிகள் இந்த நூலை தமிழில் மொழிபெயர்த்தும் உள்ளார். அதில் பல இடங்களில் ஆருடம், கவிப்பு, ராசிகளின் ஆண், பெண், விதிகள் இவற்றையெல்லாம் கூறும்போது இவ்விஷயமாக சினேந்திரமாலை கூறுவதாவது என்று சினேந்திரமாலையின் தமிழ் பாடல்களை அப்படியே காட்டி விளக்கங்கள் தந்துள்ளார். எனவே சினேந்திர மாலையின் பெருமையை உணர்ந்து கொள்ளலாம் நிச்சயம்.

வடமொழி நூலில் கூறப்பட்டிருப்பதால் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. முன்பாடத்தில் கூறியது போல இது ஒரு இடைச்செருகலாகவும் இருக்கலாம் இல்லையா?

இந்த கிரக சத்ரு, மித்ரு, சமம் பற்றிப் பல பஞ்சாங்கங்களில் பல வகையான விதிகள். எதைப்பின்பற்றுவது? சாஸ்திர ரீதியில் எது உண்மை? மிகவும் நியாமான கேள்வி. விடையைப் பார்ப்போம்.

சென்ற நூற்றாண்டில் வெளியான தமிழ் ஜோதிட நூல் சுந்தர சேகரத்திலும் பாவ-பல-நிர்ணய ஜோதிஷ பிரக்ஞானதீபிகை என்ற வடமொழி நூலிலும் கொடுக்கப்பட்டிருக்கும் விதிகள் ஒன்றேபோல் உள்ளன். கணித ஆதார மூலமாகவும் சரியாக உள்ளது. அந்த விதியைப் பார்ப்போம்.

*இன்ன கிரகத்துக்கு இன்ன ராசிகள் நட்பு வீடுகள், பகை வீடுகள் என்பது:*

கிரக நட்பு பகை இராசிகளைப் பற்றி அநேக நூல்கள் ஒன்றுக்கொன்று பல வித்தியாசமாகக் கூறப்பட்டிருந்தாலும் இதில் இதனடியில் கண்ட கணித ஆதாரத்தின்படி ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது.

அதாவது ஒரு கிரகத்துக்கு இன்னன்ன ராசிகள் நட்பு வீடுகள் என்று அறிவதற்கு அந்த கிரகத்தினுடைய மூலத்திரிகோண ராசிக்கு 3,5,7,8,12ம் இடங்கள் அந்த கிரகத்திற்கு நட்பு வீடுகளாம். இது பொது விதி. மேற்கண்ட இலக்கமுள்ள வீடுகளில் எந்த வீடுகளாவது அந்த கிரகத்திற்கு ஆட்சி, உச்சம், நீச்சம் என்று வந்தால் அவ்வித வீடுகளை நீக்கி மற்ற இலக்கமுள்ள வீடுகளை அந்த கிரகத்திற்கு நடபு வீடுகள் என்று அறிய வேண்டியது. இது விசேஷ விதி. திருஷ்டாந்தம் (உதாரணம்) சூரியனுக்கு மூலத்திரிகோண ராசி சிம்மம். அதற்கு 3ம் வீடாகிய துலாம் அந்த கிரகத்திற்கு நீச்ச வீடு ஆகையால் அதைத்தள்ளி மற்ற 5,7,8,12ம் இடங்களாகிய தனுசு, கும்பம், மீனம், கடகம் இந்த ராசிகள் அந்த கிரகத்திற்கு நட்பு, வீடுகளாம். இவ்விதமாகவே மற்ற கிரகங்களுக்கு அவரவர்களுடைய மூலத்திரிகோண ராசியில் இருந்து பார்க்குமிடத்தில் தள்ளவேண்டிய இடங்களாவன.

சூரியனுக்கு 3ம்,
சந்திரனுக்கு 3ம், ஏழும்
செவ்வாய்க்கு எட்டும்,
புதனுக்கு ஏழும்
வியாழனுக்கு எட்டும்
சுக்கிரனுக்கு எட்டும், பனிரெண்டும்
சனிக்கு மூன்றும், பனிரெண்டும்
இராகு கேதுகளுக்கு ஏழும், தள்ள வேண்டிய இடங்களாம்.

இனி பகை வீடுகளைப் பற்றிய பொது விதியாவது. அந்தந்த கிரகத்திற்குரிய மூலந்திரகோண ராசிக்கு 2,4,6,9,10,11-ம் இடங்கள் அந்தந்த கிரகங்களுக்குப் பகை வீடுகளாம். விசேஷ விதியாவது.

சூரியனுக்கு - 9ம்
செவ்வாய்க்கு - 4ம், 10ம்
புதனுக்கு - 10ம்
வியாழனுக்கு - 2ம், 4ம்
சுக்கிரனுக்கு - 6ம்
சனிக்கு - 9ம் இடமும் தள்ள வேண்டிய இடங்களாம்.

3 கிரகம் ஒரு ஜாதகத்தில் நட்பாகில் யோகவான். ஆனால் லக்கினத்துக்கு 6,8,12ம் இடங்களிலிருந்தாலும், அவ்விடங்களுக்கு அதிபரானாலும், அம்சையில் நீச்சமானாலும் யோகத்தை கொடார்கள்.

| கிரகங்கள் | நட்பு வீடுகள் | பகை வீடுகள் |
|---|---|---|
| சூரியன் | தனுசு, கும்பம், மீனம், கடகம் கன்னி, தனுசு, மேஷம் | மகரம், விருஷபம், மிதுனம், கன்னி, விருச்சகம் |
| சந்திரன் | கன்னி, தனுசு, மேஷம் | மிதுனம், சிம்மம், துலாம், மகரம், கும்பம், மீனம் |
| செவ்வாய் | மிதுனம், சிம்மம், துலாம், மீனம் | விருஷபம், கன்னி, தனுசு கும்பம். |
| புதன் | விருச்சிகம், மகரம், மேஷம் சிம்மம் | துலாம், தனுசு, கும்பம், விருஷபம், கடகம் |
| வியாழன் | கும்பம், மேஷம், மிதுனம், விருச்சிகம் | விருஷபம், சிம்மம், கன்னி, துலாம் |
| சுக்கிரன் | கும்பம், மேஷம், மிதுனம் விருச்சிகம் | விருஷபம், மகரம், மிதுனம், கடகம், கிம்மம் |
| சனி | மிதுனம், சிம்மம், கன்னி | மீனம், விருஷபம், கடகம், விருச்சிகம், தனுசு |
| இராகு, கேது | மகரம், மீனம், மிதுனம், துலாம் | தனுசு, கும்பம், மேஷம், கடகம், சிம்மம், கன்னி. |

இன்ன கிரகத்திற்கு இன்ன கிரகம் சத்ரு, மித்ரு என்பது

| கிரகம் | : | சத்துரு | மித்ரம் |
|---|---|---|---|
| சூரியன் | : | சனி, சுக்கிரன், ராகு, கேது | சந்திரன், செவ்வாய், குரு |
| சந்திரன் | : | இராகு, கேது | சூரியன், புதன் |
| செவ்வாய் | : | புதன், இராகு, கேது | சூரியன், சந்திரன், குரு |
| புதன் | : | வியாழன் | சுக்கிரன், சனி |
| வியாழன் | : | புதன், சுக்ரன் | சூரியன், சந்திரன், செவ்வாய் |
| சுக்ரன் | : | சூரியன், சந்திரன் | புதன், சனி ராகு, கேது |
| சனி | : | சூரியன், சந்திரன், செவ்வாய் | புதன், சுக்ரன், ராகு, கேது |
| ராகு, கேது | : | சூரியன், சந்திரன், செவ்வாய் | சனி, சுக்ரன். |

நடைமுறையில் அனுபவரீதியாகப் பார்க்குமிடத்து, இந்தவிதிகள் சரியாகவே இருக்கின்றன. தைரியமாகப் பின்பற்றலாம். ஒரு உதாரணம் எடுத்துக்கொள்வோம். சாமக்கோள் ஆருட விதிப்படி சூரியனுக்கு தனுசு, மீனம் நட்பு வீடுகள். அவன் ஆட்சி மூலத்திரிகோல் வீடான சிம்மத்தையும் சேர்த்து 3 வீடுகள். இந்த மேற்கண்ட விதிப்படி கடகத்தையும், கும்பத்தையும் சேர்த்துக் கொள்ளலாம். மற்ற வீடுகளான கன்னி, விருச்சிகம், மகரம், மேஷம், ரிஷபம். மிதுனம் பகை வீடுகள்.

மற்றொரு விஷயமும் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன் இந்த சந்தர்ப்பத்தில் இந்த நட்பு, பகை கிரகங்கள், வீடுகள் பலனை ஒரேயடியாக மாற்றக் கூடியவை அல்லது சற்றே கூட்டவோ, குறைக்கவோ செய்யலாம். இதுவரை உங்களுக்கு எழுதிய உதாரணங்களில் இந்த விஷயம் பற்றி நான் ஏதும் குறிப்பிடவில்லை காரணம் குழப்பம் அதிகமாகும். உச்ச, நீச்சம் அதிக பலனைக்காட்ட வல்லவை. அதை நினைவில் வைக்கவும்.

மேலும் இதுவரை வெளி வந்த சினேந்திரமாலை புத்தகங்களிலோ, அதன் ஆங்கில மொழிபெயர்ப்பிலோ (என். சிதம்பர அய்யர் - 1890ல் மொழிபெயர்த்து வெளியிட்டது) ஒரு பிரச்சனையை அலசி பலன் சொல்ல வழிகள் கூறவில்லை. அடியேன் என் குருநாதர்கள் மூலம் இந்த பலன் சொல்லும் வழியை மிகச் சிரமப்பட்டு கற்றுக்கொண்டேன். அவர்களிடமும் இந்த முரண்பாடுகளை எடுத்துக் காட்டியபோது, சரிவர பதில் சொல்லவில்லை. சமய சந்தர்ப்பம் போல் பார்த்துக்கொள்ள வேண்டியதுதான் என்று பட்டுக்கொள்ளாமலேயே பதில் கூறினர். விஷயம் அத்தோடு நிற்கிறது இன்று வரை.

ஆயினும் துணிந்து, எந்தப்பிரச்சனையும் சாமக்கோள் ஆருடப்படி அலசி ஆராய்ந்து பார்த்ததில், நல்ல வெற்றி. ஒரு துணிவும் பிறந்தது. அதன் விளைவே இந்தப் பாடங்கள் உங்களுக்கு. கேரளத்தின் அஷ்டமங்கள பிரச்னத்திற்கு ஈடானது. உதயம், ஆருடம், கவிப்பு, ஆட்சி, உச்சம், பகை, நீச்சம், நட்பு இந்த 8 அங்கங்களையே அவர்கள் பயன்படுத்துகின்றனர். அஷ்டமங்களம் என்ற பரிபாஷை. பல மணி நேரம் செலவழிப்பர். சாமக்கோள் ஆருடத்தில் 10 நிமிஷங்கள். கேரளத்திலேயே இதை நிருபித்துக்காட்டி உள்ளேன். போதுமா? 75 மாணவர்களுக்கு நேரிடை வகுப்புகளும் எடுத்துள்ளேன்.

******

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 27

## அதிக மதிப்பெண்கள் பெற முடியுமா? மீண்டும் பரீட்சை எழுதினால்

12.1.1994 புதன் கிழமை பகல் 11.29க்குக் கேட்கப்பட்ட கேள்வி இது. பின்னணி +2 தேர்வில் நல்ல மதிப்பெண்கள் பெற்றும் இதர சமூகத்தினர் பிரிவைச் சேர்ந்ததால் அரசாங்க பொறியியல் கல்லூரிகளில் இடம் கிடைக்கவில்லை. தனியார் கல்லூரிகளிலேயே இடம் பெற வேண்டும் என்ற நிலை. தனியார் கல்லூரிகளில் கட்டணம் அதிகம். மேலும் பெண் குழந்தை, காரைக்குடி பகுதியைச்சேர்ந்த இவளுக்கு காஞ்சிபுரத்தில்தான் கல்லூரியில் இடம் கிடைத்திருக்கிறது. அவ்வளவு தூரம் பெண்ணை அனுப்புவதற்கு யோசனை.

இதற்கிடையில் ஒரு புரொபஸர், ஒரு பாடத்தில் மட்டும் சற்று மதிப்பெண்கள் குறைந்திருப்பதால் இந்த நிலை. மீண்டும் பரீட்சை எழுதி அதிக மார்க்குகள் பெற்றால், மெரிட் லிஸ்ட் (Merit List) ல் பெயர் வருமே. சுலபமாக அரசாங்க கல்லூரியிலேயே இடம் கிடைக்குமே என்ற யோசனையைத் தெரிவித்திருக்கிறார்.

அது சாத்தியமா என்று சாமக்கோளில் பார்ப்போம்.

12.1.1994 புதன். இடம் திருச்சி. நேரம் 11.29. சூரிய உதயம் 6.42. அஸ்தமனம் 6.07. ஒரு உதயம் 57 நிமி. 6.43 57 - 7.39. தமிழ்த்தேதி 28. 56 நிமி. கழிக்க. 6.43 உடன் தனுசு முடிவு. 11.29க்கு மிதுன உதயம்

சிரோதயம் - ஆருடமும் சிரோதயம். உதயாதிபன் 8ல். அங்கேயே சாமக்கோளில் செவ். உச்சம்; 6.11க்கு உடைய செவ். 8ல் உச்சம் பெற்றுப் பலன் இல்லை. மேலும் 11ம் இடம் கவிப்பு. அங்கேயே பாம்பு. 11ம் இடம் கவிப்பாக வரின் நஷ்டமே. கைப்பொருளும் செலவழியும். எனவே அந்த யோசனையைக்கைவிட்டு விடும்படி சொன்னேன். பரீட்சை எழுதி மெரிட் லிஸ்ட்டில் பெயர் வரும் அளவிற்கு மதிப்பெண்கள் பெற முடியாது. செவ்வாய்க்கு கதிர் 7 எனவே 7 மார்க்குகள் கிடைக்கலாம் அதிகம், அவ்வளவே. உங்கள் யோசனைப்படியே செய்கிறோம் என்று கூறிவிட்டுச் சென்றார்.

பாடம் 29 கர்ப்பம் பற்றியது

| | பாம்பு | | | மதி | |
|---|---|---|---|---|---|
| கதிர் | | கவிப்பு | கேது | உத | |
| | சனி | | | | மந் |
| சேய் | சந்,புதன் | | | ஆருடம் | |
| | சூரி,செவ் சுக். | ராகு | குரு | | |
| | பொன் | | மால் | புகர் | |

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 28
## என் (லட்சிய) திட்டம் (Project) நிறைவேறுமா?

இந்தக்கேள்வி 15.4.1990 ஞாயிறு 12.25க்கு பழனியில் ஒரு பிரபல ஆன்மிகவாதியால் கேட்கப்பட்டது.

சாமக்கோள் ஆருடத்தில் என்ன பதில் கிடைத்தது என்று பார்ப்போம்.

| | புகர் | மால் | | பொன் | |
|---|---|---|---|---|---|
| | | சூரி புத | | குரு | |
| | சுக் செவ் | | | கேது கவிப்பு | சேய் |
| மந் | ராகு சனி | | | ஆருடம் | |
| மதி | | சந் | உத | | கதிர் |
| | | | பாம்பு | | |

உதயம் சிரோதயம். ஆருடமும் சிரோதயம். ஆருடாதிபதி சூரி. உச்சம் 6ல் புகர் உச்சம். 10ல் செவ். நீச்சம் அந்த வீட்டிலேயே கேது. அதுவே கவிப்பு. உதயத்தில் பாம்பு. மனம் குழம்பிய நிலை. 10க்குடைய சந்திரனும் நீசம்.

எவ்வளவு தெளிவாக அவர் மனநிலையை கிரகங்கள் எடுத்துக்காட்டுகின்றன. என்ன திட்டம் அவருடையது என்று பார்ப்போம். 10ல் செவ். நீசம். 4ல் ராகுவும் சனியும். செவ். 2,7க்குடையவன் என்பதையும் மறக்கக்கூடாது. ராகு, சனி, தர்ம ஸ்தானமான 9ல் உள்கட்டம் வெளிக்கட்டம் 2லும் குரு. எனவே அவர் ஒரு அனாதை ஆஸ்ரமம் ஏழை மக்களுக்கு நிறுவ ஆசைப்படுகிறார். அதுவே அவர் லட்சியம். 10ல் செவ். நீசமாகி 4ம் இடத்தைப்பார்ப்பதால் இன்னும் அதற்கு வேண்டிய நிலம் கிடைக்க வேண்டுமே என்ற கவலை. 5ம் இடத்தை (பூர்வ புண்ய ஸ்தானம்) குரு பார்வையிடுகிறார். அங்கேயே சுக்., செவ். எனவே இடம் கிடைக்கும். மேலும் 6ல் சுக். உச்சமாக இருப்பதால் ஒரு சமூக அந்தஸ்து ஸ்திரீ உதவி செய்வார். 10 இடத்தை சூரியன் கடக்கும் போது ஆடிமாதத்தில் திட்டம் உருப்பெற்று நிறைவேறும். எனவே தைரியமாக மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கவும் என்று கூறப்பட்டது.

அன்பார்ந்த மாணவர்களே இதுவரை பலதரப்பட்ட பிரச்சனைகளை எப்படி அலசுவது என்று அறிந்து கொண்டீர்கள். இன்னும் பாடம் 29,30,31ல் மிக முக்ககியமான பிரச்சனைகள் அலசப்பட்ட இருக்கின்றன. நீங்கள் எல்லோரும் இவற்றை கவனமாக படித்து முன்னேற வேண்டும் என்பதே என் அவா. இன்னும் மரணம், பற்றிய பிரச்சனைகளும் வரும். மரணம் வாழ்வில் தவிர்க்க முடியாத ஒன்று அதைப்பற்றிய சில சமயம் கேள்விகள் வரும் போது எப்படி மரண காலம் நிர்ணயம் செய்யப்பட்டது என்பதை பார்ப்போம். இதை போல பிறப்பும், குழந்தை எப்போது பிறக்கும் என்பதையும் துல்லியமாக கணிக்கலாம், சாமக்கோள் ஆருடத்தில்.

*****

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 29
## கர்ப்ப நிச்சயம் - சாமக்கோளில்

தாய்மையே ஒரு பெண்ணிற்கு பூரணம் அளிக்கிறது. தாய் இல்லையேல் சேய் இல்லை. வம்ச விருத்தியும் தாயினால்தான். எனவே திருமண வாழ்வில் புத்ரபாக்கியம் முக்கியமான ஒன்று. விவாகப் பொருத்தம் பார்க்கும்போது இது அவசியம் கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

கர்ப்பம் தரித்தல் என்பது பெண்ணிற்கு இறைவன் அளித்த ஒரு விசேஷ அம்சம். அதில் ஐயமில்லை. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்ற பழமொழியில் தாய்க்கே (அன்னைக்கே) முதலிடம் குறிப்பிடத்தக்கது.

தாய்மையின் அறிகுறி கர்ப்பம் (தரித்தல்) ஆகும். மாதவிடாய் நின்று சிலநாள் கழித்துத்தான் இது தெரியவரும். மருத்துவ சாஸ்திரத்தில் 12 வாரங்கள் கழித்தே கர்ப்பத்தை நிச்சயம் செய்கின்றனர், சில சோதனைகள் செய்துவிட்டு.

ஆனால் சாமக்கோளில் அப்படி அல்ல. முதல் நாள் இரவு கர்ப்பந்தரித்ததைகூட உறுதி செய்ய முடியும். அதற்கு சில விதிமுறைகள் தந்துள்ளனர். அவற்றைப் பார்ப்போம்.

குடும்பக் கட்டுப்பாடு, ஒரு வாரிசு போதுமே, வீட்டிற்கு ஒரு வாரிசு, ஒரு மரம், நாம் இருவர் நமக்கு ஒருவர், அதிகம் பெறாதீர் அவதிப்படாதீர் என்ற வாசகங்கள் எல்லா இடங்களிலும் கண்ணில்படுகின்ற காலம் இது. ரேடியோ, டி.வி., இவற்றிலும் குடும்பக்கட்டுப்பாடு பற்றி பிரச்சாரம். தினந்தோறும் காலை சேவைச் செய்தியில் எங்கெல்லாம் குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை, பெண்களுக்கு எங்கே, ஆண்களுக்கு எங்கே என்ற விவரங்கள் அளிக்கப்படுகின்றன. ஜனத்தொகை கட்டுப்பாடு அவசியம். அதில் ஐயமில்லை. நாடு முன்னேற அது ஒரு வழியாகும்.

குடும்பக் கட்டுப்பாட்டிலே அறுவை சிகிச்சை நிரந்தர பலன் அளிக்க வல்லது. ஆயினும் பல காரணங்களால் எல்லா இளம் தம்பதியருமே அதற்குத் துணிவதில்லை. முக்கிய காரணம் பின்விளைவுகளைப் பற்றிப் பயப்படுவதே. அந்த பயத்தில் நியாயமும் உண்டு.

சில சமயம் இந்த மாதிரி தம்பதியர் மனைவிக்கு மாதாந்திர கெடு தவறி விட்டால் கவலை கொள்கின்றனர். 3 மாதம் பொருத்திருந்து பார்க்கப்பயம். வெளியே தெரிந்துவிட்டால் அபவாதம். இப்படிப்பல பிரச்சனைகள். எனவே கர்ப்பம் உறுதி செய்து கொண்டு தக்க நடவடிக்கை எடுக்க முயல்கின்றனர். குறிப்பாக வேலைக்கு போகும் பெண்களுக்கு இதனால் பல பிரச்சனைகள்.

சாமக்கோள் ஆருடம் மூலம் பல சமயங்களில் அவர்கள் பிரச்சனைக்குப் பதில் அளித்திருக்கிறேன். அவற்றில் ஒன்றைப் பார்ப்போம்.

கர்ப்ப நிச்சயம் அறிய விதிகள் 3 சாமக்கோளில்.

1. உதயத்தில் பாம்பு இருக்க வேண்டும்
2. அல்லது ஆருடத்தில் பாம்பு இருக்க வேண்டும்
3. உதயத்திற்கு 4,5,9 ல் பாம்பு இருத்தல் வேண்டும். இந்த விதிகள் தவறுவது இல்லை அனுபவரீதியாக.

நான் கர்ப்பந்தரித்திருக்கிறேனா? நேரம் 10.50, நாள் 25.4.93 ஞாயிறு. இடம் திருச்சி. சூரிய உதயம் 6.01, அஸ்தமனம் 6.24. 3ம் விதி இங்கு மிகவும் பொருந்துகிறது. கர்ப்பவதியாய் இருப்பது நிச்சயம் என்று உறுதியாய்ச் சொன்னேன். பிறகு தக்க நடவடிக்கை எடுத்தாகக் கடிதம் போட்டு, நன்றியைத் தெரிவித்தார்.

6.39 7.41

புகர் கேது மால்

| | | | |
|---|---|---|---|
| புத சுக் | சூரி | சந் | |
| சனி | | | செவ் |
| ஆரு. கவிப்பு | | | |
| | ராகு | | உதயம் குரு |

மந் மதி பாம்பு

8.43 பொன் 9.45 10.47 சேய்

கதிர்

*****

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

### சாமக்கோள் ஆருடம்
### பாடம் - 30
### என் வியாதி என்ன?

12.50 பகல், 11.2.93 வியாழன் திருச்சியில் இந்தக்கேள்வியோடு ஒரு பெண்மணி அறைக்கு வந்தாள். அவருக்கு பதில் சொல்லிய விபரங்களைப் பார்ப்போம். சூரிய உதயம் 6.41. அஸ்தமணம் 6.18. ஒரு உதயம் 58. தை மாதம் 20ம் தேதி. 6ம் இடம் பிணிக்கயிறு, 8ம் இடம் மரணக்கயிறு (Primary) அடுத்தபடியாக 11ம் இடம் பிணிக்கயிறு, 3ம் இடம் மரணக்கயிறு (Secondary) 6ம் இடத்தில் சனி, சூரியன் 2ம் பாபக்கோட்கள், சனி தன்வீடு.

8.37 மந் 9.35 10.33 புகர்

| | | | |
|---|---|---|---|
| சுக் | | கேது | செவ் (வ) |
| புதன் ஆரு. | | | |
| சனி சூரி | | | உதயம் |
| கவிப்பு | ராகு | | குரு சந் |

மதி 7.39 6.41 பாம்பு கதிர்

11.31 மால் 12.29 1.27 பொன் 1.27

சேய்

சூரியன் பகைவீடு. வெளிக்கட்டத்தில் பாம்பு. 5,8க்குடைய குரு 6ம் வீட்டைப் பார்க்கிறார். உள்கட்டம் வெளிக்கட்டம் 2லிருந்தும். உதயம் சிம்மம், சிரோதயம் ஸ்திர ராசி. நாள்பட்ட வியாதியாகும். சிம்ம லக்னத்திற்கு இரத்த அழுத்த நோய் வருவது சகஜம். 8ல் சுக். உச்சம். 6ம் இடத்திலிருந்து சனி பார்வை. குரு பார்வை வேறு. 12க்குடைய சந்திரனும் அங்கேயே. எனவே சர்க்கரை வியாதியும் உண்டு. கவிப்பில் சூரியன் 5ம் வீடு. அதிகப்படி ஆங்கில மருந்து சாப்பிட்டு உடலில் விஷம் அதிகமாகிவிட்டது. ஆங்கிலத்தில் Residual Poison due to excess Allopathy Medicines என்பார்கள். ஆங்கில மருந்தின் பக்க விளைவுகள் (Side Reaction) என்றும் சொல்லலாம். மதி எட்டில் இருப்பதால் (12க்குடையவன்) மனக்கோளாறு தற்சமயம். அதாவது சைகலாஜிகல் டெப்ரஷன் (Psychological Depression) அதாவது மனநலம் பாதிக்கப்பட்டிருக்கிறது. அதுதான் வியாதி என்று விளக்கம் சொல்லப்பட்டது. நூற்றுக்கு நூறு உண்மை என்றார்கள்.

9.10ல் கபர்கள் இல்லாவிட்டாலும் பாபிகள் உள்ளனர். 9ல் சனி நீச்சம். 10ல் உள்கட்டத்தில் கேது நீச்சம். நிச்சயம் குணமடைவீர்கள். பிணி தீரும். பயப்பட ஏதுமில்லை. தைரியமாக இருங்கள் என்று ஆறுதலும் கூறப்பட்டது.

சாமக்கோளில் வியாதி பற்றி விளக்கம் சொல்வதற்கு முன்னால் சில அடிப்படை விஷயங்கள் அவசியம் தெரிந்திருக்க வேண்டும். காலபுருஷன் ராசி மண்டலத்தில் எந்தெந்த அவயவயங்களுக்கு அதிகாரம் வகிக்கிறார் என்பது நன்கு புரிய வேண்டும். மேஷத்திற்கு தலை, ரிஷபத்திற்கு தொண்டை, பிடரியும் அதன் முதுகு பதியும். மிதுனத்திற்கு தோள், சுவாசகோசங்கள், கடகத்திற்கு மார்பு (மேல்பகுதி) வயிறு, சிம்மத்திற்கு இருதயப் பகுதி, இரத்த ஒட்டம், கன்னிக்கு அடிவயிறு, குடல், துலாத்திற்கு மூத்திரகோசங்கள், வயிற்றின் பக்கங்கள், விருச்சிகத்திற்கு ஜனன உறுப்புகள், பின்முதுகுப்பகுதி, தனுசிற்கு துடை, இடுப்பின் மேல்பகுதி, மகரத்திற்கு முழங்கால், கும்பத்திற்கு குதிரைமுகம், ஆடு சதை, மீனத்திற்கு கணுக்கால் பாதங்கள்.

சினேந்திர மாலைப்படி செவ்வாய்க்குத் தலை, சுக்ரனுக்கு முகம், புதனுக்கு கழுத்து, தோள், சந்திரனுக்கு மார்பு, சூரியனுக்கு வயிறு, குருவுக்கு அரை, சனிக்கு துடை, பாம்புக்கு கால், இதில் பாட பேதமும் உண்டு. புதனுக்கு முகம். சுக்கிரனுக்கு தோள் என்றும் இவற்றால் உடலின் எப்பகுதியில் பிணி என்றும் பிணியும் கண்டு கொள்ளலாம், கிரகங்களின் நீச்சம், பகை இவற்றால் தீவிர வியாதியும் ஆட்சி. உச்சம், நட்பு இவற்றால் சாதாரண பிணியும் கண்டு சொல்லலாம்.

பிணிக்கயிறு (6ம் வீடு) சரராசியானால் வியாதி குணமாகும். பயப்பட ஏதுமில்லை ஸ்திரராசியானால் நாள்பட்ட வியாதி. உபயராசியானால், அதில் முதற்படுத்தீவிரமான வியாதியையும், 2வது பகுதி சாதாரண நோயையும் குறிப்பிடும். உதயத்தையும் கவனத்தில் கொண்டு. சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். மேலும் நவக்கிரஹங்களும் சில வியாதிகளுக்கு அதிகாரம் பெறுகின்றனர். அதன் சுருக்கமான விவரங்களைப் பார்ப்போம்.

சூரியன் : கண் நோய் (வலது), காய்ச்சல், உதிருதயக்கோளாறு, முதுகெலும்பு, நரம்பு மண்டல வியாதிகள், எலும்பு முறிவு, மூளைக்காய்ச்சல் சில தோல் வியாதிகள், தலைவலி.

சந்திரன் : சுவாச கோச நோய்கள், இடது கண்நோய் அஜீரணம், ஆஸ்த்மா, மூத்திரகோச வியாதிகள், நீரிழிவு, மாதவிடாய் கோளாறுகள், பால் சுரப்பதில் நோய்கள், நீரினால் வரும் தொத்து வியாதிகள்.

செவ் : உஷ்ணசம்பந்தமான வியாதிகள், காயங்கள், கண்வலி, மூலம் பிளவைகள் எலும்பு நோய்கள் (Disease of Marrow of the bone)

புதன் : நரம்பு வியாதிகள், மார்பக நோய்கள், வலிப்பு, மூக்கு வியாதிகள், பக்கவாதம், பைத்தியம், சொரிசிரங்கு, கல்லடைப்பு

குரு : கல்லீரல், கணையம் நோய், காதுவலி, நீரிழிவு, ஞாபகமறதி, ஊளைச்சதை, நாக்கில் புண் இவை.

சுக் : பால் உணர்வு நோய்கள், மூத்திரநோய்கள், தொண்டை சம்பந்தமான நோய்கள், மலட்டுத்தன்மை (இரு பாலருக்கும்) சோபை இழத்தல். சுரப்பி நோய்கள் (Gland Triobles)

சனி : பல்நோய்கள், வாதம், குருடாக்கும் கண் நோய்கள், செவிடு, பக்கவாதம், அங்கஉறீனம். (Deformities)

ராகு : விழித்திரை நோய் (Cataract) வயிற்றில் கட்டி (Enlargement of Pleen ) தொழு நோய், மாரடைப்பு, மூச்சடைப்பு, விரைவீக்க நோய்கள். (Hydrocele)

கேது : எல்லா வலிகளும், கண்வலி, இனம்புரியாத நோய்கள், மூளைப்பாதிப்பு (Mysterious Diseases)

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 31
## தொழிலாளர் பிரச்சனை?

இந்தப் பிரச்சனை ஒருவரால் கேட்கப்பட்டது. அளிக்கப்பட்ட பதில் பிரச்சனை உண்டு. அரசாங்கமும் தொல்லை கொடுக்கிறது. தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்ய அனுமதிப்பதா இல்லை வாக் அவுட் (Lock out) செய்வதா. அரசாங்கம் அதை ஏற்காது என்ற பயமும் உண்டு. செவ். மேஷத்திற்கு வரும் வரை இந்த நிலை நீடிக்கும். ஜூன் மாதம் சூரியன் மிதுனத்திற்கு வரும் போது நிலைமை சீராகும். தொழிற்சாலை பழையபடி நல்ல முறையில் இயங்கும். ஒரு பெண்மணி இதற்குக் காரணம். அரசியல் வாதியாகவும் இருக்கலாம் (எம்.எல்.ஏ. பதவி போல).

உதயாதிபன் 8ல் பாம்புடனும் 7ல் கதிர். இரண்டுமுறை. உதயத்தில் சுக்ரன் நீக்கம். அந்த சுக்ரன் 6ல். 5ல் செவ். உச்சம். 8ம் வீட்டைப் பார்க்கிறார்.

| | | பாம்பு | | மதி | |
|---|---|---|---|---|---|
| கதிர் | கதிர் | புதன் | | ஆரு குரு | |
| | சூக் | 12.12 பகல் வெள்ளி 6.4.90 | | கேது | மந் |
| செவ் | ராகு சனி,செவ் | | | சந் கவிப்பு | |
| பொன் | | ராகு | | உதயம் | |
| | | மால் | | புகர் | |

இங்கும். உள்கட்டம், வெளிக்கட்டம் இரண்டிலும் செவ். 5ல் சனி, ராகு, செவ். ஏற்கனவே முந்திய பாடங்களில் ஆருட குரு 2ம் பட்சபலனைத் தருவார் என்றறிந்தோம். அதுவும் 10ம் வீடாகிவிட்டது இங்கு. எனவே பயப்பட ஏதுமில்லை. தொழிலாளர்கள் தூண்டப்பட்டு, அதிக சம்பளமும், போனசும் கேட்கின்றனர். அது பொருளாதார ரீதியில் சாத்தி யமில்லை. அவர்கள் வேலை நிறுத்தம் என்று செய்வது வெறும் அச்சுறுத்தலே பயப்படாதீர்கள். வேலை நிறுத்தம் செய்தால் சட்டப் பூர்வமான நடவடிக்கை எடுக்கலாம் என்றும் கூறப்பட்டது. ஆருடப்படியே, ஜூன் மாதம் நிலைமை சீராகியது தொழிற்சாலையும் நல்லபடி இயங்கத் தொடங்கியது.

## சாமக்ககோள் ஆருடம்
## பாடம் - 32
## கடிதம் எப்போழுது வரும்
### குருநாதரிடமிருந்து எப்பொழுது கடிதம் வரும் என்பதற்கு ஆருடம்

10.08 மந் 11.05 12.02 புகர்

மதி 9.11

| | | | |
|---|---|---|---|
| | சந் | கவிப்பு | |
| சனி | 24.12.93 3.32. 5பி.எம் வெள்ளி பெங்களூர் | | |
| | | | |
| சக்,சூரி புதன்.செ | ராகு | குரு ஆருடம் | உதயம் |

12.59 மால் 1.56

8.14 பாம்பு 7.17 கதிர்

2.53 பொன்

4.47 சேய் 3.50

உதயம் கன்னி. உதயாதிபதி மால் 11ல். பாம்பின் பார்வை மாலுக்கு. உதயத்தில் பொன். மதியின் பார்வை. லெட்டர் கட்டாயம் வரும் தாமதகமாக.

ஆருடம் துலாம். ஆருடாதிபன் புகர் 9ல். கதிரின் பார்வை 4/5 மந்தன் பார்வை புகர்க்கு. இதுவும் லெட்டர் தாமதமாக வரும் என்பதைக் குறிக்கிறது.

உதயத்திற்கு 9ம் இடம் கவிப்பு குருஸ்தானம். 9ம் அதிபன் புகர் குடும்பத்தில் 9க்கு இடத்திற்கு 8ல். 9க்கு 4ம் இடத்திற்கு 5ல்.

உறவினர்கள் புண்ணியம்தேடி உங்களுக்கு லெட்டர் போட்டு வந்தார்கள் அதனால் சங்கடம் தங்கள் காரியங்களுக்கு. செலவு.

உதயத்திற்கு 11 அதிபதி. சந்திரன் கவிப்பிற்கு 11ம் அதிபதி குருஸ்தாதனத்தைப் பார்க்கிறார். செலவு அதிபதி செவ்வாய் கவிப்பிற்கு 8ல் 12ம் அதிபதியுடன்.

கதிர் = 5. உள்கட்டத்தில் சூரியன் + சுக்கிரன் + புதன் + செவ்வாய்

5 + 1 + 1 + 1 = 8

தனுசுக்குக் கதிர் 6  8 - 6 = 2

8 பேரில் 2 பேருக்கு இடவசதிக்குறைவு. தனுசில் சூரியன். சூரியனுக்கு 2ம் இடம் மகரம். பாம்பு வெளிக்கட்டத்தில். மால்கடகத்தில். பாம்பின் பார்வை. ஆருடம் மார்கழி மாதம் ஆனதால்.

திருமால் சேஷ சயனம் திருப்பாற்கடலில். ஸ்ரீரங்க நாதத்தரிசனம் வைகுண்ட ஏகாதசி அன்று. சூரியன், உறவினர் ஸ்தானமான சிம்மத்திற்கு 5ல் பூர்வபுண்யம்தேடி. உறவினர் தபால் போட்டு வந்திருப்பார்கள். சுக்ரன் குருநாதரின் 2ம் ஸ்தானத்தில். உள்கட்டத்தில் சுக்ரன் சூரியன் செவ்வாய் புதன் தனுசில்.

உறவினர்கள் குருநாதரிடம் ஜோதிடம் பார்த்திருப்பார்கள் தர்ம அர்த்த காமம் பற்றி. 9க்கு 7ல் அதிபதி சேய் 12ல் மந்தன் பார்வை. 9க்குடைய சந்திரன் 6ல் உள்கட்டத்தில். மனைவிக்கு உடம்பு சௌகரியமில்லை.

ரிஷபம் 9ம் இடம் — நீருள்ள இடம்
சந்திரன் மேஷம் — நீர்
புகர் மிதுனம் — நீர்

சனீஸ்வரன் பார்வை சந்திரனுக்கு : சூறாவளிக்காற்று விட்டுவிட்டு

வெளிக்கட்டத்தில் நீச சனீஸ்வரன் மேஷத்தில்.

எப்பொழுது லெட்டர் வரும் :

சந்திரன் - உதயாதிபன் புதன் 9 ராசி 9 நாள்
சந்திரன் - மால் 4 கட்டம். 4 x 2.25 9 நாள்
சனிமூலதிரிகோலம்: சனிக்கிழமை.
உதயத்தில் குரு வலிமை
உதயாதிபன் புதன் கடகத்தில் புதன் 9
கடகம் 3
12 நாள்

மேஷம் ஆருடத்தில் இருப்பதாலும் செவ்வாய் மாலைப் பார்ப்பதாலும் செவ்வாய்க்கிழமை.

சனிக்கிழமை லெட்டர் தலைமை அலுவலகம் வந்தது.

செவ்வாய்க் கிழமை : 4 - 1- 92 ல் என் கையில் கிடைத்தது.

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 33
## வாராதிபன் பற்றி மேலும் சில விளக்கங்கள்

வாரம் என்பது பஞ்சாங்க அங்கங்களில் ஒன்று. கிழமையைக் குறிக்கும். வாரத்தில் நாள் ஏழு என்று பள்ளிக்கூடச்சிறுவர்கள் கூட அறிவர். ஞாயிறு முதல் சனிவரை 7 கிழமைகளைக் கொண்டது ஒரு வாரமாகும்.

சாமக்கோளில் இந்த வாராதிபன் மிக முக்கிய பங்கு வகிக்கிறார் என்றால் மிகையாகாது. ஒவ்வொரு நாளும் கிழமையின் அதிபதி அல்லது வாராதிபன்தான் முதல் ஜாமத்தில் ஆருடச்சக்கரத்தை ஆரம்பித்து வைக்கிறார். உங்கள் எல்லாருக்கும் அந்த சக்கரம் எல்லாம் அமைக்கத் தெரியும்.

மேலும் ஒவ்வொரு ஜாமத்திலும் வாராதிபன் இடம் நகர்ந்து மற்ற 7 கிரகங்கள் அமர இடங்கொடுக்கிறார். இதுவும் ஒரு முக்யமான அம்சமாகும். அதாவது எந்த ஜாமத்தில் கேள்வி கேட்கப்படுகிறதோஇ அதற்கு தலைமை வசிப்பவர் வாராதிபனே. அவனை அனுசரித்துதான் மற்ற கிரகங்கள் குறிப்பிட்ட வரிசையில் ஆருடச்சக்கரத்தில் அமருகின்றனர். எனவே கேள்வி கேட்கப்படும் நேரத்திற்கு வாராதிபனுக்கும் உள்ள தொடர்பு நன்கு விளங்கியிருக்கும் என்று நம்புகிறேன். இன்னும் விரிவாகச் சொன்னால், ஒவ்வொரு கிழமைக்கும், ஒவ்வொரு ஜாமத்திற்கும் (இரவு உள்பட) வாராதிபனே அதிகாரம் வகிக்கிறார். மேலும் இந்த வாரங்கள் வரிசைக்கிரமத்தில் ஒரு ஜோதிட இரகசியம் பொதிந்து கிடக்கிறது. என்றால் மிகையாகாது. ஞாயிற்றுக்கிழமைக்கும் பின் ஏன் திங்கள் கிழமை வரவேண்டும்? அதன் பிறகு செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்றுஏன் வரவேண்டும்? பெரியவர்கள், ரிஷிகள் அமைத்த ஒரு ஏற்பாடு, பரம்பரையாகப் பின்பற்றப்படுவது என்ற விளக்கங்கள் எல்லாம் பூரண திருப்தி அளிக்காது.

அப்படி என்ன இரகசியம் அதில்? அதைப் பார்ப்போம். ஹோரையின் அடிப்படையிலேயே இந்தக் கிழமைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. யாரால்? விடை சொல்வது கடினம்.

ஒரு ஹோரை என்பது ஏறத்தாழ 1 மணி நேரத்தைக் குறிக்கும். ஞாயிற்றுக் கிழமை என்றால் முதல் ஹோரை சூரியனுக்கு. 2வது ஹோரைக்கு அதிபதி சுக்ரன். அடுத்த ஹோரை புதனுக்கு. அதற்கடுத்தது சந்திரனுக்கு. அடுத்தது சனிக்கு. அதன் பிறகு குருவிற்கு. அதற்கடுத்தது செவ்வாய்க்கு.

மீண்டும் அடுத்த ஹோரை சூரியனுக்கு. அதாவது ஒரு ஹோரைச்சுற்று முடிந்துவிட்டது. இதே போல் ஒரு நாளைக்கு 3 ஹோரைச்சுற்ற முடியும். அதாவது 21 மணி நேரம் முடிந்துவிடும். இந்த அடிப்படையில் 22வது மணிக்கு சுக்ரனும், 23வது மணிக்கு புதனும் ஹோராதிபர்கள். 24வது மணிக்கு அதாவது அடுத்த நாளைக்கு சந்திரன் அதிபதி ஆகிறார். எனவே திங்கள் கிழமை பிறக்கிறது. இதுதான் அந்த ரகசியம். எல்லாக்கிழமைகளுக்கம் இது பொருந்தும். ஞாயிறுக்கு ஞாயிறு எட்டு, அடுத்த ஞாயிறுக்கு 15, அடுத்த ஞாயிறுக்கு 22 என்ற பாமரமக்கள் கணக்குப் போடுவார்களே அதை நினைவில்வையுங்கள். சுலபமாகப் புரியும்.

ஹோரையின் மற்றொரு முக்கிய அம்சம் சூஷமஹோரை. ஹோரையை 7ஆகப் பிரிப்பது. ஆனால் வாராதிபன் வரிசைக் கிரமமாக வருவது போலவே வரும். சுக்ர ஹோரை என்று வைத்துக் கொள்வோம். சூஷம ஹோரைகள் சுக், சனி என்று வியாழனில் முடியும். சமயம் வரும்போது இதுபற்றி விவரங்கள் அறிவோம்.

*****

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 34

## நிலத்தை விற்க முடியுமா?

11.47 பகல். இடம் திருச்சி, ஞாயிறு, 30-1-1994. இந்தக்கேள்வியோடு ஒருவர் வந்தார். சாமக்கோளில் அளிக்கப்பட்ட பதில் “நிலத்தை விற்க முடியாது. உங்களுக்கு ரூ. 50,000க்கு கடன் உள்ளது. நீங்கள் அதிக செலவாளி. செலவைக் கட்டுப்படுத்தி கடனை அடைக்க முற்படுங்கள்” என்று. உதய பலமில்லை. பிருஷ்டோதயம் 12ல் சுக். அதிக செலவாளி.

| | புகர் | | | | |
|---|---|---|---|---|---|
| மந் | | | உ / கேது | | மால் |
| | சனி புதன் | | | | பொன் |
| மதி | சூரி. செவ். சுக் | ஆரு. | | | |
| பாம்பு | | ராகு | குரு சனி. | | சேய் |
| | | | | கதிர் | |

6ல் சூரி. நீசம் சூரியனுக்கு கதிர் 5. 5 x 10000 = 50,000. ஆருடத்தை குரு பார்க்கிறார். செவ். உச்சம். 12ம் வீட்டையும் பார்க்கிறார். உடமை கையை விட்டுப் போகாது. 8க்குடைய குரு 6ல். சூரியனுடன் சம்பந்தம் பரம்பரை சொத்து. 8ல் பாம்பு செவ். பார்வை, சனி பார்வை. வில்லகங்கள் உண்டு. குறிப்பு 10,000 யுக்தியே. அவரும் சரியாகக் சொல்லிவிட்டீர்கள் என்றார்.

*****

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

### சாமக்கோள் ஆருடம்
### பாடம் - 35
### என் கலர் டி.வி. என்ன விலை போகும்?

இடம் சிவகெங்கை, தேதி 10.1.1994, திங்கள். 12.57. பி.எம். பகல். சூரிய உதயம் 6.40 அஸ்தமனம் 18.07. ஒரு உதயம் 57 நிமி. தமிழ் மார்கழி 26. உதய நவாம்சம் 57/9 = 6. 1/3 நிமி. விருச்சிகத்தில். அங்கேயே பாம்பு.

| | சேய் | | | கதிர் | |
|---|---|---|---|---|---|
| பொன் | ஆரு. | | கேது | | |
| | சனி | | | உத. | பாம்பு |
| மால் | புதன் | | | | |
| புகர் | சூரி.செவ் சுக். சந். | ராகு | குரு கவி. | | சேய் |
| | | | சனி | சந் | |

ரூ.6000க்கு விலைபோகும். எப்படி? கவிப்பில் சனி உச்சம் சனிக்கு கதிர் 4. துலாத்திற்கு கதிர் 2.4 எனவே 6000 ரூபாயாகத் தீர்மானிக்கப்பட்ட விலைபோகுமா? ஆருடத்தில் குரு உதயத்தையை பார்க்கிறார். நிச்சயமாக விலைபோகும். உபதிபன் சந். 6ல். 7க்குடைய சனி 8ல். உதயத்தில் பாம்பு. எனவே தாமதம் தென்படுகிறது. உதயத்தை செவ்வாயும் பார்க்கிறார் 4ம் பார்வையாக எப்போது? 21.1.1994 ஒருவர் வந்து டி.வி. யைப் பார்த்துப் போனார். வந்த நேரம் காலை 10.16. வெள்ளிக்கிழமை. அதற்குரிய ஆருடம் பார்ப்போம். உதயமும், ஆருடமும் மாறிவிட்டன. உதயம் பிருஷ்டோதயம்

சாரம் சேய் அங்கேயே சனி உச்சம். மற்ற கிரகங்களும் அப்படியே. சாமக்கோள் சனியும், உச்சகட்ட சனியும் பரஸ்பர பார்வை. எனவே அதிகமாக விலை போகும்.

| | | சேய் | | கதிர் | |
|---|---|---|---|---|---|
| பொன் | கவி | உத. | | | |
| | | | | ஆரு. | பாம்பு |
| மால் | செவ் | | | | |
| புகர் | | | | | மதி |
| | | | மந் | | |

உதயம் ஆருடத்தில் பாம்பு, விருச்சிக நவாம்சம் அங்கேயே பாம்பு. ஏற்கனவே உதய செவ்வாய் பற்றிப் பார்த்தோம் + உச்ச செவ்வாய் பற்றி பார்த்தோம். 25.1.94 செவ். ராகு நட்சத்திரம் (திருவாதிரை) அன்று விலைபோகும் என்று தீர்மானிக்கப்பட்டது. மற்றொரு விசேஷம் என்னவென்றால் ராகுகாலத்தில் வந்தவர் 3.50. பி.எம்.க்கு பணம் கையில் கொடுத்து ரு 6000. எண்ணிப் பார்த்ததில்.

சாமக்கோள் ஆருடத்தின் மகிமையே மகிமை.
வாழ்க சாமக்கோள் ஆருடம். வாழ்க என் குருநாதர்.

குறிப்பு :

பாடம் 32, 34 இரண்டையும் எழுதியவர்கள் என்னுடைய மணியான சாமக்கோள் ஆருட மாணவர்கள். ஒருவர் சிவகெங்கை. பெயர். ஆர். முகுந்தராஜன், மேற்கண்ட கட்டுரையை எழுதியவர். மற்றொருவர். எஸ். சேஷாசலம், பெங்களூர். 32வது பாடம் எழுதியவர்.

இவர்கள் இருவருக்கும் என்னுடைய பாராட்டுகள் மற்றும் ஆசிகள்.

இவர்களைப் போல் என்னுடைய மற்ற சாமக்கோள் ஆருட மாணவர்களும் பாடம் எழுதி அனுப்பினால், நான் மிக்க சந்தோஷம் அடைவதுடன், உங்களுக்கு நான் இன்னும் உற்சாகமாக பாடம் நடத்துவேன் என்பதுடன், அதற்காக தாங்களும் முயற்சி செய்வீர்கள் என்று நம்புகிறேன்.

# சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 36
## ஒர்க் ஷாப் வைக்கலாமா?

5.2.93 வெள்ளி இரவு 7.09 மணிக்கு திருச்சியில் இந்தக் கேள்வியோடு ஒருவர் வந்தார். அவருக்கு அளிக்கப்பட்ட பதில் சாமக்கோள் ஆருட முறையில் கீழ்க்கண்டபடி.

ஒர்க்ஷாப் வைக்கலாம். நல்லபடி நடக்கும். ஸ்ரீ சக்தி இன்ஜினியரிங் ஒர்க்ஸ் என்ற பெயரில்.

| | | மால் | | பொன் | |
|---|---|---|---|---|---|
| புகர் | உத. சுக். | கவி | கேது ஆரு | செவ் (வ) | |
| | புதன் | | | சந். | சேய் |
| மந் | சூரி சனி | | | | |
| மதி | | ராகு | | குரு | கதிர் |
| | | | | பாம்பு | |

உதயத்தில் சுக். உச்சம். உள்கட்டம் வெளிக்கட்டம் 2லும். கவிப்பு 2ம் இடம். அங்கேயே மால். 4.7க்குடையவர். சந்திரன் தன் வீட்டில். மந்தன் தன் வீட்டில், 7ல் வெளிக்கட்டத்தில் உள்ள சூரியனோடு. அதுவும் லாபஸ்தானத்தில். உள்கட்ட சேய் 8ம் பார்வையாகவும், சாமக்கோள் ஆருடச்சேய் 7ம் பார்வையாகவும் அந்த வீட்டை (11ம் இடம்) பார்க்கிறார். 7க்குடைய மால் சாமக்கோள் ஆருடச் செவ்வாயால் பார்க்கப்படுகிறார். செவ். நீச்சம். மால் 12ல். சிறிது தயக்கம். ஆயினும் பயப்படத்தேவையில்லை. 3 கேந்திரங்களில் சுபர்கள். உதயத்தில் சுக். 4ல் பொன். 10க்குடையவர் 10ம் வீட்டையும் பார்க்கிறார். 10ல் 5க்குடைய சந்திரன். 5ல் சந்திரன். 5ம் இடம் சுயத்தொழில் ஸ்தானம். மேலும் 10ல் சந்திரன் நின்றால், சகல விதத்திலும் நன்மை. ஆருடாதிபதி சுக் உதயத்திலேயே இருக்கிறார். சுக்ரனை கருத்தில் கொண்டு, ஸ்ரீ சக்தி என்ற பெயர் சூட்டப்பட்டது.

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 37

4-2-93 குருவாரம். திருச்சி. இரவு 8.18க்கு பார்ட்னர் விஷயம் சம்பந்தமாக என்று இருவர் வந்து அமர்ந்தனர் என் அறையில். அவருக்கு அளிக்கப்பட்ட பதில். வரியைச் சற்றுக்குறைக்க லேடி(பெண்) பார்ட்னரை

| | | கதிர் | | பாம்பு | |
|---|---|---|---|---|---|
| சேய் | உத. சூக். | | கேது | சந். செவ் | |
| | புதன் கவி. | | | ஆ. | மதி |
| பொன் | சூரி சனி | | | | |
| மால் | | ராகு | | குரு | மந் |
| | | | புகர் | | |

சேர்க்க விரும்புகிறீர்கள். மேலும் பெயர் மாற்றமும் செய்யலாம் என்று நினைக்கிறீர்கள் என்றும் வந்தவரில் ஒருவர் 100% சரியாகக் சொல்லிவிட்டீர்களே என்றார். 6க்குடைய கதிர் 2ல் உச்சம் 8ம் வீட்டைப் பார்க்கிறார் 8ல் சுக்ரன் நல்ல லாபம் வருகிறது. அதே சமயம் வரியும் கட்ட வேண்டியுள்ளது. 6ம் இடம் வரிஸ்தானம். உதயத்தில் சுக் உச்சம். பெண் பார்ட்னர். 7ல் உதயாதிபதி குரு 7ல். 10ல் புதன். 7க்குடையவன். இருவரும் பரஸ்பர தசம கேந்திரம். 4 கோணங்களில் 10ஐத் தவிர இருப்பவர்கள் எல்லோரும் பாவிகள் . செவ். சனி, ராகு. எனவே பெயர் மாற்றம் தேவையில்லை கூடாது என்றும் பதிலளிக்கப்பட்டது. அப்படியே செய்கிறோம் என்றனர்.

**********

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 38
## ஆட்டு வியாபாரம் செய்யலாமா?

7.13 இரவு திங்கட்கிழமை திருச்சியில் 24.5.93 அன்று இந்தக் கேள்வி. அளிக்கப்பட்ட பதில் இந்த வியாபாரம் வேண்டாம். நஷ்டம் வரும். கைப்பொருளும் போகும். மேலும் புலால் உண்ணுவதற்கு உடந்தையான தொழில். பாவத்தொழில், வேண்டாம் என்றேன். உடன் வந்திருந்த மனைவி, பாவத்தொழில் என்று கேட்டவுடனேயே வேண்டாம், ஐயா, இவர் நான் சொன்னால் கேட்கவில்லை. அந்த எண்ணத்தையே விட்டுவிடுகிறோம் என்றாள்.

| | | மந் | | புகர் | |
|---|---|---|---|---|---|
| மதி | சுக் | கவி | சூரி. கேது | சந். உத ஆ. | |
| | சனி | | | செவ் | |
| பாம்பு | | | | | மால் |
| கதிர் | | ராகு | | குரு | பொன் |
| | | | சேய் | | |

11ம் இடம் கவிப்பு. நஷ்டம் வரும். கைப்பொருளும் போகும். சாமக்கோள் ஆருடவிதி இது. அங்கேயே சனி நீச்சம். உள்கட்ட சனியும் 3ம் பார்வையாகப் பார்க்கிறார். பாவத் தொழில் எப்படி? உதயத்தையும், ஆருடத்தையும் நீச்ச சனி பார்க்கிறார். 2ல் செவ். நீச்சம். 2ம் இடம். உணவுப்பொருளையும் குறிக்கும். இங்கு அசைவம் ஊன் வளர்க்க. ஊன் வளர்க்க ஊன். பாவம்தான் அதற்கு உடந்தையாக இருப்பானேன். சாமக்கோள் ஆருடம் எப்படி?

குறிப்பு: சாமக்கோள் ஆருடத்தில் பாடங்கள் சிறயதாக இருக்கின்றன என்று ஒருவர் அபிப்ராயம் தெரிவித்தார். மூர்த்தி சிறு கீர்த்தி பெரிது என்று பதில் அளித்தேன். நறுக்குத் தெரிதாற்போல், உண்டு இல்லை என்று தீர்மானமாகச் சொன்னால் போதும். 10 நிமிடத்தில் திருப்தியாகப் போவார். அது உறுதி. எந்த ஆருடமுறையிலும் இது சாத்தியமில்லை. சாமக்கோள் ஆருடம் வாழ்க.

# சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 39

## புதிய வேலையை ஏற்கலாமா?

ஸார், அதிகச் சம்பளம் தருவதாகச் சொல்லி ஒரிடத்தில் கூப்பிடுகிறார்கள். அந்த வேலையை ஏற்கலாமா? வேண்டாம் என்று பதில் அளிக்கப்பட்டது. விவரங்கள் அடியில் கண்டபடி.

| | | பொன் | | சேய் | |
|---|---|---|---|---|---|
| மால் | உத. | | கேது | | |
| | சனி,புத சுக். சூரி | | | | கதிர் |
| | செவ் | | | சந் | |
| மந் | ஆ. | ராகு | குரு | கவி | பாம்பு |
| | | | மதி | | |

இடம் திருச்சி. கிழமை வெள்ளி. தேதி 2.95 நேரம் இரவு 7.43. உதயத்தில் மால் நீச்சம் ஆருடத்தில் சனி. கவிப்பில் பாம்பு. 3 கோணங்களில் பாவிகள். எவ்வளவு துல்லியமாக கிரக நிலைமையை எடுத்துக்காட்டி எச்சரிக்கின்றன. உங்கள் வாக்குப்படியே நடக்கிறேன் என்று கூறி சென்றார் அந்த இளைஞர். போகுமுன்பு அவரிடம் உங்களுக்கு ரு.2000/- சம்பளமாக என்று கேட்டேன். எப்படி சார் சொல்கிறீர்கள். இவ்வளவு சரியாக என்று ஆச்சரியம்பட்டார் 6ல் சந்திரன் வேலைஸ்தானம். அவன் சாமக்கோளில் துலாத்தில். துலாத்திற்கு கதிர் 2 x 1000 = 2000. சாமக்கோளின் மகிமையே இதுதான்.

*******

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 40

## சந்தோஷ் கோப்பை கால்பந்து போட்டி - யார் ஜெயிப்பார்கள்?

ஞாயிறு 27-02-1994 ல் பிறபகல் 2.35 க்கு இந்த பிரச்சனை அலசப்பட்டது, திருச்சியில் Tie Breaker (டை பிரேக்கர்) முறையில்தான் வெற்றி தோல்விகள் நிச்சயிக்கப்படும். கிழக்கு வங்காள அணி வெல்லும். இரண்டு அணிகளும் சம அளவில் கோல்போடும் துலாத்திற்கு கதில் 2. உதயம் ஆருடம் அதுவே. எனவே 2 கோல்கள் என்று நிர்ணயம். நண்பர்கள் இருவர்கள் மகிழ்ச்சியடைந்து ஆவலாக இருந்தனர் என் கணிப்பு சரியாக வருகிறதா என்று பார்க்க. முதலில் கூறப்படும் அணியை முதல் கட்சியாகவும், 2வது ஆக கூறப்படும் அணியை எதிர்கட்சியாகவும் எடுத்துக்கொள்ள வேண்டும். கிழக்கு வங்காள அணியுடன் கேரளா அணியை எதிர்கட்சியாகவும் எடுத்துக்கொள்ள வேண்டும். கிழக்கு வங்காள அணியுடன் கேரளா அணி மோதுகிறது என்றுதான் டி.வி.யில், வானொலியில் கூறினார்கள்.

பொன் சேய்

| மால் | | | கேது | கவி | |
|---|---|---|---|---|---|
| | சனி, புத சுக். சூரி | | | | கதிர் |
| புகர் | செவ் | | | | |
| மந் | | ராகு | உ. ஆரு குரு | சந் | பாம்பு |

மதி

உதயம் ஆருடம் சிரோதயம். அங்கேயே குரு. வெளிக்கட்டத்தில் 10க்குடைய சந்திரன். எதிர் கட்சிக்கு, அதன் உதயத்தில் (மேஷத்தில்) குரு. 10ல் செவ். உச்சம். இருப்பினும் பிருஷ்டோதயம். உதயகுரு அதைச் சரிக்கட்டிவிடுகிறார். எனவே அந்தக் கட்சியும் வலுவுள்ளதே. ஏற்கனவே 2 கோல் எப்படி என்று பார்த்தோம். 2கோல் போட்டு இருகட்சிகளும் அதிக நேரம் ஆடியும் சமபலத்திலேயே நின்றன. முடிவாக டைபிரேக்கர் முறை அமுலாக்கப்பட்டது. வங்காள அணி 7 கோல் மொத்தம். கேரள அணி 5 கோல் மொத்தம். கேரள அணி 5 கோல் மொத்தம் என்ற கணக்கில் கிழக்கு வங்காள அணியே வென்றது.

நண்பர்கள் என்னைப் பாராட்டினாலும் எனக்கு திருப்தியில்லை. ஒரு நண்பர் டைபிரேக்கர் கணக்கையும் நிர்ணயிக்கவில்லை நீங்கள் என்று என் மன நிலைய அறிந்தது போல் கேட்டார். போட்டியை நானும் பார்க்கும் ஆர்வத்தில் அதைக் கனிக்கவில்லை. இருப்பினும் சாமக்கோள் கட்டத்தை மீண்டும் பார்த்தேன். செவ்வாய்க்கு கதிர் 7. சூரியனுக்கு கதிர் 5. கிழக்கு வங்காள அணியின் 11வது இடத்தை செவ்வாய் 8ம் பார்வையாகப் பார்க்கிறார். உச்ச கிரகமான செவ்வாய், கதிர் சூரியனைவிட 2 அதிகம். எனவே 2 கோல் அதிகம் போட்டு 7ஆயிற்று. மேலும் கேரள அணியின் உதயம் பிருஷ்டோதயம். பலமில்லை தோற்றுவிட்டது. இப்படித்தான் திறமையை மாணவர்கள் வளர்த்துக்கொள்ள வேண்டும்.

******

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 41
## (வேறு) வேலைக்கு ஆர்டர் எப்போது வரும்

இந்தக்கேள்வி 21.3.93 ஞாயிறு இரவு 7.49க்கு என்னிடம் கேட்கப்பட்டது. அளிக்கப்பட்ட பதில், ஏப்ரல் 13,14 தேதிகளில் ஆர்டர் வரும் என்று. வேறு வேலை ஏன்? உதயத்திற்கு 6ல் மால் உச்சம். உள்கட்டத்தில் குரு. கணக்கர் வேலை (கிளார்க்) வேலை செய்கிறார் என்று கிரகங்கள் எடுத்துக் காட்டுகின்றன. 6ம் வேலையைக்குறிக்கும். 10ம் இடம் ஆருடம். நன்மை உண்டு. அங்கேயே கதிர். அவனே 10ம் அதிபதி சாமக்கோளில். அவன் உதயத்திற்கு வரும் போது ஆர்டர் வரும். அதாவது ஏப்ரல் 13,14 தேதிகளில்.

| | | மதி | | மந். | |
|---|---|---|---|---|---|
| பாம்பு | சூரி, புத, | உத. | கேது | செவ். | |
| | சுக். சந். சனி | | | | புகர் |
| கதிர் | குரு | | | | |
| செவ் | | ராகு | | குரு கவி | மால் |
| | | | பொன் | | |

அப்படியே ஆர்டர் வந்தாக அவர் சகோதரர் சொல்லிவிட்டு, அவன் அந்த வேலைக்குப் போகவில்லை. கடைசியில் அதைச் சொல்லவில்லையே என்றார் சிரித்துக்கொண்டே. நானும் சளைக்காமல் அதைப்பற்றி நீங்கள் கேட்கவில்லையே. வேலைக்கு ஆர்டர் பற்றிதானே கேட்டீர்கள் என்றேன் சிரித்துக்கொண்டே. அந்த வேலைக்கு அவன் போவானா என்று கேட்டிருந்தால் சொல்லியிருப்பேன் என்றேன் (மாணவர்களுக்க) சாமக்கோளில் ஒவ்வொரு கேள்வியும் ஒரு பிரச்சனையாக அலச வேண்டும்.

********

ஸ்ரீ மகா கணபதி துணை                                                  நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 42
## பிரமோஷன் கிடைக்குமா? எப்போது?

14.3.93 ஞாயிறு 9.11 காலை, திருச்சியில் கேட்கப்பட்ட பிரச்சனை இது. அளிக்கப்பட்ட பதில் கிடைக்க வாய்ப்பில்லை என்று. உதயம் பிருஷ்டோதயம். ஆருடம் சிரோதயம். இருப்பினும் 2ம் இடம் ஆகிவிட்டது. 11க்குடைய லாபஸ்தான குரு 5ல் வக்ரம். 11ல் சுக். (வ) 6ம் இடத்திற்கு உரிய

| | மந் | | | புகர் | |
|---|---|---|---|---|---|
| மதி | (வ) சுக். | கவி. | உத கேது | ஆரு. செ. | |
| | சூரி.புத. சனி | | | | மால் |
| பாம்பு | | | | | |
| கதிர் | | ராகு சந். | | குரு (வ) | பொன் |
| | | | சேய் | | |

சுக்ரன் என்பது குறிப்பிடத்தக்கது. உள்கட்டத்தில் கிரகங்கள் வக்ரமடைந்தால், பலன்களைத் தருவதில்லை. 3ல் மால். 11ல் சந். உங்கள் பெயர் பட்டியலில் இடம் பெற்றிருக்கலாம். 7ல் சந். நீச்சமாகிவிட்டபடியால் கிடைக்காது. கவிப்பில் மந்தன் நீச்சம். ஆருடத்தையும் 3ம் பார்வையாகப் பார்க்கிறார் சாமக்கோள் எவ்வளவு தெளிவாக எடுத்துக் கூறுகின்றன.

|  | கதிர் | பாம்பு |  | மந் |  |
|---|---|---|---|---|---|
|  | சுக். சூரி. | புத. சந். | கேது |  |  |
|  | கவி. சனி |  |  | செவ் | சனி |
| சேய் |  |  |  | உத. |  |
| கதிர் |  | ராகு | ஆரு. | குரு | சுக் |
|  | குரு |  | புத |  |  |

என் வீட்டில் தோஷமுண்டா? 10.31 காலை புதன் 19.5.93 திருச்சி கேட்டார் ஒருவர். வீட்டில் தோஷம் ஏதுமில்லை. உங்கள் எண்ணமே அது. இது நாள் அந்தவீட்டில் மகிழ்ச்சிகரமாவே வாழ்ந்து வந்திருக்கிறீர்கள். பயப்பட ஏதுமில்லை என்று பதில் கூறப்பட்டது உதயம் கிரோதயம். ஆருடம் கிரோதயம். ஆருடாதிபதி உச்சம் 8ல். உதயபதியுடன். உள்கட்ட சனி. வெளிக்கட்ட சனி சந்திரனை 3ம் பார்வையாகவும், 10ம் பார்வையாகவும் பார்க்கிறார். அன்று அசுவினி நட்சத்திரம் எனவே வீட்டில் கோளாறு என்ற வந்துவிட்டது. மேலும் 12ம் நீச்சம் செவ்வாய் சனியுடன். கவிப்பிலேயே சனி. செவ். பார்வை வேறு. விண் பயம் என்று தெளிவாகத் தெரிகிறது. கிரகங்கள் எடுத்துக் கூறுகின்றன.

******

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 43

## When the Factory Lock out will be lifted?

## தொழிற்சாலையில் லாக் அவுட் எப்போது அகற்றப்படும்

இந்தக்கேள்விக்கு பம்பாயிலிருந்து கடிதம் மூலம் வந்தது. கடிதத்தில் கேள்வி கேட்ட நேரம், தேதி இவற்றையும் குறிப்பிட்டிருந்தனர். அதன் விவரங்கள் வருமாறு. இடம் பம்பாய். தேதி 23.1.1994. நேரம் இரவு 8.35பி.எம், ஞாயிற்றுக்கிழமை.

இந்தக் கேள்விக்கு சாமக்கோள் ஆருடம் மூலம் அளிக்கப்பட்ட பதில் 1994 மார்ச்சு 3ம் தேதி/ 4ம் தேதி "லாக் அவுட்" அகற்றப்படும். 4ம் தேதி முதல் தொழிலாளர் வேலைக்குத் திரும்புவார்கள். இது எப்படி என்று பார்ப்போம்.

பம்பாய் சூரிய உதயம் 6.36. அஸ்தமனம் மாலை 5.48. எனவே இரவு உதயம் 1 மணி 4நிமி. ஆகும் எப்படி? மாலை 5.48 முதல் காலை சூரிய உதயம் வரை இடைப்பட்ட நேரம் 12 மணி 48நிமி. இதைப் 12ல் வகுக்க 1 மணி 4நிமி. 17.48 + 1.04 = 18.52. தமிழ்த் தேதி 10 எனவே 10 x 2=20நிமி. கழிக்க 18.32. இத்துடன் மகரலக்னம் முடிவு. 18.32+1.04 = 19.36க்கு கும்பம் முடிவு. 19.36 க்கு கும்பம் முடிவு. 19.36+1.04 =20.40. மீனம் முடிவு. கேள்வி கேட்கப்பட்ட நேரம் 8.35 பி.எம். இரவு. எனவே உதயம் மீனம். ஆருடம் துலாம். கவிப்பு விருச்சிகம். உதய நவாம்சம் ரேவதி 4ல். அதாவது மீனத்திலேயே ஆருட நவாம்சம் சித்திரை 3ல் துலாத்தில். இந்த 2 நவாம்சங்களுமே தேதி நிர்ணயம் செய்ய வழி வகுத்தன . இந்த நவாம்சம் கணக்கைப் பார்ப்போம். உதயம் 1மணி 4 நிமி. அதாவது 64 நிமி. அதை 9ல் வகுக்க 7நிமி. 6½ செகண்ட். ஏறத்தாழ 6.25 செகண்ட் தள்ளிவிடலாம். எனவே உதயத்தில் ஒரு நவாம்சம் 7நிமி. கால அளவு மீனம் 8.40 உடன் முடிகிறது என்று பார்த்தோம். மீனத்தில் கடைசி நவாம்சம் 8.33 முதல் 8.40 வரை. கேள்வி கேட்கப்பட்ட நேரம் 8.35. எனவே மீன நவாம்சம் ரேவதி 4ல் குரு வீட்டில் உதயத்திலேயே நவாம்சம் விழுகிறது. ஆருட நவாம்சம் எப்படி நிர்ணயம் செய்யப்பட்டது. தபால்காரர் துலாத்தில் நின்று கொண்டு தபாலைக் கொடுத்தார். அதுவும் துலாத்தில் ஆரம்ப விளிம்பில் நின்று கொண்டு. துலாத்தில் ஆரம்ப விளிம்பு சித்திரை 3ம் பாதம். அனுபவம் ஏறஏற இந்த ஆருட நிர்ணய அனுமானம் மிகச் சிறந்தபடி அமையும். அதில்

| பாம்பு | மதி | | மந் | |
|---|---|---|---|---|
| | உத. | | சந். கேது | | |
| | கவி. சனி | | | | புகர் |
| கதிர் | செவ். சூரி.புத. சுக். | | | | |
| சேய் | | கவி ராகு | ஆரு. குரு | | மால் |
| | | பொன் | | | |

ஐயம் வேண்டாம். சாமக்கோள் கட்டத்தைப் பார்ப்போம். உதயத்தில் பாம்பு நஷ்டம். 8ல் ஆருடம். 10க்கு டையவன் அங்கேயே. கவிப்பில் ராகு. எதிர்காலம் பற்றிய கவலை, பீதி. மால் ஒருவனே உச்சம். ராகு உச்சம்.

ராகுவிற்கு சனி பார்வை 10ம் பார்வையாக சந்திரன் பார்வையும், 7ம் பார்வையாக செவ்வாய் உச்சம். சந்திரன், கேதுவுடன் இருக்கிறார். செவ்வாய் 3 கிரகங்களுடன் சேர்ந்து 11ம் வீட்டில் உள்கட்டம், வெளிக்கட்டம் 2லும் கதிர். கதிர் 6ம் வீட்டுக்குடையவர். 6ம் வீடு தொழிலாளர் ஸ்தானம். அவன் 11ல் இருமுறை இருப்பது தொழிலாளர் வேலைக்குப் போவதை உறுதிபடுத்துகிறது. எப்போது? 6க்குடைய கதிர், கும்பத்தில் ராகு (சதயம் 4ம் பாகம்) தாண்டி பூரட்டாதி (உதயாதிபன் நட்சத்திரத்தை நெருங்கும் சமயமும், 5க்குடைய சந்திரன் துலாத்தில், விசாகம் நட்சத்திரம் தாண்டும் போதும்" லாக் அவுட்" (Lock out) - அகற்றப்படும். சனி 10ம் பார்வையாக ராகுவைப் பார்ப்பதால் அனுஷ நட்சத்திரத்தன்று வேலைக்குப் போவார்கள் என்று தீர்மானிக்கப்பட்டது. சனி 6ம் வீட்டையும் பார்க்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

மார்ச்சு மாதம் 4ம் தேதி குறிப்பிட்டபடியே தொழிலாளர் வேலைக்குச் சென்றனர். சாமக்கோள் ஆருடத்தையும், என்னையும் பாராட்டி, கடிதம் வந்தது. " சாமக்கோள் ஆருடம்" வாழ்க.

******

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 44

## மரணத்திற்கு நிர்ணயம்

மரணத்தை யாரும் உலகத்தில் விரும்புவதில்லை. மரணத்திலிருந்து யாரும் தப்பியதில்லை. எப்போது வந்து ஒரு மனிதனை விழுங்கும் என்று சொல்ல முடியாது. ஒத்திகை பார்க்க முடியாது. ஒத்திப்போடவும் முடியாது. நம் விருப்பப்படியும் வராது. இப்படிப்பட்டதுதான் மரணம். அதனால்தான் என்னவோ நம் பிடரியிலேயே எமன் என்ற பழமொழி வந்தது போலும்.

சாமக்கோள் ஆருடத்தில் மரணத்தேதியை முன்கூட்டியே அறியலாம். தெரிவிக்கலாம். அதுபற்றிய விவரங்களைப் பார்ப்போம். சில சமயம் மரணத்திற்கு ஒப்பான கண்டங்களும் மனிதர்களுக்கு ஏற்படுவதும், அதிலிருந்து தப்பிப் பிழைப்பவர்களும் உண்டு. எமன் வாயில் விழுந்து மீண்டு வந்தேன் என்று தான் உயிர்த்தப்பியதை விவரிப்பவர்களும் பார்த்திருக்கிறோம். அதையே செந்துப்பிழைத்தனய்யா என்று கூறுபவர்களும் இருக்கிறார்கள். இது எனக்கு மறு ஜன்மம். ஆண்டவன் அருள் என்று கூட கூறுவார்களையும் நம்மிடையே பார்க்கிறோம்.

வாழ்வ அதித்யம் என்று வேதாந்திகள் கூறுகிறார்கள். தர்மபுத்திரரோ நச்சுப் பொய்கையில் தன் சகோதரர்களின் உயிரைக் குடித்த யட்சனின் கேள்வியான உலகத்தில் விந்தை எது என்றதற்கு, அனுதினமும் நம்மிடையே வாழ்பவர்கள் இறப்பதைப் பார்ப்பதும், நாம் வாழப் போகிறோம் என்று மனிதர்கள் நினைப்பது தான் விந்தை என்று பதில் அளிக்கிறார். நிற்க.

சாமக்கோள் ஆருடத்தில் மரணத்தைப் பற்றியும், கண்டங்களைப் பற்றியும், திட்டவட்டமான விதிகள் உள்ளன. அவற்றை எல்லாம் பார்ப்போம்.

ரிஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம் இந்த 4 ஸ்திர ராசிகளும் தம்மைத்தாமே கவிப்பின் மரண மின்னையாம். அதாவது இவை உதயமாக வந்து இவையே கவிப்பாகவும் வரவேண்டும். எப்படி? சூரிய விதி 3 என்று அறிவோம். மேஷம், ரிஷபம், மிதுனம் என்று இவை ஆருடமாக வந்து, சூரிய விதியும் இம்மூன்றில் ஒன்றாக இருந்தால்தான் இந்த விதி பொருந்தும். உதாரணங்கொண்டு விளக்குவோம்.

நடப்பு மாதம் பங்குனி. உதயம் மேற்கண்ட 4 ராசிகளில் ஏற்பட்டு, ஆருடம் ரிஷபமாக வந்தால்தான் இது சாத்தியமாகும். ராசிகள் தன்னைத்தானே கவிக்க முடியும். எப்படி? ஆருடத்திலிருந்து சூரிய விதிவரை எண்ண 1. அதே எண்ணிக்கை உதயத்திலிருந்து 1. எனவே உதயமே கவிப்பு ஆகும்.

சில விளக்க உரைகளிலும், மொழிபெயர்ப்பு நூல்களிலும் இந்த 4 ராசிகளும் ஆருடமாக வந்து தன்னைத்தானே கவிக்கில் மரணமின்மை என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது தவறாகும். ஏனென்றால் சூரிய விதி 3 தான். ரிஷப உதயம், ரிஷப ஆருடம் சூரிய விதியும் ரிஷபமாக வந்தால்தான் தன்னைத்தானே கவிக்க முடியும்.

உதாரணங்கொண்டு பார்ப்போம். கும்ப ஆருடம், மேஷவிதி என்றால் 3, ரிஷப விதி என்றால் 4, மிதுனவிதி என்றால் 5 என்று எண்ண வேண்டும். எந்த ராசி உதயமாக வந்தாலும் தன்னைத்தானே கவிக்க முடியாது. நிச்சயமாக.

இனி கண்டங்கள், மரணம் பற்றிப் பார்ப்போம்:

கண்டம் என்றால் போராபத்து, கண்டத்தினால் எப்போதும் மரணம் ஏற்பட வாய்ப்பில்லை. கண்டத்தை மரணத்திற்கு ஒப்பானது என்று குறிப்பிடலாம். ஜோதிட சாஸ்திரங்களில் பாதகாதிபதி, மாரகாதிபதி என்ற விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. பாதகாதிபதி கண்டங்களையும் இன்னும் சில பாதகங்களையும் செய்யலாம். ஆனால் மாரகாதிபதியோ மரணத்தைத்

தரவல்லவன் என்று அறிந்து கொள்வது அவசியம்.

சாமக்கோள் ஆருடத்தில் "கவிப்பு " இந்த இரண்டு நிலைகளையும் தெளிவாக எடுத்துக் காட்டவல்லது. 3ம் ராசி கவிப்பாக வந்தால் கண்டம். 11ம் ராசி கவிப்பாக வந்தால் மரணம் என்று விதிமுறைகள் தெளிவாக எடுத்துக் கூறுகின்றன. இதையே கண்டக்கவிப்பு (ராசி). மரணக்கவிப்பு (ராசி) என்று கூறலாம். ராசிகளின் அடிப்படையில் மேஷம், மிதுனத்தைக் (3) கவித்தால் கண்டமாம். ஆனால் மிதுனம் மேஷத்தை (11) கவித்தால் மரணமாம். இதேபோல் கடகம், கன்னி, மகரம், மீனம், துலாம், தனுசு ராசிகளுக்கு பார்த்துக் கொள்ளவும்.

இந்த கண்டத்தை வடமொழில் 4 வகையாகப் பிரித்து உள்ளனர். சொற்ப கண்டம் - கால்வரிசை கெண்டம். உயிருக்கு ஆபத்தில்லை. அறைவரிசை கண்டம் - சற்றே வலுவானது. உயிருக்கு பயமில்லை. முக்கால்வயிரசை கண்டம் - அதிக உயிருக்கு ஆபத்து ஏற்படலாம். 4வலு கண்டம் - தீராத வியாதி - உயிர் பிழைப்பது அரிது. வேறு வகையில் அரைவரிசை கண்டத்தை வயசு கண்டம் என்றும் முக்கால் வரிவை கண்டத்தை - ஆயுஷ் கண்டம் என்றும் மரணம் நிரியாணம் என்றும் கூறுவர்.

குறிப்பு:

இங்கு வரிசை என்பதை வலிவின் அடிப்படையிலே கூறுவதாகக் கொள்ள வேண்டும் ஏற்கனவே பிணிக்கயிறு (6ம் இடம்) மரணக்கயிறு (8ம் இடம்) 6க்கு 6ஆன 11ம் இடம், 8க்கு எட்டான 3ம் இடம். இவையெல்லாம் பற்றி அறிவோம். இந்த 3, 11 இங்கு கவிப்புகளாக மாறி மேற்கண்ட விததில் பலன்கள் சொல்ல உதவுகின்றன.

மாமனார் நிலை என்ன?

3-5-90 புதன் கிழமை. திருச்சியில் 1.40 பகல் - இந்தக் கேள்வியோடு ஒருவர் அனுகினார். சாமக்கோளில் அவருக்கு அளிக்கப்பட்ட பதில் என்ன என்பதைப் பார்ப்போம். மரணக்கயிறு எட்டாமிடம். கடகம். அங்கே கேது. 2ல் சனி, பாம்பு. பாம்பு வெளிக் கட்டதத்திலும். இருவரும் 8ம் இடத்தைப் பார்க்கின்றனர். சாமக்கோள் விதிப்படி 2ம் இடம், 7ம் இடம், 10 இடம் இவற்றில் ஒன்றில் ராகு, சனி, சூரி, செவ் இவர்களில் ஒருவன் நிற்கில் 4 நாளில் மரணம். 8ம் இடம் வலுவிழந்தது மரணத்தைக் சுட்டிக் காட்டுகிறது. 2ல் 2 பாவிகள் சனி, பாம்பு, வெளிக்கட்டத்திலும் பாம்பு. உதயத்திற்கு 5ல் சனி நீச்சம். 2க்குடையவன் அவன் 10ம் பார்வையாம் 2ம் இடத்தைப் பார்க்கிறார். இவற்றையெல்லாம் சீர்தூக்கிப் பார்த்து, நாளைப்பொழுது நல்லபடியாக விடியட்டுமே. அதற்குப் பிராத்திப்போம்", என்றும்

அதற்கு அவர் 'நேரடியாகவே கூறுங்கள். ஒளிமறைவு வேண்டாம்' என்று வற்புறுத்தினார் இன்றிரவு தாண்டுவது கஷ்டம் என்று சொல்வதைத் தவிர வேறு வழியில்லை என்று பதில் கூறினேன். சொன்னபடியே

| | | மந் | | புகர் | |
|---|---|---|---|---|---|
| மதி | செவ் | புத. சுக். | கவி. சூரி | குரு | |
| | | | | கேது | மால் |
| பாம்பு | ராகு சனி. | | | சந். | |
| கதிர் | உத. | ஆரு. | | | பொன் |
| | | | சேய் | | |

அவர் மாமனார் அன்றிரவே காலமாகிவிட்டார் என்ற செய்தி காலையில் எனக்கு கிடைத்தது.

என் அத்தை எத்தனை நாள் வாழ்வார்?

மற்றொரு உதாரணம். 21.7.93. திருச்சியில் பகல் 12.44 மணிக்கு புதன் கிழமை மேற்கண்ட கேள்வியோடு ஒருவர் என்னை வந்து பார்த்தார்.

| | பாம்பு | மதி | | மந் | |
|---|---|---|---|---|---|
| | | | கவி. சந். கேது | புத | |
| | சனி | | | சந். சூரி. | புகர் |
| கதிர் | உத. | | | செவ் | |
| செவ் | ஆரு. | ராகு | | குரு | மால் |
| | | | பொன் | | |

முன் உதாரணத்தில் கண்டபடியே மரணக்கயிற்றில் (சிம்மம்) செவ். 2ல் சனி. எனவே 4 நாளில் மரணம் நிகழும் என்று கூறினேன். கூறியபடியே, அவர் அத்தை 24-7-1994ல் காலமானார்.

*10 நாளில் மரணம்*

*29-12-93 மார்கழி 14, புதன்கிழமை, 4.17பி.எம்.க்கு என்னிடம் எனக்கு வேண்டிய ஒரு பெண் சாகக் கிடக்கும் தன் தாயின் மரணம் பற்றிக் கேட்டார். சாமக் கோள் முறையைக் கையாண்டேன்.*

மந் புகர் மால்

| | | | |
|---|---|---|---|
| | | கேது | சந் |
| சனி | | | ஆரு. |
| | | | |
| சூரி.செ. புத. சந் | ராகு | உத. குரு | கவி. |

பொன் (right of ஆரு.) · மதி (left) · சேய் (right of கவி.) · பாம்பு (bottom left) · கதிர் (below உத. குரு)

*உதயத்திற்கு 8 மரணக்கயிறு. கடகத்தை கன்னி கவிக்க மரணமாம். உதயத்திற்கு 10ல் குரு / சுக்ரன் நிற்கில் 7 நாளில் மரணம். சாமக்கோள் சனி. உதயத்தில் நீச்ச சூரியன். மரணம் உறுதி என்று? உச்ச கிரகத்தால் எழுதிக்கொண்டேன். குரு கதிர் 10, 10நாளில் அதாவது ஜனவரி 7ல் மரணம்.*

By - முகுந்தராஜன், சிவகெங்கை.

*******

*ஸ்ரீ மகா கணபதி துணை* *நவக்கிரக சகாயம்*

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 45

### பெயர் மாற்றம் தேவையா?

*அன்பார்ந்த மாணவர்களுக்கும், ஜோதிட அபிமானிகளுக்கம் தமிழ்ப்புத்தாண்டு நல் வாழ்த்துக்கள். எல்லா நலமும் பல்கிப் பெருகிட வாழ்த்துகிறேன்.*

*இதுவரை 44 பாடங்களில் பலவித பிரச்சனைகள் அலசி ஆராயப்பட்டன. விளக்கங்களோடு. விளக்கங்களில் ஏற்பட்ட சந்தேகங்களும் சில மாணவர்களுக்கத் தீர்க்கப்பட்டன. இன்னும் 6 பாடங்களோடு இந்தப் பயிற்சி முடிவடைகிறது.*

இன்னும் சில விஷயங்களை இங்கு தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன். ஜோதிட சாஸ்திரத்தில் பலன்கள் எல்லாம் 6 பிரிவில் அடங்கிவிடும்.

ஜயம் அபஜயம் (வெற்றி, தோல்வி) லாபம், நஷ்டம், சுகம், துக்கம் இவையே அந்த ஆறு பிரிவுகள். ஆருட சாஸ்திரத்திற்கும் இது பொருந்தும் முற்றிலும். இது தவிர நன்மை, தீமை என்ற ஒரு பிரிவும் உண்டு. இதையே தான் நலந்தீங்கு காண்டம் என்று சினேதிதிர மாலை கூறுகிறது பல விளக்கங்களோடு. இந்த விளக்கங்களை விதி முறைகளாகக் கொள்வதே சிறந்தது. இந்த விதிமுறைகள் மிகவும் பயனுள்ளவை. அவ்வப்போது பிரச்சனைகள் அலசும் போது இவைகளைக் குறிப்பிட்டும் உள்ளது.

மீண்டும் அவற்றைக் கோர்வையாகப் பார்ப்போம்.

சிரோதய ராசிகள் உதயமாக வந்தால், எடுத்தக்காரியம் முடியும். பிருஷ்டோதயராசிகள் உதயமாக வந்தால், எடுத்துக்காரியம் முடியாது.

சிர பிருஷ்டோதய ராசி (மீனம்) உதயமானால் எடுத்தக்காரியம், சிரமத்தின் பேரில், முயற்சியின்பேரின் வெற்றியடையும். முயற்சிடையார் இகழ்ச்சி அடையார் என்ற வள்ளுவர் வாக்கையும் நினைவில் கொள்ளவும்.

சர ராசிகள் உதயமாகவரில் பறிபோன, நஷ்டமான, திருட்டுப்போன பொருள் கிடைக்காது. வியாதி குணமாகும். பகை தீரும். சமரசம் ஏற்படும். படை வரவு உண்டு. (இந்தக்காலத்திற்கு பொருந்தாது). இருப்பினும் குண்டர்கள், காலிகள், திருடர்கள் வரலாம் என்றும் பொருள் கொள்ளலாம். காலத்திற்கு ஏற்ற வகையில் இதுவரை இந்த மாதிரிப் பிரச்சனைக்களுக்கு என்னை யாரும் அணுகவில்லை.

ஸ்திர ராசிகள் உதயமாகவரில் நஷ்டமான பொருள் காணும். படை வாராது. பயம் இல்லை. நினைத்த காரியம் கைகூடும். பரிசு கிடைக்கும். பிணி தீராது.

உபயராசி உதயமானால் நஷ்டமான பொருள் கிட்டாது. பிரயணம் இல்லை. (வழிப்போக்கில்லை) பிணி தீராது. சத்துருக்கள் சாந்தாகார் (விவகாரங்களில், வழக்குகளில் சமரசம் ஏற்படாது. கல்வி பூர்த்தியாகாது. காரியங்கள் முடிவு பெறாது.

மேற்கண்டவை பொது விதிகள். சில கிரக அமைப்புகளால் இந்த விதிகள் மாறி. நிவர்த்தியும் ஏற்படும்.

சர, உபயராசிகள் உதயமாகினும், அவற்றில் குரு, சுக், புதன், சந்திரன் முதலிய சுபக்கிரகங்கள் நட்பு, ஆட்சி, உச்சம்பெறில், தீமைகள் வராமல் நன்மைகளே ஏற்படும். மாறாக பாபக்கோள்கள் நிற்கிலும். அவையே பகை, நீக்கக்கோட்களாய் நிற்கில் தீங்குகள் இரட்டித்து வரும்.

இதை 2 உதாரணங்களுடன் பார்ப்போம். பெயர் மாற்றம் தேவையா? என்ற கேள்வியோடு 9-4-94, மாலை 6.50, சனிக்கிழமை ஒருவர் வந்தார் என்னிடம். நண்பர் ஒருவர் எண் கணிதம் (நியூமராலஜி) தெரிந்தவர், கம்பெனிக்கு பெயர் மாற்றம் அவசியம் இல்லாவிட்டால் நஷ்டங்கள் தொடரும் என்று கூறிவிட்டார். கவலையாய் உள்ளது உங்களைப் பார்த்து (ஆருடம் கேட்டு) தெளிவு பெற வந்தேன். என்றார்.

புகர் மால்

| மந் | செவ்.புத சூரி.சந் | சுக் உத. | கேது | | |
|---|---|---|---|---|---|
| | சனி | | | | குரு |
| மதி | ஆரு | | | கவி. | |
| பாம்பு | | ராகு | குரு | | சேய் |

கதிர்

சர உதயம் மேஷம். அதிபன் செவ் 6ல் 2ல் கேது. 8ல் ராகு. சனியும் உதயத்தைப் பார்க்கிறார். ஆனால் உதயத்தில் சுக்ரன் உள்கட்டத்தில் வெளிக்கட்டத்திலும். 7ல் குரு உள்கட்டத்தில். வெளிக்கட்டத்தில் சூரியன் நீசம். 4ல் குரு உச்சம். 10ல் சந்திரன் அதுவே ஆருடம். குருபார்வை வேறு சந்திரனுக்கு. சனியை உள்கட்ட குருவும் பார்க்கிறார். பெயர் மாற்றத்திற்கு 7ம் வீட்டைபார்க்க வேண்டும். வெளிக்கட்டத்தில் சூரி நீச்சம். உள்கட்டத்தில் குரு. சூரியன் வலுவு இழந்து விடுகிறார். சுபக்கிரகங்கள் 1,4,7,10ல். எனவே பெயர் மாற்றம் தேவையில்லை. 12ல் சந்திரன் சனி நட்சத்திரத்தில் இருப்பதால் இந்தக் குழப்பம். தைரியமாக இருங்கள் என்று கூறிவிட்டு, பெண் தெய்வத்தின் பெயரில் கம்பெனி. ஏற்றுமதி வியாபாரம் செய்கிறீர்கள் என்றேன். மிகச்சரியே, ஸ்ரீதேவி எக்ஸ்போர்ட்டர்ஸ் கம்பெனியின் பெயர் என்றார். என்ன ஏற்றுமதி செய்கிறோம் என்று கூற முடியுமா என்ற கேள்விளை தொடுத்தார். சில விநாடிகளுக்கப் பிறக தலைவழியாகப் போட்டுக்கொள்ளும் ஆடையையும், கால்வழியாகப் போட்டுக்கொள்ளும்

ஆடையையும் ஏற்றுமதி செய்கிறீர்கள். அதாவது பனியன், ஜட்டிகள் என்றேன். வந்தவர் அசந்தே விட்டார். இந்தப் பதிலை அவர் எதிர்பார்க்கவில்லை. மிக்க மகிழ்ச்சி அடைந்து, அதனால்தான் உங்களிடம் வந்தேன் என்றார். இந்தப்பதில் எப்படிக் கூறினேன். காலபுருஷன் அங்கம் மேஷம் தலை. பாகம் குரு- மீன வீடு. அவன் ஏழில். துலாம் காலபுருஷனின் அரை இடுக்குகள் பகுதியைக் குறிக்கும். சுக்ரன் ஆடைகளைக் குறிக்கும். எனவே பனியன், ஜட்டிகள் என்ற முடிவுக்கு வந்தேன். வெகு திருப்தியோடு போகும் போது, அடுத்த முறை உங்களைச் சந்திக்கும் போது, ஏற்றுமதி பணியன், ஜட்டிகள் தங்களுக்கு அவசியம் கொண்டுவந்து தருகிறேன் என்றும் கூறிவிட்டு சென்றார். கிரகங்களை, உதய ஆருடங்களைத் துல்லியமாகச் சீர்தூக்கி எடைபோட்டால் போதும் பல உண்மைகள் மனதில் பளிச்சிடும்.

மற்றொரு உதாணங்கொண்டு விளக்குவோம். உலக கிரிக்கட் போட்டி 1985ல் மார்ச்சு மாதம் ஆஸ்திரேலியாவில் நடந்தது. அதில் இந்தியா வெற்றிவாகை சூடி, பரிசுச் போப்பையைத் தட்டியது, ரஸிகர் மனதில் பதிந்திருக்கும்.

பம்பாயில் 9-3-85ல் மாலை 6.38 யார் ஜெயிப்பார்கள்? இந்தக் கேள்வி என்னிடம் கேட்கப்பட்டது. அதுவும் கிரிக்கெட் ரஸிகையான ஒரு பெண்ணால். விளையாட்டுகளில் வெற்றி தோல்களை ஜோதிட ரீதியாகக் கூறுவது சாத்தியமில்லைதானே என்ற தன் அபிப்ராயத்தைச் சவாலாகவும் கூறினான் எனவே இந்த சவாலை நான் ஏற்றுக்கொள்ள முடிவு செய்தேன் உங்கள் எண்ணம் தவறு ஆருடத்தில் நிச்சயமாகக் கூறலாம் சாத்தியமே என்று கூறி கட்டங்கள் போட்டு, இந்தியா ஜெயிக்கிறது என்ற முடிவரையும் அறிவித்தேன். அதன்படியே நடந்தது. அதற்கு முன்னால் சாமக்கோளில் நான் விளையாட்டுப் போட்டிகளைப் பற்றிய முடிவுகளை ஆராய்ந்தமில்லை. எனவே அந்தக் காரணத்தினாலும் அதை சவாலாக ஏற்றுக்கொண்டேன். சாமக்கோள் விதிகள் கைகொடுத்தன. அதன் விவரங்ககளைப் பார்ப்போம்.

புகர்

| | | | | |
|---|---|---|---|---|
| மந் | சுக்.புத | செவ் ராகு | | | மால் |
| | சூரி | | | | பொன் |
| மதி | குரு உத | | | கவி. | |
| பாம்பு | | சனி (வ) ஆரு | கேது | சந். | சேய் |

கதிர்

பம்பாய் 9.3.1985, நேரம் 6.38, சனிக்கிழமை. உதய பலமில்லை அங்கேயே குரு நீச்சம் 11ல் சனி அதுவே ஆருடம் மேலெழுந்தவாரியகப் பார்த்தால். இந்த முடிவு. ஆருடம் 7ல் குரு உச்சம். உதயக்தைப் பார்க்கிறார். அங்கேயே 7க்குடைய சந்திரனும். 4ல் புகர். 11ம் இடம் ஆருடம். அந்த ஆருடத்தை குரு பார்க்கிறார். 8ம் இடம் கவிப்பு. ஆனால் அந்த வீட்டுக்குடைய சூரியன் பார்க்கிறார். இதையெல்லாம் கருத்தில்கொண்டு, இந்தியா ஜெயிக்கும் என்ற கூறினேன். அதன் படியே இந்தியா வென்றது. முன்னுக்குப்பின் முரணாக உள்ளதே என்று எண்ணாமல், நன்கு சீர்தூக்கிப் பார்த்துத் தர்க்க ரீதியா அலசினால், உண்மை பளிச்சிட்வே செய்யும் மனதில். அதில் ஐயம் இல்லை.

*******

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 46
## ஆருடம் பற்றி - கவிப்பு பற்றி

ஆருடத்தைப் பற்றி ஏற்கனவே நன்கு அறிவோம். அதுபற்றிய சில விவரங்களை மீண்டும் பார்ப்போம். அதே போல கவிப்புப் பற்றியும் அறிவோம்.

| ஆருடம் - கவிப்பு | இடம் | பலன்கள் |
|---|---|---|
| ஆருடம் | உதயம் | நஷ்டமான பொருள் காணும். பிணி தீரும் |
| கவிப்பு | உதயம் | நஷ்டமான பொருள் காணாது. பிணி தீரும் காரியங்களில் தோல்வி. ஆனால் சுபக் கோள்கள் நிற்கில் சிறிது நன்மை ஏற்படும். |
| ஆருடம் | 2,6,8,12 | முயற்சியில் தோல்விகள். நஷ்டம், எதிரி |
| கவிப்பு | 2,4,6,8, 12(2,4) | வெல்வான். எதிரிகள் சாந்தம் அடையமாட்டார்கள். குரு இருந்தால் அதிகப் பிரயாசையின் பேரில் எதிரி சமரசம் அடையலாம். முயற்சிகளில் தோல்வி, பிணி தீராது, நஷ்டமான பொருள் கிட்டாது. |
| ஆருடம் கவிப்பு | 3,5,9 | காரிய வெற்றிகள், நஷ்டமான பொருள் கிட்டும், சுபகர்மங்கள், நன்மைகள், குரு முதலிய சுபக்கோள்கள் நிற்கில் மிகவும் நன்மையாம். வழக்குகள் வெல்லும் நினைத்தப்பொருள் கிட்டும். யாத்திரை சென்றவர் திரும்பி வருவார் |

| ஆருடம் - கவிப்பு | இடம் | பலன்கள் |
|---|---|---|
| ஆருடம் கவிப்பு | 4 | நஷ்டமான பொருள் கிட்டும், நினைத்து நடைபெறும், கிட்டும் |
| ஆருடம் | 7 | நஷ்டமான பொருள் கிட்டாமல் போவதுமன்றி கைப்பொருளும் நஷ்டமாகும். |
| கவிப்பு | 7 | 10ம் இடம் பலன்கள் போலவே நடக்கும். |
| ஆருடம் கவிப்பு | 10 | நலமுண்டு எல்லா வகையிலும். குரு முதலிய சுபக்கோள்கள் நிற்கின் அதிக நன்மை. |
| ஆருடம் | 11 | பாவ கர்மங்கள், தீமைகள் . சனி முதலிய பாபக் |
| கவிப்பு | 11 | கோட்கள் நிற்கில் அதிக தீமையாம். |

உதயம், ஆருடம், கவிப்பு இவற்றில் சுபக்கிரகங்கள் நிற்பதில் பலன்களை விரிவாகப் பார்ப்போம். உதயத்தில் அதிக வலியும், ஆருடத்தில் அதற்கடுத்தபடியும், கவிப்பில் அதற்கும் குறைந்த வலியும் உள்ளவை. அதன்படியே பலனும் ஏற்படும் என்பதையும் கருத்தில் கொள்வது அவசியம்.

குரு: பொருள் வரவு, யாத்திரை சென்றவர் திரும்பி வருவர். அதாவது பொருளீட்டல் நிமித்தம் யாத்திரை சென்றவர்கள். இந்தக்காலத்தில் வெளிநாடுகளில் சம்பாதிக்கச் சென்றவர் என்று கூறவேண்டும். பிணி தீரும். எதிரிகள் சாந்தமடைவர். எல்லா நன்மைகளும் சொல்லாம்.

சுக்ரன்: புகழ் பெறுதல், பணவரவு, எதிரிகளை வெல்லுதல், பிணி தீருதல். ஸ்திரிகளுடன் உறவு, நட்பு பெண் குழந்தை பிறத்தல், இதர சுபிக்ஷங்களும். கைவிட்டு போன பொருளும் கிட்டும்.

சந்திரன் : நினைத்த காரியங்கள் எல்லாம் கைகூடும். அந்நிய தேச நூதனப் பொருள் கிட்டுதல், பணவரவு இவை.

புதன் : எதிரிகள் கை தாழ்ந்து விடும். அவர்கள் தொல்லை இராது. மாறாக சமசரம் ஏற்படும். பிணி தீரும். வழக்கு வெல்லும். காரிய அனுகூலமும் சொல்லலாம்.

இனி பாபக் கிரகங்களைப் பற்றிப் பார்ப்போம், அதே விதிப்படி

சூரி. செவ். சனி : பொருள் நஷ்டம், வியாதி வருதல், மரணம் ஏற்படலாம். பலவித இன்னல்கள் ஏற்படும்

பாம்பு : பொருட்கள் களவு போதல், விஷம் தீண்டும், மரணம், கொலை முதலியவை. பாம்பு உதயாருடக் கவிப்புகளை நோக்கினாலும், இந்தமாதிரி பலன்கள் ஏற்படும். மேலும் உதயாருடக் கவிப்புகளை உச்சக் கோள்கள் நிற்கில் நினைத்த காரியம் கைகூடும். அயல்நாட்டு நூதன வஸ்துக்கள் சேர்க்கை. மாறாத பகை, நீச்சக்கோட்கள் நிற்கில் நினைத்த காரியம் கை கூடாது. பெண் மகவு கூட ஏற்படாது. பெண்களின் பகைமையும் ஏற்படும்.

உதயாருடக் கவிப்புகளை நட்பு ஆட்சிக்கோள்கள் நோத்தில், சத்ருக்கள் சாந்தமடையவர். மற்ற நன்மைகளும் உண்டு. மேற்படி உதயாருட கவிப்புக்கு நட்பு, ஆட்சி, உச்சக்கோட்கள் எனின் பெண் பேறுண்டு. இதர நன்மைகள். உதயாருடக் கவிப்புகளில் பகைக் கோட்கள் நிற்கில் நினைத்த, எடுத்த காரியங்களில் தோல்வி அல்லது கைகூடாமை. நஷ்டமான பொருள் கிட்டாது. போனது போனது தான். வெளியூர்சென்றவர் வரவில்லை. சத்ருக்களிடம் சிக்கி கொள்ளுதல் அல்லது கைது செய்யப்படுதல், மரணமும் வரலாம். நட்புக்கோள்கள் நிற்கில் சிறிதே நன்மை.

இனி உதயம் (1) நீர்க்கீழ் (4) பாடு (7) உச்சி (10) அதாவது கேந்திரங்களில் குரு, சந்திரன் முதலிய சுபக்கோட்கள் நின்றால் மரணமில்லை. நட்டமானப் பொருள் கிட்டும். பாபக்கோட்கள் நிற்கில் தீங்குகள் வரும். மரணமும் வரலாம். நட்டமான பொருள் கிட்டாது.

மேற்கொண்ட உதய, நீர்க்கீழ், பாடு, உச்சிகளில் (4 இடங்களிலும், சூரி, செல், சனி, பாம்பு நிற்கினும், 10,11ம் இடங்களில் குரு முதலிய சுபக்கோட்கள் நிற்குமாயின் கெடுதல் இல்லை நினைத்த காரியம் கைகூடும்.

உதய நீர்க்கிழ்பாடுச்சிகளில் பாம்பு நிற்கில், எடுத்த காரியம் முடியாது, மரணமும் வரலாம். யாத்திரை இல்லை. பிணிவரும். விஷந்தீண்டுதலால் அபாயம், பொருள் வரவில்லை. சத்ருக்களிடம் சிறைப்படல். உதயத்தில் சந். 10ல் சுக். நின்றாலும், உதயத்தில் குரு நின்ற 10ல் சூரியன் நின்றாலும் எல்லா நலன்களும் உண்டு. நினைத்த எடுத்த காரியங்கள் எல்லாம் இடையூறின்றி முடிவு பெறும். 7,10ல் சுக். சந். நிற்கில் பெண் குழந்தை, பொருள் வரவு, பெண்கள் உறவு, அரசாங்கனால் நன்மை. சுக்கிரனால் பூமி வாங்குதல், பெறுதல் முதலியவையும் உண்டு. 1,4,7,10ல் குரு முதலிய சுபக்கோட்கள் நிற்கில் இராஜாங்க நன்மை, சுகம், அஷ்ட சம்பத்தும் கிட்டும்.

சனி முதலிய பாபக்கோட்கள் நிற்கில் பொருள் அழிதல் (செல்வம் கெடுதல்) பகை, நோய் முதலிய தீங்குகள்.

சுருங்கக் கூறின் சுபக்கோட்களால் நன்மை, சுமுக உறவு, பொருள் வரவு முதலிய. பாவக்கோட்களால் பகை, தீமை, இன்னல்கள், உச்சத்தால்

அதிக நன்மைகளும், நீச்சத்தால் அதிக தீமைகளும், நட்பால் சிறிது நன்மைகளும். பகையால் சிறிது தீங்குகளும், ஆட்சியால் சுமாரான நன்மைகள் உண்டு என்றறியவும்.

*******

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 47
## திருமணம் எப்போது?

ஒரு பெண்ணின் தாய் 23.1.94 தை 10, ஞாயிற்றக்கிழமை மாலை 5.17க்கு என் இருப்பிடத்தில் வந்து அமர்ந்தார் திருமணம் எப்போது என்ற கேள்வியோடு. இந் நேரத்திற்கு ஜாமக்கோள் நிலை அமைத்து ஆராய்ந்தேன். உதயம் 6.42 ஏ.எம். அஸ்தமனம் 6.13 பி.எம். உதயம் 58 நிமிடம். ஒரு உதயம் 1.26.

| | செவ் | சூரி | ராகு | | |
|---|---|---|---|---|---|
| மந் | | | கேது சந் | | |
| | சனி | | | ஆரு. | சந். |
| குரு | சூரி.செ. புத.சுக். | | | | |
| | உத | ராகு | கவி. குரு | | |
| | புத | | சுக் | சனி. | |

உதயம் தனுசில் 10 டிகிரியில் மகளின் வீடு உதயத்திலிருந்து 5 மேஷம் அதில் உச்ச நிலையில் ஜாமக்கோள் சூரியன். அதற்கு 7ல் துலாத்தில் ஆட்சி நிலையில் ஜாமக்கோள் சுக்ரன் உள்ளே குரு. எனவே திருமணம் விரைவில் நடைபெறும் வாய்ப்பிணை ஜாமக்கோள் சுட்டுகின்றன. மகள் வீடு 5. அதில் உச்சமாக உள்ள சூரியனின் கோச்சாரம் அனுசரிக்கப்பட்டவேண்டும். எவ்வாறு? உதயம் தனுசில் 10 டிகிரியில். இதற்கு 5 ராசியா மேஷத்தில் 10 டிகிரி. இது அசுவினி 4ம் பாகத்தைக் குறிக்கம். கடக நவாம்சம். கடகத்தில்தான் ஆருடம். அதில் ஜாமக்கோள் சந்திரன் ஆட்சி. கோச்சாரம்

சூரியன் அசுவினி 4ம் பாதத்தில் சித்திரை மாதம் 10,11,12,13ம் தேதிகளில் இருக்கும். இதே சமயம் ஜனன ஜாதகப்படி சுக்ரதெசை, சுக்ரபுத்தி, சூரியன் அந்தரம் நடைபெறும். இவ்விதமான ஜனன ஜாதக தெசாபுத்தி அந்தர முடிவும் ஜாமக்கோள் ஆருட முடிவும் இணைந்து ஒத்து வருவதால் சித்திரை மாதத்தில் திருமணம் உறுதி என்றேன்.

இன்று அப்பெண்மணி தன் மகளின் திருமண அழைப்பிதழைக் கொடுத்துச் சென்றார். திருமண நாள் 22.4.94. சித்திரை 9, வெள்ளி, பூரம் நட்சத்திரத்தில், ரிஷப லக்னத்தில்.

அப்பெண்ணின் ஜாதகம் 27.10.1967, 5.07 ஏ.எம். கன்னியாலக்னம், புதன், கேது, சூரியன் துலாத்தில். தனுசில், செவ்வாய், மீனத்தில் சனி, மேஷத்தில் ராகு, கடகத்தில் சந்திரன், சிம்மத்தில குரு, சுக்ரன்.

வாழ்க ஜாமக்கோள் ஆருடம்
வாழ்க அதனைப் பரப்பிவரும் எமது ஆசான்.

- இரா. முகுந்தராஜன்,
சிவகெங்கை.

ஸ்ரீ மகா கணபதி துணை

நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 48
## கதிர்களின் ஜாலங்கள்

சாமக்கோள் ஆருடத்தில் கிரக, ராசிக்கதிர்கள் மிகவும் உதவுகின்றன பலன் சொல்லும் விஷயங்களில். இதுவரை அனுப்பிய பாடங்களில் அவ்வப்போது இக்கதிர்களின் உதவிகொண்டு குலதெய்வம் எத்தனை கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. எத்தனை நாளில் மரணம் நிகழும் குழந்தை எப்போது பிறக்கும், எத்தனை கோள்கள் கால்பந்தாட்டத்தில் போட்டு ஜெயிப்பார்கள், டைபிரேக்கர் முறையில் எத்தனை கோல்கள் வித்தியாசத்தில் ஜெயிப்பார்கள் என்றெல்லாம் பார்த்தோம்.

இன்னும் கடன், சொத்தின் மதிப்பு, ஒளிக்கப்பட்ட கணக்கின் தொகை, கடை அல்லது வியாபாரம் கைமாறும், போது, கொடுக்கப்படும் தொகை, மனை என்னை விலைபோகும் இப்படிப்பலதரப்பட்ட விஷயங்களைக் கூறமுடியும். கூறி வந்திருக்கிறேன். சரியாகவும் வந்திருக்கிறது. பிரச்சனை

கேட்க வந்தவர்கள் ஆச்சரியப்பட்டு போய் உள்ளார். சாமக்கோளில் இதையெல்லாம் சர்வசாதாரணமாக, மிகத்துல்லியதாகக் கூறமுடியும். வெறும் புகழ்ச்சியில்லை உண்மை.

மீண்டும் கதிர்களின் விவரங்களைப் பார்த்துவிட்டு உதாரணத்திற்கு வருவோம். சூரி 5, சந். 21, செவ். 7, புதன் 9, குரு.10, சுக்ரன் 16, சனி 4, பாம்பு 4 இலையே கிரகங்களில் கதிர்கள். ராசிகளின் கதிர்கள் முறையே, மேஷம் 7, ரிஷபம் 8, மிதுனம் 5, கடகம் 3, சிம்மம் 7, கன்னி 11, துலாம் 2, விருச்சிகம் 4, தனுசு 6, மகரம் 8, கும்பம் 8, மீனம் 27 ஆகும்.

உதாரணம் : 1. Good will Amount - எவ்வளவு ? 25.3.94, 1.27க்கு பகல் வெள்ளிக் கிழமை கேட்கப்பட்ட கேள்வி இது, சாமக்கோளில் துலாம் உதயம். மகரத்தில் செவ். உச்சம். மேஷத்தில் பாம்பு. 7லட்சம் தரவேண்டியிருக்கும் என்றேன். மிகச்சரி என்றார். செவ். கதிர் எழு. அவரே பைனான்ஸ் நடத்த உத்தேசம் என்றார். துலாத்தில் குரு உதயம் என்று பார்த்தோம். 10 லட்சம் முதல் போட உத்தேசமா என்றேன். நூாற்றுக்கு நூறு சரியே. அதற்குதான் உங்களிடம் வருகிறேன் என்றார். குருவிற்கு கதிர் 10.

உதாரணம் : 2. 29.9.89 வெள்ளி பகல் 11.30 மணிக்கு கேட்கப்பட்ட கேள்வி என்ன தெரியுமா? வருமான வரி இலாகா/ சுங்க இலாகா (எக்ஸைஸ்) வினால் எனக்கு ஆபத்துண்டா? தண்டனை கிடைக்குமா? சாமக்கோள்படி - கும்பம் உதயம். ஆருடம் 8ல் கன்னி, அங்கேயே சூரியன், சந். செல். புதன். உள் கட்டத்தில் புதன் உச்சம். ஆருடத்திலேயே சனி. மேஷத்தில் கவிப்பையும், உதயத்தையும் பார்க்கிறார். உதயம், ஆருடம், கவிப்பு எல்லாமே சிரோதய மொத்தம் வரிகட்டாமல் 9லட்சம் வியாபாரம் (புதன் கதிர் 9-8ல்) 3ம் வீட்டில் சூரியன் உச்சம். 7ம் வீட்டதிபதி. கதிர் 5. அதுதான் கணக்கில் காட்டப்பட்டுள்ளது. (9ல் 5 போக 4 லட்சத்திற்கு வரிகட்டவில்லை. எனவே அவர்கள் தண்டம் கட்டச்சொல்வார்கள் சூரியன் உச்சமாக இருப்பதால் குறைந்தது 5x10,000 ரூ. 50,000 தண்டம் கட்ட வேண்டிவரும் என்றேன். அதைத்தவிர என்றார். புரிந்துகொண்டேன். 6ல் சந். தன்வீடு. கதிர் 21. 21x1000 = 21000 வரை செலவு செய்து கவனிக்க வேண்டும் என்றேன். நேற்றுத்தான் இதே முடிவை அவர்கள் தெரிவித்தனர். உங்கள் ஆருடம் அபாரம் நான் சிறைத்தண்டனையோ என்று பயந்தேன். நல்லவேளை என்றார்.

உதாரணம் : 3. 19.3.94 மாலை 7.49க்கு ஒரு நகை வியாபாரி வசூலுக்குச்செல்கிறேன் எவ்வளவு வசூல் ஆகும் என்று சொல்லமுடியுமா என்றார். மேஷம் உதயம் 11ல் சுக். உச்சம். உள்கட்டத்திலும் சூரி. சுக். ஆருடம் மகரம். அங்கேயே சனி. 10ம் இடம் ஆருடம். 7 குரு துலாத்தில் . 11ம் இடத்தையும் பார்க்கிறார். 16 லட்சம் வரை வசூல் ஆகும். 7ல் குரு இருப்பதால் நல்ல வியாபாரிகள். சுலுபமாக வசூல் ஆகும் என்றேன். நூற்றுக்குநூறு உண்மை. என் கணக்கும் அதுதான் என்றார்.

உதாரணம் : 4. 6.9.89 மாலை 6.15க்கு கல்யாணத்தில ஒரு பொருள் தவறிவிட்டது. கிடைக்குமா? என்றார்கள். உதயம் சிம்மம், ஆருடம் கடகம். அங்கேயே சூரியன். ஆருடத்திற்கு 7ல் சுக். 9ல் குரு. உதயத்தைப்பார்க்கிறார். கவிப்பு விருஷபம். சந்திரன் பார்வை விருச்சிகத்திலிருந்து. பட்டுப்புடவை ரூ.3000 மதிப்பு இருக்கும். 3நாளில் கிடைத்துவிடும் என்றேன். 5ல் சனி 2 தடவை. எனவே மறந்துபோய்விட்டார்கள். கடகத்திற்கு 3x 1000 = 3000. சுக். பட்டுபுடவை. 3 நாளில் 9.9.89 உறவினர் பட்டுப்புடவையைத் தந்துபோனார்கள். கதிர்களின் ஜாலங்களைப் பார்த்தீர்களா? இது தான் சாமக்கோளின் மகிமை.

*****

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 49

### அடுத்தடுத்து கேள்விகள்

சாமக்கோள் ஆருடத்தில் இதுவரை பல பிரச்சனைகளுக்கு விடைகாணும் வழியை அறிந்து கொண்டீர்கள். சிலசமயம் ஆருடம் கேட்கவருபவர்கள் அடுத்தடுத்து கேள்விகள் கேட்பர். ஒரு கேள்விக்குப்பதில் சொல்லி முடித்தவுடன், அடுத்த கேள்விரும். இதில் விசேஷம் என்னவென்றால் முந்திய கேள்விக்கும் இதற்கும் துளிக்கூட சம்பந்தமே இராது. முற்றிலும் மாறுபட்ட விஷயமாகவே இருக்கும். அதனால் மலைக்கத் தேவையில்லை. தைரியமாகப் பிரச்சனைகளுக்குப் பதில் கூறலாம்.

இந்தமாதரி சந்தர்ப்பங்களில் அநேகமாக உதயம் மாறாது. ஆருடம் மாறும். கவிப்பு மாறும். அவ்வளவே. இவற்றைச் சீர்தூக்கிப் பார்த்தால், விடைகள் சுலபமாகக் கிடைக்கும். அந்தமாதரி வந்த சேவை அலசுவோம்.

இடம் : திருச்சி. தேதி 18.5.94. புதன் கிழமை. தமிழ்த்தேதி வைகாசி 4. சூரிய உதயம் 5.56. அஸ்தனம் 6.27. வைகாசிமாதம் ஆதலால் சூரியவீதி மேஷம். ஏற்கனவே அதைப்பற்றி அறிவோம். சில சமயம் பழக்கம் காரணமாக தவறுகள் ஏற்பட வாய்ப்பு ஏற்படலாம். எனவே இந்த சூரிய வீதி குறிப்பு. சூரிய வீதி வருகிற புரட்டாசி மாதம் தேதிவரை மாறாது. விஷயத்திற்கு வருவோம். 11.40 பகல் ஒரு பெண்மணி குடும்பப் பிரச்சனை என்று வந்து அமர்ந்து விட்டு, எல்லாம் நீங்கள் சொல்லிவிடுவதாகச் சொன்னார்கள். உங்கள் ஆருடத்தில் எனக்கும் அப்படியே சொல்லுங்கள்

என்று கூறி முடித்தார்.

வழக்கம் போல் கட்டத்தைப் போட்டேன். உதயம், ஆருடம், கவிப்பு, சாமக் கோள் கிரக நிலை, அன்றைய கிரக நிலைகள் எல்லாவற்றையும் போட்டு அலசி ஆராய்ந்து விட்டு. கீழ்க்கண்ட பதிலை அளித்தேன். உங்கள் கணவர் மீது சந்தேகம். வேறு பெண்ணிடம் தொடர்பு உள்ளது. அவள் திருமணமானவளே. இந்த நிலையினால் உங்களுக்கும் அவருக்கும் தகராறு. மீண்டும் மகிழ்ச்சியாக அவருடன் சேர்ந்து வாழ மனம் துடிக்கிறது. அவர் மனம் திருந்தி விரைவில் (உங்களிடம்) ஒன்று சேர வருவார். அது நடக்கும் நிச்சயமாக என்றேன். பதில் சொல்லப்பட்ட விதத்தை ஆராய்வோம்.

| | | ராகு | | சந். | |
|---|---|---|---|---|---|
| சூரி | கவி. | செவ் | சூரி. சுக் கேது புதன் | | |
| | சனி | | | சந். | சனி |
| செவ் | | | | | |
| | | ராகு ஆரு. | உதயம் குரு | | சுக் |
| | குரு | | புத | | |

உதயம் 1 மணி 3நிமி. 5.56 1.03 கூட்ட 6.59. தமிழ்த்தேதி 4. 4x2=8 நிமி. கழிக்க 6.51 வரை ரிஷபம். 7.54 வரை மிதுனம். 8.57 வரை கடகம். 10வரை சிம்மம். 11.03 வரை கன்னி. கேள்வி கேட்கப்பட்ட நேரம் 11.40 பகல். எனவே உதயம் துலாம். ஆருடம் விருச்சிகம். விருச்சிகம் முதல் மேஷ வீதி வரை எண்ண 6. உதயம் முதல் 6 எண்ண மீனம் கவிப்பு.

உதயத்திலேயே குரு. உதயகுரு மிக வலிவு உடையது என்று ஏற்கனவே அறிவோம். அவர் மனக்கலைகள் தருவது உறுதி. மேலும் குரு ஆட்சி சாமக்கோளில். செவ். உச்சம். சுக் நீச்சம். உள்கட்டத்தில் 2ம் இடம் ராகு உச்சம். 7ல் செவ். வெளியில் ராகு. சந். கடகத்தில் ஆட்சி. சனி குடும்பத்தில் ஆட்சி. 2ம் இடத்திற்கு உரிய செவ். உச்சமடைந்தது 7ம் வீட்டைப்பார்பர்பதாலும், செவ். மேஷத்தில் ராகுவுடன் சம்பந்தம் 5ம் இடத்திலிருந்து சனி 3ம் பார்வை. 5ம் இடம் கேளிக்கை ஸ்தானம். காதலும் ஒரு கேளிக்கையே சிலர் விஷயத்தில்.

*எனவே அவர் வேறு பெண்ணுடன் தொடர்பு கொண்டுள்ளதை கிரகங்கள் எவ்வளவு துல்லியமாக எடுத்துக் கூறுகின்றன. 11க்குடைய சூரியன் 6ல். நீச்ச சுக்ரன் பார்வை வேறு. சூரியனும் நீச்ச சுக்ரனைப் பார்க்கிறார்.*

*11க்குடையவன் 6ல் போய் மறைந்து நீச் சுக்ரனால் பார்க்கப்படுவதால் பழைய மகிழ்ச்சிகரமான சூழ்நிலை இல்லை. குடும்பத்தில் 2ல் ராகு உச்சம். 8ல் இடம் ஒரு சந்தேக ஸ்தானம் ஆகும். கலியாணமான பெண் எப்படி? 7ம் வீட்டை குருவும் பார்க்கிறார். சனியும் பார்க்கிறார். உச்ச செவ். பார்க்கிறார், 7ல் செவ். ராகு. குரு திருமணத்தைக் குறிக்கிறது. மற்றவை கூறாமலே விளங்கும். ராகுவும் சனியும் முக்கிய பங்கு இதில். விரைவில் ஏன்? செவ். உச்சம். அதன் கதிர் ஏழு. அவருக்கு மகரத்தின் கதிர் 4. 7x4=28 நாள். ஏறத்தாழ ஒரு மாதத்தில் என்று கருத்தில்கொண்டு விரைவில் என்றுபதில் அளிக்கப்பட்டது. கூறியது அவ்வளவு நூற்றுக்கு நூறு உண்மை என்றாள் அவள். இந்தப் பலன்களை எல்லாம் கூறி முடிக்க ஏறத்தாழ 6 நிமிடங்களே பிடித்தன.*

*உடனே 11.46க்கு அந்தப் பெண்மணி அம்மாவின் உடல்நிலை பற்றிக் கூறுங்களேன் என்று கேட்டுக்கொண்டார். அதைச் சொல்லி முடிக்க 6நிமி. ஆயிற்று. 11.52க்கு தாயாருக்கு இல்லை, பொதுவாக எங்கள் குடும்பத்திற்கு யாராவது செய்வினைக் கோளாறு செய்திருப்பார்களா? என்று கேள்வியைத் தொடுத்தாள்.*

*அவற்றிக்கு கூறப்பட்ட பதில்களை ஆராய்வோம்.*

*11.46 - தாயாரின் உடல்நிலை பற்றிய கேள்வி.*
*உதயம் மாறவில்லை. ஆருடம் மகரம். கவிப்பும் மகரம். உதயகுரு சர் ராசி பயப்படுபடியான வியாதி இல்லை. அதாவது உயிருக்கு ஆபத்தில்லை. 6ம் இடம் பிணிக்கயிறு, 8ம் இடம் மரணக்கயிறு என்று ஏற்கனவே அறிவோம். 2வது பிணிக்கயிறு 11ம் இடம். 2வது மரணக்கயிறு 3ம் இடம். இங்கு 3ம் இடத்தில் குரு ஆட்சி. 11ம் இடத்தில் சந்திரன். உச்சமான செவ்வாய் 8ம் பார்வையாகப்பார்க்கிறார். 6ல் சூரியன். 7 - மேஷம். செவ். அங்கேயே ராகு. உச்ச செவ்வாய் பார்வை 6ல் சூரியன் 7, மேஷம் தலைப்பகுதியைக்குறிக்கும். புத்தி ஸ்தானமான 5ல் சனியிருந்து மேஷ ராசியைப்பார்பதாலும், ராகுவின் நிலையாலும் மூளை சம்பந்தப்பட்ட மனோ வியாதி என்று தெரிகிறது. மேலும் சனி 2ம் வீட்டில் உள்ள உச்ச ராகுவைப்பார்பதால் எதுவுமே பேசமாட்டார். விருச்சிகம் மௌன ராசி. மேலும் இங்கிலீஸ் வைத்தியம் பயனளிக்காது. 8ல் சூரியன் கேதுவுடன் சம்பந்தம். எனவே ஆயுர்வேதம், ஸித்த வைத்தியம் பயனளிக்கலாம் என்று கூறியதும்*

ஐயா, மிகச்சரியாகச்சொல்லிவிட்டீர்கள். அம்மா யாருடனும் பேசமாட்டார். தன் வேலைகளான குளித்தல், துவைத்தல் எல்லாம். செய்து கொள்ளுவார், வாயைத்திறந்து எதையும் கேட்கமாட்டார், உணவு கூட. மனதிற்கு கஷ்டமாக உள்ளது. முன்பு நன்றாக இருந்தவர்கள் ஒருவேளை யாராவது செய்வினைக் கோளாறு என் அம்மாவிற்கோ இல்லை எங்கள் குடும்பத்திற்கோ செய்திருப்பார்களோ என்ற சந்தேகம் வேறு. அதையும் பார்த்துக்சொல்லுங்கள் ஐயா என்றார். 11.52 - செய்வினைக்கோளாறு உண்டா? இல்லை என்ற பதில். உதயத்தில் குரு. ஆருடம் கும்பம். கவிப்பு தனுசு. அங்கேயே குரு. சனி சிம்மத்தில் உள்ள சந்திரனைப் பார்க்கிறார். இது வீண் சந்தேகத்தைக்குறிக்கிறது. எல்லாம் நல்லபடியே நடக்கும் என்றேன். இது தான் சாமக்கோள் ஆருடம்.

******

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்
## பாடம் - 50

சாமக்கோள் ஆண்டுப்பலன், மாதப்பலன், வாரப்பலன்கள், சாமக்கோள் இந்தப் பாடத்துடன் நிறைவு பெறுகிறது. நவக்கிரகங்களில் அருளாலும், உங்கள் ஒத்துழைப்பாலும் இது சாத்தியமாயிற்று. ஒரு காரியத்தைப் பூர்த்தி செய்துவிட்டோம் என்ற மனநிறைவோடு இப்பாடத்தை எழுதி முடிக்கிறேன்.

சாமக்கோளில் ஆண்டுப்பலன் சொல்வீர்களா? 31.1.1994 திங்கள் பகல் 12.20க்கு என்னிடம் கேட்கப்பட்ட கேள்வி இது. ஆண்டுப்பலன் சொல்ல முடியும். ஆனால் 11மாதப்பலன்களே சாத்தியம் என்றேன். அதனால் பாதகமில்லை. 11மாதங்களில் என்னென்ன பலன்களை எதிர்பார்க்கலாம், நடக்கும் என்று கூறினால் போதும் என்றார்.

வழக்கம் போல் கட்டம் போட்டு, கிரக நிலைகளை அமைத்துபலன் சொல்லப்பட்டது. அதன் விவரங்களைப் பார்ப்போம். பாகப்பிரிவினை ஏற்படும், சகோதரர்களிடையே. சுமுகமாகவும் நடக்கும். 4ல் சனி உச்சம். செவ். பார்வை. 9ல் குரு. 7ல் செவ் உச்சம். 2ம் இடம் சூரியன். 4.10க்குடைய சுக். வீட்டை மாற்றியும் அமைப்பீர்கள். பழைய வீட்டைப் புதுப்பித்தல். 12க்குடைய மால் 7க்கு. 4ம் வீட்டிலிருந்து உச்ச சனி பார்வை. 4ம் வீட்டிலிருந்து உச்ச சனி பார்வை. 4ம் வீட்டிலிருந்து உச்ச சனி பார்வை. 4ம்

| | 9.01 | சேய் | 9.59 10.5 | கதிர் | |
|---|---|---|---|---|---|
| பொன் 8.03 | | | கேது | கவி | |
| 7.05 | சனி, புத | | | உ/ஆ.ரு | 11.55 பாம்பு |
| மால் | செவ். சூரி. சந். | | | | 12.53 |
| புகார் | | ராகு | குரு | சந் | மதி. |
| | | | மந். | | |

வீட்டுக்குடைய புகருக்கு ஒரு பையன் படிப்பு திருப்தி இல்லை. அதனால் கவலை. 5ல் ராகு, சனி பார்வை (உள்கட்டத்தில்) (Cash Crops) உடனே விலைபோகும் பயிர்கள். எண்ணெய் வித்துக்களான கடலை, எள்ளு போன்றவை. சனிவெளிக்கட்டத்தில் உச்சம் 4ம் வீட்டில். உள்கட்டத்தில் குரு. ஏற்கனவே செவ். சனி பார்வைப் பற்றிப் பார்த்தோம். எனவே எண்ணெய் வித்துக்கள். இதை கேட்டுவிட்டு நீங்கள் கூறிய எல்லாவற்றையும் நடத்தத்திட்டம் போட்டுவிட்டோம். சகோதரரும் சரி என்றார். இருப்பினும் ஜோதிடரிடம் ஒரு வார்த்தைக் கேட்டுவிட்டு போகலாம் என்று வந்தேன். அவ்வளவே. மிகச் சரியாகவே எல்லாவற்றையும் கூறி விட்டீர்கள் என்று பாராட்டுவிட்டுப் போனார்.

சாமக்கோளில் வாரப் பலன்கள் : என் அன்பு மிக்க மாணவர்களில் ஒருவரான சிவகெங்கை முகுந்தராஜனிடம் வாரப்பலனை எழுதி சரிபார்த்து அனுப்பச் சொல்லியிருந்தேன். அவர் ஒரு வாரத்திற்க்கு எழுதிய பலன்கள் வருமாறு.

19.2.94 சனிக்கிழமை. பார்த்த நேரம் இரவு 8.34. இடம் சிவகெங்கை. சூரிய உதயம் 6.38. அஸ்தம்னம் 6.22. தினச் சந்திரன் ரோஹினி 3ல் உதயம் மேஷம், அசுவின் 4ல். ஆருடம். துலாம். விசாகம் 2ல். பலன்கள். 5ம் வீட்டுக்குடைய சூரியன் 6ல். ஆருடத்திற்கு 11ம் அவ்வீட உள்கட்ட உச்ச செவ். அவ்வீட்டைப் பார்க்கிறார். எனவே மூத்த பெண்ணிற்கு ஆபரேஷன் ஏற்கனவே சூரியன் 6ல், 6ரோகஸ்தானம், இரத்த அழுத்த நோயின் தொல்லை உண்டு. மேஷம் உதயமாகவும், அதில் 6க்குடையவன் இருப்பதாலும் தலைச்சுற்றல் வரும். 5. விளையாட்டு (கேளிக்கை ஸ்தானம்) அவன் 6ல் போய்விட்டதால் டி.வி யில் ஸ்போர்ட்ஸ் நிகழ்ச்சிகள் பார்க்கமுடியாமல் போய் ஒரு அதிருப்தி ஏற்படும். 3ல் குரு கடிதப் போக்குவரத்து அதிகம். 7ல் ஆரு. குரு அங்கேயே உள்கட்டத்தில். வெளியில் ராகு. எனவே

மனைவியைப் பற்றிய சிந்தனைகள். 7க்கு 4ல் சனி. 4ம வீடு சொத்தைக் குறிக்கும். நீச்ச செவ்வாய் பார்வை. உள்வட்டத்தில் செவ். உச்சம். எனவே நிலம் பற்றிய தகராறு. வழக்கு தொடரும். 7க்கு 3ல் சந். உதயத்திலேயே 6க்கு உடையவன். 2.7க்குடை சுக். 12ல் உச்சம். எனவே மனைவி கடன் வாங்குவாள். ஆருடாதிபதி உச்சம். 12ல் 7க்கு 10ல் நிச்ச செவ். சில காரியங்களுக்கு கையூட்டு தரவேண்டியிருக்கும். 4க்குடைய சந். 2ல் உச்சம். சமையல் பொறுப்பும் உண்டு. 4க்குடையவன் கேதுவோடு, வயதான தாயையும் உதவிக்கு நாடுகிறேன். அவளையும் பார்த்துக் கொள்கிறேன். எவ்வளவு துல்லியமாக கிரகங்களை எடுத்து கூறுகின்றன. பார்த்தீர்களா?

| | | மால் | | பொன் | |
|---|---|---|---|---|---|
| புகர் | | உத. | சந். கேது | | |
| | சனி,சூரி சுக்.புத | | | | சேய் |
| மந். | செவ் | | | | |
| மதி | கவி | ராகு | குரு ஆரு. | | கதிர் |
| | | | பாம்பு | | |

ஸ்ரீ மகா கணபதி துணை நவக்கிரக சகாயம்

## சாமக்கோள் ஆருடம்

## பாடம் - 51

### அரசியலும் சாமக்கோள் ஆருடமும்

சாமக்கோள் ஆருடத்தில் பலவிதப் பிரச்சனைகளை ஆராய்ந்து பலன்கள் சொல்ல விதிமுறைகள் கற்றுக்கொண்டீர்கள். இன்னும் பல பிரச்சனைகளையும் ஆராயலாம் என்ற தைரியம் உங்களுக்கு நிச்சயம் உண்டு என்பதை அறிவேன்.

கிரகங்கோள் ஆட்டத்தில் அரசியல் எல்லைகள், சொல்ல முடியுமா என்று சிலர் கேட்டு உள்ளனர். நிச்சயமாகச் சொல்லமுடியும். ஆனால் ஒரு குறிப்பிட்ட பிரச்சனைக்கே சொல்லமுடியும். கிரக ரீதியில் தேசத்தின் நிலை என்ன என்ற கேள்வியைக் கேட்கிறார்கள் சிலர். அதற்க்கு பதில் விளக்கமாகச் சொல்ல முடியும்.

அதற்கு "அரசியல் ஜோதிடம் " தெரிந்திருக்க வேண்டும். "மேதினிய ஜோதிஷம்" (MUNDANE ASTROLOGY) என்று ஆங்கிலத்தில் அழைப்பார்கள். 12 வீடுகளும் நவக்கிரகங்களும் நாட்டைப் பொறுத்தவரையில் பல நிகழ்ச்சிகள் நடக்க காரணமாக உள்ளன. இவற்றையொல்லாம் அலசுவது சாத்தியமே.

அதன் விவரங்களைப் பார்ப்போம்.

எனது சார ஜோதிடவிளக்கம் என்ற நூலில் எழுதியவைகளை அப்படியே தருகிறேன்.

ஒரு நாட்டின் நடப்பு, உலக நாடுகளின் போக்கு இவற்றையெல்லாம் ஜோதிட ரீதியாகப் பார்ப்பது மேதினிய ஜோதிஷம் எனப்படும். இதையே ஆங்கிலத்தில் (MUNDANE ASTROLOGY) ஏன்றழைப்பார்கள். தனி மனிதர்கள் போல ஒரு நாட்டிற்கும் ஜாதகம் உண்டு. 12 பாவங்கள் எல்லாம் உண்டு. உலகத்தில் ஒரிரு நாடுகளைத் தவிர எல்லா நாடுகளிலும் ஜனநாயக அரசியல் நடைபெறுகின்தென்றே சொல்லலாம். இந்த அரசியலில் சற்று வேறுபாடுகள் இருக்கலாம். ஆயினும் எல்லா நாடுகளிலுமே மக்கள் நலனுக்காக அவர்கள் தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளே ஆட்சி செய்கின்றனர்.

ஒரு நாட்டின் அரசியலைப்பற்றி அறிந்துகொள்ள 12 பாவங்கள் எதைக்குறிக்கின்றன என்றறிவது அவசியமாகும்.

முதல் பாவம் அல்லது லக்ன பாவம் : தேசத்தின் நிலை, மக்களின் மனநிலை அவர்களின் சுபிட்சம், உள்நாட்டு விவகாரம். உலகத்தில் அந்த தேசத்தின் மதிப்பு.

2ம் பாவம் : பொருளாதாரநிலை, வரி, வியாபாரம், ஸ்டாக் எக்சேஞ்ஜ் ஜனங்களின் வாங்கும் சக்தி (Purchasing Power) கரன்சி நோட்டுகள் முதலீடுகள்.

3ம் பாவம் : உள்நாட்டுப் போக்குவரத்து, ரேடியோ, டி.வி. தபால் தந்தி, சினிமா. பத்திரிக்கை உலகம், வதந்திகள், வானிலை மாறுபாடுகள், புயல்களின் விளைவு தேசத்தில்.

4ம் பாவம் : விவசாயம், விளைபொருள்கள், வீட்டு வசதி, நிலம், முதலீடு (Real Estate) வெள்ளம், பூகம்பம், பொது ஜனத்தொல்லைகள், பார்லிமெண்டில் எதிர்கட்சியின் நிலை.

5ம் பாவம் : இளம் சிறுவர்கள், பிறப்புவிகிதம் (Birth Rate) விளையாட்டு விஷயங்கள் (Sports) அரசாங்கச் சடங்குகள் (Ceremonies) மந்திரிகள், வெளிநாட்டு தூதர்கள் (அம்பாஸிடர்கள்), பார்லிமெண்ட் அங்கத்தினர்கள், மேல்சபை விவகாரங்கள்.(Upper Legislative House Affairs)

6ம் பாவம் : பொதுஜன ஆரோக்கியம் (Public Health),போலீஸ், இராணுவம், உழைப்பாளிகள், தொழிலாளர்கள் வர்க்கம், தொழிற்சங்கங்கள், வேலை நிறுத்தம், தொழிற்சங்கம் அல்லாத சங்கங்கள்(Employees Association) உதாரணம் என்.ஜி.ஒக்கள் சங்கம், கல்லூரி, ஆசிரியர்கள் சங்கம், (மாநில விவசாயிகள் சங்கம் போன்றவை) அடுத்தபடியாக உணவு விநியோகம்.

7ம் பாவம் : போர், சமாதான நிலை, அயல் நாட்டு உறவு, ஒப்பந்தம், வியாபார ஒப்பந்தம், ஒத்துழைப்பு, பொதுஜன உறானி (Anti-Social Activities) பொதுஜன அபிப்ராயம் (Public Opinion) மாதர் நிலை, கலியாணம், விவாகத்தடை, (சட்டங்கள்) மக்கள் அபிப்ராயம் இது பற்றி.

8ம் பாவம் : தலைவர்கள் மறைவு, மரணம், ஏற்றுமதி வருமானம் முடக்கபட்ட முதலீடுகள், (Forzen Assets) வரிவிகிதம் (Intrest Rates)இன்ஷீரன்ஸ், மருந்துகள் கண்டுபிடிப்பு, பொதுஜன க்ஷேமம்.

9ம் .பாவம் : வெளிநாட்டு உறவு, பயணங்கள், கப்பல், விமானங்கள் மூலம் வியாபாரம், ஏற்றுமதி வியாபாரம், வெளிநாட்டுக் குடிவாசிகள், (Emigaration)நிதிவசதிகள்,சட்டங்கள், ஆராய்ச்சித்துறை(Research) நூல் வெளியீடுகள், சிற்றலை, நேரடியோத்தொடர்பு (Short Wave Communication) மேல் படிப்பு நிலை (Higher Learning) உயர் நிலை மட்ட சமூகம் (High Societies)

10ம் பாவம் : ஆட்சியிலுக்கும் கட்சி. அரசாங்கத்தில் நிலை, தேசத்தின் கௌரவம், மதிப்பு, தேசதலைவர்கள் (பொதுவாக).

11ம் பாவம் : லோக் சபாவின் தன்மை (இதர ராஜ்யங்களில் கீழ்சபை) (Lower House) பண்டமாற்று வியாபாரம், செலாவணி (Exchange Trade,Barter Deal) முனிசிபாலிடி, கார்பரேஷன், பொதுவாக தேசத்தின் போக்கு.

12ம் பாவம் : சிறைச்சாலை, அது சம்பந்தப்பட்ட விவகாரங்கள் மறைமுக காரியங்கள் (Under Ground Activities) உளவாளிகள் (Spies) பொதுவாக நாட்டின் குற்ற நிலை ( Crime in General ) ஆஸ்பத்திரி, பொதுஜன சேவை செய்யும் சங்கங்கள் (Red Cross Society - Rotary Mission) அவற்றின் உதவி வெளிநாட்டு விவகாரங்கள்.

இவ்வளவையும் எப்படி நினைவில் வைத்துக் கொள்வது எப்படி ஸார் பலன் சொல்வது என்று மலைக்க வேண்டாம். அவ்வப்போது நடைபெறும் அரசியல் நிகழ்ச்சிகளையும் இவற்றையும் ஒப்பிட்டுப் பார்த்தால் நிலைமையையும் ஜோதிட சாஸ்திரத்தின் உண்மையும் படிப்படியாக புலனாகும். உதாரணமாக திரு. மொரார்ஜி தேசாய் அவர்கள் பதவியிலிருந்து விலகினரில்லையா? அதைப் பார்ப்போம். இந்தியாவுக்கு மகர லக்னம். 1979 ஜிலை மாதத்தில் கிரக நிலைகளைப் பார்ப்போம். சனி லக்னாதிபதி 8ல் ராகுவுடன் சம்பந்தம் குறிப்பாக ஜூலை 16ந் தேதியில் சனியும், ராகுவும் இணைந்தே இருந்தனர். (Exact Conjunction) 8ம் இடம் தலைவர்கள் மறைவு பொது ஜனக்ஷேமம் திரு. மொரார்ஜி தேசாய் ராஜினாமாச் செய்ததில் வியப்பில்லை. பொது ஜன க்ஷேமம் பற்றி யாரும் கவலைபட்டதாகத் தெரியவில்லை. 4ம் இடத்திற்குரிய செவ்வாய் சனியின் பார்வை பெறுகிறார். அதே போல் செவ்வாயை சனியும் பார்க்கிறார். எனவே மந்திரிகள் ஒவ்வொருவராக ராஜினாமா, கோஷ்டி, வெளிநடப்பு, கட்சி தாவல்கள், கடைசியில் ஆட்சி கவிழ்க்கப்பட்டது. நல்ல வேளை குரு லக்னத்தைப் பார்பதால் எந்தத் தொல்லையும் இல்லை. இப்படி நடக்கும் விஷயங்களை அலசினால் புரியும். 5 விளையாட்டு விஷயங்கள் (Sports) சனியின் பார்வை 5ம் வீட்டிற்கு. எனவே இந்தியா தோல்வி மேல் தோல்வி அடைகிறது. கிரிகெட்,ஹாக்கி போன்றவற்றில். அடுத்து கிரகங்கள் அரசியல் ஜோதிடத்தில் எவற்றைக் குறிக்கின்றன என்று பார்ப்போம்.

| | | | |
|---|---|---|---|
| | | செவ் | சுக். |
| கேது | | | குரு<br>சூரி. புத |
| ல | | | சனி<br>ராகு |
| | | | |

மால் பொன்

புகர் சேய் மந். மதி கதிர்

| செவ். புதன் | சூரி. சுக். | சந். கேது | |
|---|---|---|---|
| சனி | | | |
| | | | |
| | ராகு | குரு(வ) ஆரு. | கவி. |

பாம்பு

அரசியல் ஜோதிடத்தில் 12 பாவங்கள் எவற்றைக் குறிக்கின்றன என்பதைப் பார்த்தோம். இப்பொழுது கிரகங்கள் எவற்றையெல்லாம் புலப்படுத்துகின்றன, ஒரு நாட்டின் ஜாதகத்தில் என்பதைப் பற்றி ஆராய்வோம்.

சூரியன் : நாட்டின் தலைவர், ஜனாதிபதி பிரதமர், இலாக்காக்களின் பிரதம செகரடரி (Heads of Depts f Ministries) - நீதிபதிகள் , தொழிலதிபர்கள் (Business Magnets) அரசியல் துறை நிறுவனத்தின் டைரக்டர்கள் (Directors of Govt Undertakings) பொதுத்துறை நிறுவனங்களின் டைரக்டர்கள் (Director of Public Sector Undertakings) பொற்சொல்லர்கள், அரசிடமிருந்து கடன் பெறுவோர், அரசுக்குக் கடன் கொடுப்போர். (Lenders To and from Govt) தங்கம், ஸ்டாக் எக்ஸ்சேஞ்ஜ். நோட்டுகள் (Currencies) பொதுச்சட்டங்கள் (General Laws)

சந்திரன் : மாதர்நிலை, பொது ஜன விஷயங்கள், கப்பல் போக்குவரத்து உள்நாட்டு ஜல வழிகள் (Water Ways of Inland) கால்வாய்கள், மீன்பிடிப்பு, விவசாயப்பொருள்கள், சமுகம் பற்றிய பொதுவான வேலைகள், பாசன ஆற்று நீர்த்திட்டங்கள், எண்ணெய் திரவபதார்த்தங்கள், சாப்பாட்டு நிறுவனங்கள் (Catering Establishments) சேல்ஸ்மென், பொது ஜன விநியோகப் பண்டங்களின் போக்குவரத்து (Transit)

செவ்வாய் : இராணுவத் தலைவர்களை, போலீஸ், குற்றவாளிகள், ஆரசியல் ஆர்ப்பாட்டக்காரர்கள், (Agitators) இஞ்சினியர்கள், டாக்டர்கள், கொலை கொள்ளை (Violent Crimes) திடீர் தொத்து நோய்கள் (Epidemics) புரட்சி, வெடி விபத்துக்கள், அரசியல் சதி, சூழ்ச்சி. (வஞ்சகத்தின் அடிப்படையில் நெப்டியூன் சம்பந்தப்பட்டால்) யூரானஸ் சம்பந்தப்படால் கொலை, சுடுதல் மூலம் அரசியல் சூழ்ச்சி (Political Assasination) இவை.

*பிறந்த குழந்தையில் நட்சத்திரம் என்ன?*

*21.5.94 சனி, இரவு 9.25 ஐ.எஸ்.டி-க்கு மேற்கண்ட கேள்வி. ஒரு நிபந்தனையும் போட்டர். பஞ்சாங்கத்தைப் பார்க்காமலேயே ஆருடத்தில் சொல்ல வேண்டும் என்று. சரி என்றேன்.*

| | | | |
|---|---|---|---|
| | கேது<br>கவி. | சூரி.<br>புத.சுக் | |
| சனி | | | |
| | | | உத.<br>ஆரு. |
| | | ராகு<br>குரு | சந். |

*சூரிய அஸ்தமனம் 6.27. உதயம் 5.56. விதிமுறைகள் ஆருடம் முதல் உதயம் வரை எண்ண(இங்கு 1) அதை இரட்டிக்க 2. 2ம் இடத்திலிருந்து மேஷம் வரை எண்ண (இங்கு) 8. ரிஷபத்திலிருந்து ஆருடத்திற்கு 12 வரை எண்ண இங்கு 3. எல்லாவற்றையும் கூட்ட 13. 27க்கு குறைவாக இருப்பதால் அசுவினி முதல் எண்ண 13. அஸ்தம் 27க்கு மேல் போனால் வகுத்து, மீதியை நட்சத்திரமாகக் கொள்ளவேண்டும்.*

*குழந்தையின் நட்சத்திரம் அஸ்தம் என்று கூறினேன். அவர் ஆச்சரியப்பட்டார்.*

புதன் : அறிவாளிகள் (Inteligentia) பத்திரிக்கை உலகம்,ஆசிரியர், நூல்கள், கல்வி நிலையங்கள், ரேடியோ, டி.வி. etc., தபால் தந்தி இலாகா, ஆடிட்டர்கள், பொதுஜன தொடர்பு அதிகாரிகள் (P.R.Os) பிரஸ், இலக்கிய கர்த்தாக்கள், அரசியல் பேச்சுகள் (பார்லிமெண்ட் உள்பட) சட்டம், பத்திரிக்கை கண்ட்ரோல், தடையுத்தரவு (Censor), இவை சில்லரை வியாபாரிகள் (Retail Merchants Traders)

வியாழன் : சுப்ரீம் கோர்ட், நீதி சட்டம், சட்டமன்றங்கள், வக்கீல்கள், ஜட்ஜ்கள், வங்கிகள் (Banks) கருவூலம் (Treasury) இன்ஷூரன்ஸ், பெரிய திட்டங்களின் விஸ்தரிப்பு (Big Project Expansion) மின்சார உணவு. உற்பத்தி போன்றவை, ஆஸ்பத்தரி, கல்லூரிகள், பாங்குகள் விஸ்தரிப்பு, மத சம்பந்தமான தர்ம சொத்து, ஆலய நிர்வாகக் சட்டம் குடியிருப்பு வசதிதிட்டங்கள் (Housing for Govn & Public) மதசின்ன நிர்வாகம் பாரமரிப்பு (Up keep of Temples & Shrines)

சுக்ரன் : கலை, சினிமா, டிராமா, பெருவிழாக்கள் (Festivals) கவியரங்கம், சமாதானம், ஒற்றுமை, பட்டு, சில்க் ரேயான், டாய்லெட் சாமான்கள், வாசனை சாமான்கள், உற்பத்தி அவை சம்பந்தமான கெமிக்கல்ஸ், அமைதி, சமாதானத்திற்கான சாதாரணச் சட்டம். (Prohibitory Orders)

சனி : சிவில் சர்வீஸ், மாநில மட்டஉயர் அதிகாரிகள் (Minor State Executives) தொழிலாளர், தச்சு, கொத்து வேலை செய்வோர் (Construction Workers) விவசாயிகள், சுரங்க வேலைக்காரர்கள், பஞ்சம், பற்றாக்குறை, தேசதுக்கம் (National Mourning) விபத்துக்கள், (Calamities) கட்டுப்பாடு, உத்திரவுகள், (Control Orders - Drug Control, Cement Control) மாதிரி பொதுமக்கள் எதிர்க்கும் சட்டங்கள் (Labour Laws) வெள்ளம்,பூகம்பங்கள், பூகம்பத்தினால் அமைதியின்மை, பதட்டம், அதிகச்செலவு, விளைவு இன்மை (Drought) மனித விளைவுனால் ஏற்படும் வேலை நிறுத்தங்கள், அதிக வரி விதித்தல், (Excess Taxes) மேற்கண்ட காரணங்களால் உற்பத்தி குறைதல், (Production Falling Due to the above) யூரானஸ், மின்சக்தி வாரியம், (Boards) அனல் சக்தி நிலையங்கள், (Thermal Stations) விநியோகம், அதில் இடர்பாடுகள், மின்வெட்டு, ஆகாயப் போக்குவரத்து (Air Transport) திடீர் வேலை நிறுத்தங்கள் (Cat Call Strikes) விமான விபத்துக்கள், கலகங்கள் (Riots) பூகம்பம் மண் சரிந்து விழுதல் (Land Slides).

நெப்டியூன் : பொது ஜன அபிப்பிராயம், அதில் மாறுதல், வேகம், ஆஸ்பத்திரிகளில் நடக்கும் விபத்துக்கள், கடற்படை பற்றிய விஷயங்கள், செக்ஸ் சம்பந்தமான பரபரப்பூட்டும் விஷயங்கள், (Sensational Sex Crimes and cases) மது விலக்குச் சட்டங்கள், கஞ்சா, அபினி போன்ற போதைப் பொருள்கள், கள்ளக்கடத்தல் (Narcotic Smuggling) பெட்ரோல் சம்பந்தமான பொருட்கள். (Petrolium Proudcts).

ராகு, கேதுகளுக்கு : அவற்றைப் பார்க்கும் கிரகத்தின் தன்மை அல்லது அவற்றோடு சேரும் கிரகத்தில் தன்மையைப் பொறுத்துப் பார்த்தல் வேண்டும். உதாரணமாக கேது சனியால் பார்க்கப்படுகிறார்.

தமிழ்புத்தாண்டு பிறப்பு. 13.4.1994 புதன் இரவு 4.31 ஏ.எம். திருச்சி சூரி. உதயம் 6.10. அஸ்தமனம் 6.22. உதயம் 59 நிமி. 6.22 + 59 = 7.21. தமிழ்த்தேதி 30. 60 கழிக்க (அல்லது 1 மணி) 6.21.

உதயத்தில் சனி. தன்வீடு 10ம் வீட்டைப் பார்க்கிறார் 7ம் வீட்டையும் சனி பார்க்கிறார். 3ம் வீட்டையும் பார்க்கிறார். 7ம் வீடு காலி. அதன் அதிபதி உச்சம். உள்கட்டத்தில். எனவே போர் அபாயம் இல்லை. அரசாங்கம் நீடிக்கும். 2ல் புகர் உச்சம். நீதி வசதி தாராளமாக இருக்கும். மக்கள் கைகளிலும் பணப்புழக்கம் அதிகமாகும். விலைவாசி கட்டுக்கடங்காது. 5,8க்குடைய புதன் நீச்சம். 3ல் மால். தொலைத்தொடர்பு வசதிகள் பெருகும். சில்லரை வியபாரிகள் சிரமப்படுவர். 5ல் குரு. 2,11க்குடையவன். உள்கட்டத்திலும் குரு ஆருடத்தில். ஆருடத்தை வெளிக்கட்ட குரு பார்க்கிறார். கல்விநிலை உயரும். அதற்காக பணம் அதிகமாக ஒதுக்கப்படும். உணவு உற்பத்தி, மின்சார உற்பத்தி பெருகும். பொதுவாக மதச்சமாதான (Communal Harmony) நிலவும். 6ல் செவ். நீச்சம். தீவிரவாதிகளின் போக்கு அச்சுறுத்தலாகவே இருக்கும். அரசாங்கம் அதை முறியடிக்கும். பலதுறைகளில் வேலை நிறுத்தம் தொல்லைதரும். தொழிலாளர் அதிருப்தி அடைவர். 8ல் சூரியன் இருப்பதால் அதற்கு 7ல் புதன் நீச்சமாய் இருப்பதால் உள்துறை உளவு இலாகா விழிப்புடன் செயல்படுவது அவசியம். மாதர்நிலை உயரும். அவர்களுக்கு இட ஒதுக்கீடு அமலாகும். சுக்ரன் நிலையால். எதிர்க்கட்சியின் போக்கு சில சமயம் புரியாத புதிராக இருக்கும். மே மாதம் ராகு கேது பெயர்ந்தபின் அவர்கள் போக்கு தெளிவாகும். அரசாங்கம் வெலிசாய்க்க நேரிடும்.

வெளிநாட்டு உறவுகள் நல்ல நிலையில் இருக்கும். அந்நிய வியாபாரம் பெருகும். அந்நியச் செலவானியும் அதிகரிக்கும். பெருந்தலைவர் அடிக்கடி வெளிநாட்டுப் பிரயாணம் மேற்கொள்ளுவர். 1994 நவம்பருக்குப் பின் வெளிநாட்டு உறவில் சில சிக்கல்கள் தோன்றி இக்கட்டான சூழ்நிலை உருவாகும். நிலை சமாளிக்கப்படும் எப்படியும். பார்லிமெண்டில் குழப்பங்கள் குறையும். தேர்தல் சீர்திருத்த மசோதா பல எதிர்ப்பை சந்திக்க நேரிடும்.

புதிய மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டு, இந்தியாவின் புகழ் ஓங்கும் சர்வதேச அளவில்.

குரு வக்ரநிவர்த்திரை (July 1st) சர்க்கரை சமாசாரம் அப்படி அப்படிதான். விலையைக் கட்டுப்படுத்த இயலாமல் அரசாங்கம் தவிக்கும். கண்டனத்திற்கு ஆளாக நேரிடலாம்.

செப்டம்பர் 23ம் தேதி முதல் நவம்பர் 22ந் தேதி வரை செவ். கடகத்தில் நீச்சமாய் இருக்கும் போது தீவிரவாதிகள் தொல்லைகள் அதிகரிக்கும். சில மாகாணங்களில் பிரிவினைச்சக்திகளினால் கிளர்ச்சிகள் எழும். அரசாங்கம் எச்சரிக்கையாய் இருப்பது அவசியம்.

ஜூன், ஜூலை மாதங்களில் தொழிற்சாலைகளில் இராசாயன விபத்துக்கள் (Chemical Accidents) அக்டோபர், நவம்பர், 1995 ஜனவரி, பிப்ரவரி-யில் விஷவாயு கசிவு, ரசாயணப் பொருள்களால் ஆபத்து போன்றவை.

1995 ஜனவரி முதல் ஏப்ரல் வரை தீவிரவாதிகளின் கைவரிசை அதிகமாக வாய்ப்பு உண்டு. கள்ளக்கடத்தல் ஆயுதங்களால் அபாயம் ஏற்படலாம்.

ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் வெள்ளதேசம் கணிசமான அளவாக இருக்கும். இந்த ஆண்டிலும் தங்கம் விலை குறையாது. வெள்ளி விலை ஏறுமுகமே.

உலக அரங்கில் விளையாட்டுப் போட்டிகளில் நம்நாடு ஒரளவு சாதனைகள் புரியலாம். வரி சீர்திருத்த விஷயங்கள் பரிபூரண திருப்தி அளிக்காது.

சில துறைகளில் மாதர் சாதனை வியப்பூட்டும் வண்ணம் இருக்கும்.

101, 51 என்பது ஒரு மரபு. அதன் படியே 51 பாடத்துடன் முடிக்கிறேன் நவக்கிரகங்களின் அருள் எல்லாருக்கும் கிட்டுவதாக.

" வாழ்க சாமக்கோள் ஆருடம் "

ஒரே கேள்வி வெவ்வேறு நேரத்தில் - ஒரே பதில் :

ஜோதிடம் வேதத்தின் ஒரு அங்கம். அது புனிதமானது. புராதமானது. பகவான் கற்றுணர்ந்த ஜோதிடர்கள் கையில் கொடுத்த வரபிரசாதம், மக்களின் துயரை நீக்க. அதுவும் சாமக்கோள் ஆருடம் மனிதனுக்கு உடனடியாக சாந்தி சன்மார்க்கம் காண்பிக்க உள்ள தெய்வத்திறவு கோல். இந்த சாமக்கோள் ஆருடம் பாடங்கள் நடத்தும் நம் குருநாதரால் காண்பிக்கப்பட்டது. ஒரே கேள்விக்கு வெவ்வேறு நேரங்களில் கேட்டாலும் ஒரே பதில். அதனால்தான் இது தெய்வத் திறவு கோல்.

15.3.94 3.11 பி.எம். வெள்ளிக்கிழமை ஒருவர் "என் நண்பன் ஒரு பெண்ணைப் பார்க்க போகிறான். கல்யாணம் அவளைப் பண்ணிக்கலாமா? பெண் சரியாக வருமா" என்று கேட்டார்.

உதயம்: உதயம் கடகம் சிரபிருஷபோதயம்
உதயாதிபன் சந்திரன் 12ல். மந்தன் பார்வை + 6க்குடைய சேய். உதயத்தில் கதிர் புகர் பார்வை
7க்குடைய சனி 8ல் + 6/10 செவ்வாய் + 3/12 புதன். அதுவே ஆருடம் உதயத்திற்கு 8ல் உதயாதிபன் மதி வக்ரகுவுடன் கவிப்பில்.

ஆருடம் :

ஆருடத்தில் சனி + 3/10 செவ்வாய் + 5/8 புதன். மந்தன் பார்வை ஆருடத்திற்கு ஆருடத்திற்கு 6ல் மந்தன்பார்வை + பாம்பு.

5/8 மால் 2ல் நீசம் + 7 சூரியன் + 4/9 சுக்ரன் உச்சம்.
உதயத்திற்கு ஆருடம் 8ல்.

கவிப்பு

3 குருவக்ரம் கவிப்பில் + 10 மதி + 3/6 பொன் பார்வை

ராகு கவிப்புக்கு 2ல்
பாம்பு கவிப்புக்கு 12ல்
இந்தப்பெண் வேண்டாம் என்றேன்.

ஒரே பதில் தான் வந்தது.

பையன் பெண் பார்க்க போகவில்லை. பெண்ணுக்கு டாக்டர் பையன்தான் வேணும். இந்தபையன் வேண்டாம் என்றார்களாம். ஒருவாரம் கழித்து தெரிந்தது.

2. ஆருடத்திலும் சுக்ரன் உச்சம் சூரியனுடன். சூரியன் டாக்டருக்குகாரதத்துவம். முதல் ஆருடத்தில் பெண்ணில் லாபஸ்தானத்தில் சுக்ரன் சூரியன். 2வது ஆருடத்தில் பெண்ணின் ஸ்தானத்தில் சுக்ரன் சூரியன் அவள் கேட்டதில் ஆச்சர்யமில்லை. இதுதான் சாமக்கோளின் பெருமை. தெய்வத்திறவு கோல் குருநாதர் வாழ்க சாமக்கோள் வாழ்க

இந்த கட்டுரையை எழுதியவர் என் அன்புமிக்க மாணவர் எஸ். சேஷாசலம்.

7.16 மந் 8.16 9.16 புகர்

மதி · பாம்பு 4.16 · 10.16 மால். · 11.16 · 12.16

| | | | |
|---|---|---|---|
| சுக். சூரி. | | சந். | ஆரு. |
| சனி, செவ். புத. | | | |
| | | | |
| | ராகு | குரு(வ) கவி. | |

கதிர் 3.16 2.16 சேய் 1.16 பொன்

உதயம் : கிரோதயம் ஸ்திரம்.

உதயத்தில் ராகு. ராகு பலமிக்கவன். சனியின் பார்வை உதயத்திற்கு. உதயாதிபதி சேய் 12ல். நீச்மந்தன் பார்வை சேய்க்கு. 2க்குடைய குருவக்ரம் 12ல். 2ல் கதிர்.

ஆருடம் : ஆருடத்தில் புகர். பகைவன் கதிர்பார்வை. மால் ஆருடத்திற்கு 2ல் பாம்பின் பார்வை. ஆருடத்திற்கு 9ல் புதன் 6க்குடைய செவ்வாள் 8க்குடைய சனி

கவிப்பு : கவிப்பில் 3, 6க்குடைய வக்ரகுரு. மந்தன் பார்வை கவிப்பில் 2,7க்கடைய சேய்

ஆருடம் உதயத்திற்கு 8வது ஸ்தானம்

கவிப்பு உதயத்திற்கு 12வது ஸ்தானம்

இந்தப் பெண் சரியாக வராது. வேண்டாம் என்றேன்.

பெண்பார்க்க போகும் பையன் 21.3.94 11.52 ஏ.எம்.

இந்தப் பெண் பார்க்க போகலாமா? சரியாக வருமா? என்றான்.

| | | பொன் | | சேய் | |
|---|---|---|---|---|---|
| மால் | சூரி. சுக் | | | சந். | 11.08 |
| | சனி, செவ். புத. ஆரு. | | | | கதிர் 12.08 |
| புகர் | | | | | |
| | | ராகு | குரு(வ) கவி. | | |
| | மந் | | மதி | பாம்பு | |

சாமக்கோள் ஆருடம் கடைசி பகுதி

# அனு பந்தம்

சாமக்கோள் ஆருடம் என்பது காரணப்பெயர். சாமம் என்பது நாளின் ஒரு பகுதி. அதாவது 3.3/4 நாழிகை அல்லது 1.1/2 நேரம்.

பகல் இரவு கொண்டது ஒரு நாள் அல்லது 24 மணி நேரம் நாழிகை 60 கொண்டது.

இந்த ஆருடத்தில் பகலில் 8 சாமம் இரவில் 8 சாமம் மொத்தம் 16 சாமங்கள். 16நா.x3.3/4 60 நாழிகை 8ஜா.x3'3/4 30 நாழிகை 8ஜா.x1'1/2 12 மணிநேரம். 16 சாமத்திற்கு 16x1.1/2 24 மணி நேரம்.

இந்த சாமம் காலை 6 மணியிலிருந்து மாலை 6 மணி வரை எட்டு கொண்டது. பகல் பொழுதில்.

அதே போல் மாலை 6 மணி முதல் அடுத்த நாள் காலை 6 மணி வரை எட்டு கொண்டது இரவுப் பொழுதில்.

கோள் என்பது கிரகங்களைக் குறிக்கும். இதில் 8 கிரகங்கள் ஒவ்வொரு சாமத்திலும் இந்த 8 கிரகங்கள் ஒரு குறிப்பிட்ட வரிசைப்படியே சஞ்சரிக்கும். அதில் எந்தவித மாறுதலும் கிடையாது. அந்த 8 கிரகங்கள் கதிர்(சூரி) சேய்(செவ்) பொன்(குரு) மால்(புதன்) புகர்(சுக்ரன்) மந்தன்(சனி) மதி(சந்திரன்) பாம்பு(ராகு) என்பனவையே.

கதிர், சேய், பொன், மால், புகர், மந்தன், மதி, பாம்பு, என்ற சூத்திரம் போல் நினைவு வைத்துக்கொள்வது அவசியம். இந்த வரிசைக்கிரமம் ஒரு பொழுதும் மாறாது.

ஆருடம் என்பது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் கேட்கப்படும் கேள்விக்கு கிரக ரீதியாக பதில் அளிக்கும் முறை. அதாவது பிரச்சனைக்கு பதில் அளித்தல், வழிகாட்டல் என்பதாகும். இதனால் பிரச்னாருடம் என்ற தனிப்பகுதியே ஜோதிடத்தில் தோன்றியது. நிற்க. ஆருடம் என்றால் ஏறி நிற்றல், அமர்தல் என்ற பொருளும் உண்டு. சிவபெருமானை ரிஷப ஆருடன் என்று அழைக்கிறோம். அதாவது ரிஷபத்தில் அமர்ந்திருக்கிறான் என்று பொருள். புராணங்களில் பக்தர்களுக்கு, சிவனடியார்களுக்கு ரிஷபாருடனாக சிவபெருமான் காட்சி அளித்தார் என்றெல்லாம் படித்திருக்கிறோம். கேட்டிருக்கிறோம் அல்லவா?

அதுபோல் இந்த ஆருடத்தில், கேள்வி கேட்கிறவர் எந்த ராசியில் வந்து நின்றோ, அமர்ந்தோ கேள்விகளைக்கேட்கிறார் என்பது மிகமுக்கியம். சாமத்தையும், கோள்களையும், ஆருடத்தையும் (வந்தவர் ஏறி நின்ற ராசியையும்) இணைத்துப்பலன் சொல்வது சாமக்கோள் ஆருட சாஸ்திரம் ஆயிற்று, காரணத்தால் அதனால்தான் ஆரம்பத்தில் காரணப்பெயர் என்று குறிப்பிடப்பட்டது.

வடமொழியில் ஜாமகிரஉற ஆருடம் என்பார்கள். தமிழில் அது சாமக்கோள் ஆருடம் ஆகிவிட்டது. அவ்வளவே.

(இதன்மூலம் சிளேந்திர மாலை என்ற தமிழ் நூல்)

ஆரம்பத்திலேயே சாமங்கள் பகலுக்கு 8 இரவிற்கு 8 என்று பார்த்தோம்.

8 கிரகங்களும் ஒரு வரிசைக்கிரமப்படிதான் எக்காலத்தும் நகர்கின்றன என்பதையும் புரிந்து கொண்டோம். ஆனால் ஆருடம் அப்படியல்ல, கேள்வி கேட்க வந்து நிற்பவர் ஏறி நிற்கும் அல்லது அமரும் ராசியைப் பொறுத்தது.

எனவே ஆருடம் மாறக்கூடியது என்பது தெளிவாகிறது. இந்த ஆருடத்தை நிர்ணயிப்பது மிகுவும் முக்கியம். இந்த ஆருடம் சரியாகத் தீர்மானிக்கப்பட்டு, அதன் அடிப்படையிலேயே பலன்கள் சொல்லப்படுகின்றன.

எனவே ஆருடம் மிகத்துல்லியமாக கணிக்கப்பட வேண்டும் என்பது தெளிவாகிறது. இதனால்.

இந்த ஆருடத்தின் உதவியால்தான் கவிப்பும் என்ற நிலையும் நிர்ணயிக்கப்படுகிறது. அதைப்பிறகு பார்ப்போம்.

இந்த ஆருடத்தை எப்படி நிர்ணயிப்பது. சற்று விவரமாகப் பார்ப்போம். பெரும்பாலான ஜோதிடர்கள் ஏன் எல்லோருமே ஒரு அறையில் அமர்ந்துதான் ஜோதிடம் பார்க்கின்றனர். தங்கள் தொழிலை நடத்துகின்றனர். வசதி உள்ளவர்கள் அறையில் மேஜை, நாற்காலி, வந்தவர்கள் அமர சேர், ஸோபா, இவற்றையும் பயன்படுத்துகின்றனர். தரையில் அமர்ந்து, பாயின் மீது அல்லது விரிப்பின் மீதோ அமர்ந்து ஜோதிடம் சொல்பவர்களும் உண்டு.

இந்த இருவகை இனருமே ஆருடத்தை துல்லியமாக நிர்ணயம் செய்ய ஒரு சுலபமான வழி உண்டு. அதாவது ஜோதிடர்கள் அமர்ந்திருக்கும் நேர் எதிர்திசையில் ஒரு ராசி சக்கரத்தை

அமைத்துக்கொள்ளவேண்டும். இது கற்பனையிலும் இருக்கலாம் ஒரு கோல வடிவிலும் இருக்கலாம். அதன் விவரத்தை பார்ப்போம்.

காலத்தை பொருத்த வரையில்

உச்ச கோட்களுக்கு அவற்றின் கதிர்கள் எத்தனையோ. அத்தனை நாழிகைகள் ஆட்சி கோட்களுக்கு அவற்றின் கதிர்கள் படி நாட்கள். நட்பு கோட்களுக்கு அவற்றின் கதிர்படி மாதங்களும், பகை, நீச்சக் கோட்களுக்கு அவற்றின் கதிர்படி வருஷங்களாம்.

இன்னொரு வகையாகவும் காலம் நிர்ணயம் செய்யலாம்.

1. சந்திரன் நிற்கும் ராசியிலிருந்து உதயராசி வரை எண்ணிக்கண்ட தொகையை நாளாகக் கொள்ளல் வேண்டும்.

2.சந்திரன் நின்ற நட்சத்திரத்திலிருந்து உதயம் எந்த நட்சத்திரத்தில் விழுகின்றது என்று பார்த்து கணக்கிடலாம்.

3. சந்திரன் ராசி அதிபதிக்கும், உதயாபதின் நிற்கும் ராசி அதிபதிக்கும் உள்ள ராசிகளை எண்ணி நாளைக்கணக்கிடலாம்.

4. சந்திரன் எந்த நவாம்ச ராசியில் நிற்கின்றானோ அதிலிருந்து உதயம் வரை கணக்கிடவும் செய்யலாம்.

குறிப்பு :

2வது விதியில் நட்சத்திரங்களை வரிசையாக எண்ணிக்கொண்டு போக வேண்டும். ஒரே நாளில் 2 நட்சத்திரங்கள் வரும். அதனால் மலைக்க வேண்டாம். இந்த விதிகளை சுலபமாக நினைவில் வைத்துக் கொள்ள சுலபமான வழிகள்.

1. ராசி முதல் ராசி

2. நட்சத்திரம் முதல் நட்சத்திரம்.

3. ராசி அதிபதி முதல் உதயராசி அதிபதி.

4. சந்திர நவாம்ச அதிபதி முதல் உதயம்.

அதாவது சந்திரனையும், உதயத்தையும் 4 வகைகளில் இணைத்து கால நிர்ணயம் செய்ய நாட்கணக்கில் எந்த நாளில் ஆருடபலன் கைகூடும் என்பதைக் கண்டுபிடிப்பது.

அடுத்தப்படியாக இப்போது தையத்தை வைத்து வலிவு பெற்ற கிரகத்தைக் கொண்டு காலநிர்ணயம் செய்ய வேண்டும். என்ற விதி

சினேந்திரமாலையில் கூறப்பட்டிருக்கிறது. இப்போ உதயம் ரிஷப (இடம்) உதயம் ஆகும். அதில் விளக்கம் கூறுமிடத்து "ஆய்ந்த உதயம்" என்ற சொற்றொடரையும் இணைத்தால். இடம்,போது, உதயம், என்று விரிவடையும். இடம் என்பது ஊரையும் (Place). போது என்பது நேரத்தையும் (Time). (பொழுது என்ற சொல் திரிந்து வழக்கியலில் போது என்று மருவியது), உதயம் என்பது அந்த அட்சாம்ச, ரேகாம்சத்திக் நேரத்திற்கு உதயமாகும் லக்னத்தையும் குறிக்கும். (Latitude, Longitude).

நடைமுறையில் இதுதான் சிறந்தது. இதையே பின்பற்ற வேண்டும். எல்லா அட்சாம்சங்களிலும் பலிக்கிறது. மலேசியா, ஜரேப்பா, அமெரிக்கா முதலிய தேசங்களிலும் இந்த முறையைப் பின்பற்றியே வந்தேன். நல்ல பலன் கிடைத்தது. இந்த பல பகுதிகளுக்கு சென்ற போது இந்த முறையே அனுசரிக்கப்பட்டது. பாட்டு ஆய்ந்த உதயத்தைக் கொண்டு என்ற சொற்களுக்கு இதுவேதான் சரியான விளக்கம்.

மேலும் பிரச்னாருட பல நிர்ணயம் என்ற வடமொழி நூலில் காரியஸித்தி என்ற தலைப்பில் 7 விதிகள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றையும் பின்பற்றி கால நிலை கணிதம் செய்யமுடியும். அந்த 7 விதிகள் அப்படியே தரப்படுகிறது.

1. 10க்குடையவன் லக்னாதிபன் இவர்கள் லக்னத்திலிருந்தாலும்

2. லக்னாதிபன் 10க்குடையவன் இவர்கள் 10ம் இடத்தில் இருந்தாலும்.

3. லக்னத்தை லக்னாதிபனும் 10 நிமிடத்தை 10க்குடையவனும் பார்த்தாலும்

4. 10க்குடையவன் லக்னத்தை அடைந்து லக்னாதிபனைப் பார்த்தாலும்

5. லக்னாதிபன் 10 நிமிடத்தையும் 10க்குடையவன் லக்னத்தைப் பார்த்தாலும்

6. 10க்குடையவன் லக்னாதிபனையும் லக்னாதிபன் 10க்குடையவனைப் பார்த்தாலும்

காரியம் ஸித்தியமாகும்.

காலநிர்ணய கணிதத்தில் அனுபவமே கைகொடுக்கும். ஆழ்ந்த சிந்தனையும் கிரகங்களும், தெய்வமும் நமக்கு நிச்சயம் வழிகாட்டும். இது என் அனுபவம்.

## பாடம் 11 மாலை நேர வகுப்பிலிருந்து ரெகுலர் காலேஜில் இடம்

ராசி முதல் ராசிவரை எண்ணும் விதி 1 ராசிக்கு 2 1/4 நாள் 8க்கு 20 நாள். எனவே 20 நாளில் காரியம் பரிதமானது.

## பாடம் 14 எதற்காக வந்திருக்கிறார்கள்

1. குடும்பப் பிரச்சனை 7,8 க்கு உடைய சனி 4ல் உச்சம் உள்கட்டத்தில் சனி 8ல்

2. குழப்பம் உதயத்தில் பாம்பு சந்திரன், சந்திரனுக்கு 8ல் சனி.

3. ஏவல், பில்லி, செய்வினைக்கோளாறு பற்றிய சிந்தனை ஆருடத்தில் உள்ள செவ், சனியைப் பார்க்கிறார். கவிப்பிற்குடைய சூரியன் 12ல், 2ம் வீடு குடும்பம்.

4. பயப்பட ஏதுமில்லை. 9ல் குரு உதயத்தைப் பார்க்கிறார்.

## பாடம் 15 செய்வினைக்கோளாறு

உதயாதிபன் சூரியன் உச்சம். சந்திரன் ஆட்சி கடகத்தில் 6ல் குரு நீசம். ஐந்தாம் வீட்டில் புதன். எதிரிகள் ஏதும் செய்ய இயலாது. செய்வினைக்கோளாறு செய்யப்படவில்லை.

## பாடம் 16 தொழில் ஆரம்பிக்கலாமா?

சூரியன் உச்சம். ஆருடம் சிரோதயம். 10ல் வீடு. ராகு அங்கேயே 6மோதத்தில் பார்மஷீடிக்கல்ஸ் மருந்துகடை வைக்கலாம்.

## வரி ஏய்ப்பு (Tax Evasion)

6ம் இடம் வரி ஸ்தானம். சந்திரன் அங்கேயே 5.8க்குடைய புதன் 11ல் புதன் கணக்கன் 12க்குடைய சனி உதயத்தில் 6,8,5,12,13 எல்லா இடமும் சம்பந்தம் வரிஏய்ப்பு நிச்சயம் கவிப்புக்கு உடைய சூரியன் உச்சம். 12ல் குரு நீசம் எனவே (Fine)தண்டம் தான் கட்டவேண்டி வரும். குறிப்பு: கணக்கு சரியில்லை என்று தண்டம் கட்டினார்.

## பாடம் 17 விளையாட்டுப்போட்டி - கால்பந்து

உதயம் முதலில் ஆடும் கட்சி 7ம் இடம் எதிர்கட்சி. 2ம் சரி சமமாக இருப்பதால், அதிக நேரம் அனுமதிக்கப்பட்டது கோல் போடவில்லை. எனவே Tie Breaker என்று நிச்சயிக்கப்பட்டது. முதலில் ஆடிய கட்சிக்கு 9ல் (பாக்கிய ஸ்தானம்) சந்திரன் குருபார்வை வேறு எனவே அந்த கட்சி அதிக கோல் போட்டு ஜெயித்தது.

## பாடம் 18 குலத்தெய்வம் என்ன?

2ம் இடம் குடும்ப ஸ்தானம் 8ம் இடம் குலதெய்வம் மறதி. 8ம் உச்சவீட்டில் க்விப்பில் புகர். துலாராசி இது காவிரியைக் குறிக்கும். புகர் சுக் பெண்தெய்வம் எனவே துர்க்கை (லட்சுமியே தான் துர்க்கையாக மாறினாள்)

## பாடம் 19 மந்திர ஸித்தி

செவ், வைராக்கியத்திற்கு அதிபதி அவன் பூர்வபுண்ய ஸ்தானத்தில் நீசம் 2ல் ராகு 8ல் கேது சுக் உதயத்தில் உச்சம் உதயாதிபதி குரு 11ல் நீசம். குலதெய்வம் அருள் இல்லை. பிதுர்களும் ஆசிகளும் இல்லை. மந்திர ஸித்தி கிட்டாது.

## பாடம் 20 திக்குகள் அதன் அதிபதிகள்




| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரி | - | கிழக்கு | குரு | - | வடகிழக்கு |
| சந்திரன் | - | வடமேற்கு | சுக் | - | தென்கிழக்கு |
| செவ்வாய் | - | தெற்கு | சனி | - | மேற்கு |
| புதன் | - | வடக்கு | பாம்பு | - | தென்மேற்கு |

## பாடம் 21 தபால் ஊழியர்கள் வேலை நிறுத்தம்

உதயம் பிருஷ்டோதயம் ஆருடம் சிம்மம் ஆருடத்திற்கு 7ல் சனி. 8ல் செவ். 11ம் இடம் கவிப்பு. பாம்பு அங்கே கவிப்புக்குடைய புதன் உச்சம். 8,11 க்குடைய குரு 6ல் உதயம் முதல் ஆருடம் வரை 4 எனவே 4 நாள் வேலை நிறுத்தம். தொழிலாளர் கோரிக்கை எற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால் வேலை நிறுத்த நாளுக்கு சம்பளம் இல்லை என்று அறிவிப்பு.

## பாடம 22 என கணவா தனியாக எபபோது வியாபாரம் செய்வார்

உதயத்தில் சந் 7ல் இரண்டு முறை செவ். சகோதரர் ஆதரவு குரு 5ல் புதன் உச்சம். குடும்ப வியாபாரம் கவிப்பில் சனி. இவருக்கு தைரியம் போதாது. சகோதரரே இவருக்கு வியாபாரம் அமைத்துக் கொடுக்கலாம்.

## பாடம் 23 கேள்வி கேட்பவர்கள் - உறவு

உறவினர்களுக்காகவும், நண்பர்களுக்காகவும், அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்காகவும் வந்து கேட்பார்கள். இந்த நிலையில் ஜோதிடர் நேரத்தின் அடிப்படையில் நேரடியாகவே உதயம். ஆருடம் கவிப்பு இவற்றைக் கணித்து பலன் சொல்வதே சிறந்தது. நடைமுறையிலும் இது சரியாக வருகிறது. ஜோதிடத்தை பொறுத்த வரையில் எல்லாமே மூன்றாம் மனிதர்கள் பிரச்சனையே (3rd Party's Problem) உதாரணங் கொண்டு பார்ப்போம். வேலைக்காரியின் பையனைக் காணவில்லை. அடுத்து பக்கத்து வீட்டுப் பையன் மாடிப்படியில் உருண்டு விழுந்து விட்டான். மயக்க நிலையில் ஆஸ்பத்திரியில் இருக்கிறான். அவன் பிழைப்பானா? இந்த மாதிரி கேஸ்களில் நேரடி உதயமே சிறந்தது.

## பாடம் 24 வியாபரத்தில் கூட்டு சேரலாமா?

உதயம், சந். தன் வீட்டில் இருப்பதால் பலம் பெருகிறது. ஆருடத்தில் குரு நீச்சம் ஆயினும் உள் கட்டத்தில் இருக்கும் குரு ஆருடத்தை பார்க்கிறார். எனவே அதற்கும் பலம் ஏற்படுகிறது. கவிப்பில் சந். வெளிக்கட்டத்தில் புகர் துலாம் அவன் வீடு. எனவே கவிப்பும் வலுப்பெறுகிறது. எனவே வியாபாரத்தில் கூட்டுக் சேரலாம்.

## செய்வினைக்கோளாறு முனி பிடித்த பெண்

உதயத்தில் குரு வெகு பலம் ஆருடாதிபதி சூரியன் நீசம் 3ம் இடத்தில் செவ் சனிபார்வை மீனத்திலிருந்து விஷமத்தனமான வதந்தி உண்மையில்லை. செய்வினைக்கோளாறும் இல்லை. குரு வலுப்பெற்றதால் 3ம் இடம் செவ். சனி பார்வை விஷமத்தனமான வதந்தி. செய்தி அந்த பெண் இப்போது திருமணமாகி நல்லபடி இருக்கிறாள் போதுமா?

## பாடம் 25 ஸ்ரீ பாமச்சாரியாரின் ஸித்தி

உதயம் குரு ஆருடம் கடகம் சுக். அங்கேயே கவிப்பு துலாம்.

*கன்னியில் புதன் உச்சம் 12ம் வீட்டில் 3 இடங்களிலும் சுபக்கிரஹங்கள். புதன் 12ல் உச்சமானதால் வைகுண்ட பதவி பெற்று விட்டார். அம்பாள் உபாசகர். 10ல் சுக் சாமியாராகவும் வாழ்ந்ததால் ஸாயுஜ்ய பதவி அடைந்துவிட்டார் என்றும் கூறலாம்.*

## பாடம் 27 அதிகம் மதிப்பெண்கள் (Mark) பெற மீண்டும் பரீட்சை எழுதலாமா? Merit List ல் வரமுடியுமா?

*முடியாது அதிக மதிப்பெண்கள் பெற வாய்ப்பில்லை. 6,11 க்கு உடைய செவ். 8ல் உதயத்திற்கு 11 ம் இடம் கவிப்பு அங்கே பாம்பு லாபம் இல்லை. முயற்சியைக் கைவிடவும் என்று பதில் அளிக்கப்பட்டது.*

## பாடம் 28 என் லட்சியம் நிறைவேறுமா?

*உதயம் சிரோதயம் ஆருடம் சிரோதயம் 9ம் இடத்தில் 2 குரு உதயத்தைப் பார்க்கிறார்கள். 7ல் சூரி. அரசாங்க ஆதரவு கிடைக்கும். 6ல் சுக். உச்சம். ஒரு பெண்மணி நன்கொடை அளிப்பாள் உதயத்தில் பாம்பு மனக்குழப்பம். 9ம் இடம் தர்ம ஸ்தானம் ஒரு அனாதை ஆஸ்ரமம் அமைக்க லட்சியம் அது நிறைவேறும். சூரியன் பத்தில் (கடகத்தில்) வரும்போது.*

## பாடம் 29 கர்ப்ப நிச்சயம்?

*இதற்கு 3 விதிகள்*

*1. உதயத்தில் பாம்பு இருக்க வேண்டும்.*

*2. அல்லது ஆருடத்தில் பாம்பு இருக்க வேண்டும்.*

*3. உதயத்திற்கு 4,5,9 ல் பாம்பு இருத்தல் வேண்டும்.*

*இந்த விதிகள் தவறுவது இல்லை.*

## பாடம் 30 என் வியாதி என்ன?

*ஸ்திர ராசி சிம்மம் உதயம், ஸ்திர ராசி, நாள் பட்ட வியாதி 6ம் இடத்தில் சூரி, சனி இருவரும் பகைவர்கள். அவர்களுக்கு 2 குரு பார்வை சுக்ரன் 8ல் உச்சம் சந். சம்பந்தம் எனவே சர்க்கரை வியாதி 6ல் சூரி. இரத்த அழுத்தமும் உண்டு. 6ல் பாம்பு எனவே அதிக மருந்து சாப்பிட்டதால் உடம்பில் விஷம் உள்ளது.* **Residual Poison due to excess Allopathy Medicines** *உயிருக்கு ஆபத்தில்லை. 100% சரியென்று ஒத்துக்கொண்டனர்.*

## பாடம் 31 தொழிலாளர் பிரச்சனை வேலை நிறுத்தம் வருமா?

*வராது. 10ம் வீடு ஆருடம் குரு அங்கேயே உதயத்தில் சுக் நீசம் 7ல் 2 கதிர்கள். 8ல் உதயாதிபன், 5ம் வீட்டிலிருந்து செவ்(2) பார்வை பாம்பு அங்கேயே தொழிலாளர் அரசியல்வாதி(ஒரு பெண்) யால் தூண்டப்பட்டு அச்சுறுத்துக்கிறார்கள். 4ல் குரு உற்பத்தி ஸ்தானம் 4 பாதிப்பு ஏற்படாது. அப்படி வேலை நிறுத்தம் செய்தால் சட்டபூர்வமான நடவடிக்கை எடுக்கப்படும் என்று தெரிவியுங்கள் அப்படியே செய்தார் வேலை நிறுத்தம் நடைபெற வில்லை.*

## பாடம் 32 குரு நாதர் கடிதம் எப்போது வரும்

*உதயம் கன்னி குரு அங்கேயே 11ல் புதன். உதயாதிபன் செவ்வாயின் பார்வை புதனுக்கு, செவ். 3,8க்குடையவன் 8ல் சந். சனி 7ல் சாமக்கோள் சந்திரன் உதயத்தைப் பார்க்கிறார். நிச்சயம் பதில் வரும். சற்று தாமதமாக. எப்போது? புதனுக்கு கதிர் 9. கடகத்திற்கு கதிர்* **3. 9+3 = 12. 12**வது நாள் கடிதம் வரும் என்று கணிக்கப்பட்டது. அதேபோல் 12வது நாள் **4.1.1993** கடிதம் கிடைத்தது. குருநாதரிடமிருந்து.

## பாடம் 34 நிலத்தை விற்க முடியுமா?

*பதில் விற்க முடியாது. உதயம் பிருஷ்டோதயம். ஆருடமும் பலமில்லை. பறவைக்கால் ராசி 6ல் சூரியன் நீசம். சூரியன் கதிர் 5.* குருவுக்கு **10 = 5X10.000 50,000** ரு கடன். அதை அடைக்க முயற்சி செவ். **12**ம் வீட்டையும் பார்க்கிறார். உச்ச வீட்டிலிருந்து 12ல் புகர். உச்சம் அதிக செலவாளி 8ல் பாம்பு 8க்குடைய குருவும் 6ல் வில்லங்கங்கள் உண்டு. சரி என்று ஒத்துக் கொண்டார் அவர்.

## பாடம் 35 என் கலர் டி.வி என்ன விலை போகும்? எப்போது?

*உதயத்தில் பாம்பு பிருஷ்டோதயம் 4ல் சனி. தாமதம் ஆருடத்தில் குரு. தன் வீடு உதயத்தையும் பார்க்கிறார். கவிப்பில் குரு சனி, விலை நிச்சயம் போகும். என்ன விலை ? கவிப்பில் சனி உச்சம் கதிர் 4 துலாத்திற்கு கதிர் 2,* **4+2=6. 6000** ஆயிரம் என்று கூறப்பட்டது.

**21.1.1994** ஒருவர் வந்து பார்த்தும் போனார். வந்து பார்த்த நேரம் **10.10** *காலை கிரக நிலைகள் அப்படியே. உதயம் மாறிவிட்டது. மேஷச் செவ். ஆருடத்தில் பாம்பு செவ். ஆருடத்தைப்பார்க்கிறார். செவ். கிழமை*

ராகு நட்சத்திரத்தில் வந்து வாங்கிப்போவார் என்றும் எழுதி வைக்கப்பட்டது. அதன் படியே 25.1.99 செவ். கிழமை திருவாதிரை நட்சத்திரத்தில் வாங்கிப் போனார். 3.50 ராகு காலத்தில் பணம் கொடுத்தார். (செவ் 3-41/2) ராகு காலம்.

## பாடம் 36 ஓர்க் ஷாப் வைக்கலாமா ?

உதயம் மீனம், சுக். உச்சம் (2), 10ல் மதி. 4ல் குரு. உள்கட்டத்தில் 7ல் குரு. கேந்திரங்கள் 2ல் 4லிலும் சுபர்கள். காரிய வெற்றி நிச்சயம். சுக். 2 தடவை உதயத்தில். அவரே ஆருடாதிபதியும் எனவே ஸ்ரீ சக்தி என்ற பெயரும் சூட்டப்பட்டது.

## பாடம் 37 பார்ட்னர் சம்பந்தமான விஷயம்.

உதயத்தில் சுக். உச்சம். 2ல் கதிர் உச்சம். 6க்குடையவன் கதிர். 11ல் குரு நீசம். உள் கட்டத்தில் சூரி சனி. பெண் பார்ட்னரைச் சேர்த்தால் வரியைக் குறைக்கலாமே என்ற எண்ணமா? என்றேன் 100% சரி என்றார். பெயர் மாற்றவும் நினைக்கிறீர்கள் என்றதும் எப்படித் தெரியும் என்றனர் வியப்போடு. இது தான் சாமக்கோள் ஆருடம் என்று கூறிவிட்டு வேண்டாம் அந்த எண்ணம் என்றேன் ஏன்? 3 கேந்திரங்களில் பாபிகள் 1,4,7ல் ஏற்கனவே 11ல் குரு நீசம் என்றும் பார்த்தோம். பெண் பார்ட்னர் எப்படி? உதயம் ஆருடம் 2ம் பெண் ராசிகள். சுக். உச்சம். மதி ஆட்சி. எனவே பெண் பார்ட்னர்.

## பாடம் 38 ஆட்டு வியாபாரம் செய்யலாமா?

11ம் இடம் கவிப்பு நஷ்டம் வரும். கைப்பொருளும் போகும். சாமக்கோள் ஆருட விதி இது. அங்கேயே சனி நீச்சம். உள்கட்ட சனியும் 3ம் பார்வையாகப் பார்க்கிறார். பாவத் தொழில் எப்படி ? உதயத்தையும், ஆருடத்தையும், நீச்ச சனி பார்க்கிறார். 2ல் செவ். நீச்சம். 2ம் இடம் உணவுப் பொருளையும் குறிக்கும். இங்கு அசைவம். ஊன் வளர்க்க ஊன் பாவம்தான் அதற்கு உடந்தையாக இருப்பானேன். சாமக்கோள் ஆருடம் எப்படி?

## பாடம் 39 இந்த வேலையை ஏற்கலாமா ?

பதில் வேண்டாம். காரணம் உதயத்தில் மால் (புதன்) நீசம் ஆருடத்தில் (10ல்) சனி 7லும் கவிப்பில் பாம்பு நாலில் செவ் 3 கேந்திரங்களிலும் பாவிகள். சரி சார். அப்படியே செய்கிறேன் என்றார். போகும் போது 2000 ருபாய் உங்கள் சம்பளம் என்றேன். ஒரே ஆச்சரியம்

அவருக்கு துலாம்ல 6க்குடைய மதி. துலாம்ற்கு கதிர் 2. 2X1000=2000 என்று தீர்மானிக்கப்பட்டது. சாமக்கோள் ஆருடத்தின் மகிமையே இதுதான்.

*பாடம் 40 விளையாட்டுப் போட்டிகள் பற்றி ஏற்கனவே விளக்கம் தரப்பட்டுள்ளது. சந்தோஷ் கோப்பை கால்பந்து போட்டிக்கும் அதே விதிகள்.*

## பாடம் 41 வேலைக்கு ஆர்டர் எப்போது வரும் ?

*ஏப்ரல் 13,14 தேதிகளில் வரும் என்று கூறப்பட்டது. உதயத்திற்கு 6ல் (வேலை ஸ்தானம்) புதன் உச்சம். அங்கேயே குரு எனவே கிளார்க் வேலைக்கு ஆர்டர் எதிர் பார்க்கிறார் ஆருடம் 10ம் வீடு. அங்கேயே கதிர். அவர் உதயத்திற்கு வரும் போது ஏப்ரல் 13,14 தேதிகளில் ஆர்டர் வரும் என்று கூறப்பட்டது. அதன் படியே 13ம் தேதி ஆர்டர் வந்ததாகத் தெரிவித்து விட்டுப் போனார்.*

## பாடம் 42 பிரமோஷன் கிடைக்குமா ?

*கிடைக்காது என்று கூறப்பட்டது. உதயம் பிருஷ்டோதயம் ஆருடம் சிரோதயம் ஆயினும் அவனுக்குடைய சுக் மிதுனத்தில் 2ம் வீடு. மேலும் 11க்குடைய குரு 5ல் (வ). வக்ர கிரகங்கள் பலன்களைத் தருவதில்லை. 3ல் மால். சந்திரன் வீட்டில் அவன் 7ல் நீசம். எனவே உங்கள் பெயர் பட்டியலில் இடம் பெறவில்லை. பிரமோஷன் கிடைக்காது என்ற பதில்.*

## பாடம் 42 என் வீட்டில் தோஷமுண்டா ?

*உங்கள் எண்ணமே அது தோஷம் இல்லை என்று அடித்துக் கூறப்பட்டது. எப்படி? உதயம் சிரோதயம். ஆருடம் சிரோதயம் ஆருடாதிபதி சுக். 8ல் உச்சம் உதயாதிபதினுடன் உள்கட்ட சனி, வெளிக்கட்ட சனி சந்திரனை 3ம் பார்வையாகவும் முறையே 10ம் பார்வையாகவும் பார்க்கிறார். அன்று அசுவினி நட்சத்திரம், எனவே வீட்டில் கோளாறு என்ற எண்ணம். மேலும் 12ல் செவ். நீசம் வெளிக்கட்ட செவ். சந்திரனைப் பார்க்கிறார், 6லிருந்து தேவையற்ற கவலை.*

## பாடம் 43 தொழிற் சாலை " லாக் அவுட் " (LOCK OUT) அகற்றப்படும்.

*உதயத்தில் பாம்பு நஷ்டம், 8ல் ஆருடம். 10க்குடையவன் அங்கேயே கவிப்பில் ராகு. எதிர்காலம் பற்றிய கவலை, பீதி, மால் ஒருவனே*

உச்சம். ஆருடத்தில் உள்கட்டம், வெளிக்கட்டம் 2லும் குரு. அன்று ரோஹினி நட்சத்திரம். உள்கட்டத்தில் சந்திரன் உச்சம். ராகு உச்சம். ராகுவிற்கு சனி பார்வை 10ம் பார்வையாக சந்திரன் பார்வையும் 7ம் பார்வையாக செவ்வாய் உச்சம். சந்திரன், கேதுவுடன் இருக்கிறார். செவ்வாய் 3 கிரகங்களுடன் சேர்ந்து 11ம் வீட்டில் உள்கட்டம், வெளிக்கட்டம் 2லும் கதிர். கதிர் 6ம் வீட்டுக்குடையவர். 6ம் வீடு தொழிலாளர் ஸ்தானம். அவன் 11ல் இருமுறை இருப்பது தொழிலாளர் வேலைக்குப் போவதை உறுதிபடுத்துகிறது. அப்போது 6க்குடைய கதிர் கும்பத்தில் ராகு (சதயம் 4ம் பாதம்) தாண்டி பூரட்டாதி (உதயாதிபன் நட்சத்திரத்தை நெருங்கும் சமயமும், 5க்குடைய சந்திரன் துலாத்தில், விசாகம் நட்சத்திரம் தாண்டும் போதும் 'லாக்அவுட்' (LOCK OUT) அகற்றப்படும். சனி 10ம் பார்வையாக ராகுவைப் பார்ப்பதால் அனுஷ நட்சத்திரத்தன்று வேலைக்குப் போவார்கள் என்று தீர்மானிக்கப்பட்டது. சனி 6ம் வீட்டையும் பார்க்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

மார்ச் மாதம் 4ம் தேதி குறிப்பிட்டபடியே தொழிலாளர் வேலைக்குச் சென்றனர், சாமக்கோள் ஆருடத்தையும் என்னையும் பாராட்டி கடிதம் வந்தது. " சாமக்கோள் ஆருடம் " வாழ்க.

## பாடம் 44 மரணத்தின் நிச்சயம்

மரணத்தை யாரும் விரும்புவதில்லை. மரணத்திலிருந்து யாரும் தப்பியதில்லை. இந்த உலகத்தில் ஜோதிட சாஸ்திரத்தின் மூலமாக மரணத்தை முன் கூட்டியே அறிந்து கொள்ளலாம். அதனால் சில நன்மைகளுண்டு. உயில் எழுதி வைக்கலாம், தான தர்மங்கள் செய்து புண்ணியமும் தேடிக் கொள்ளலாம். ஆனால் மரணம் எப்போது சம்பவிக்கும் என்று சொல்லமுடியாது. அதனால் தான் என்னவோ நம்பிடரியிலேயே எமன் என்ற பழமொழி வந்தது போலும். இப்படியிருக்க சாமக்கோளில் மரணத்தை முன்கூட்டியே துல்லியமாக அறியலாம். முன்கூட்டியே தெரிவிக்கவும் முடியும். திட்டவட்டமான விதிகள் உள்ளன. அவற்றைப் பார்ப்போம்.

ரிஷபம்,சிம்மம், விருச்சிகம், கும்பம் இந்த 4 ராசிகளும் தம்மைத் தாமே கவிக்கில் மரணமின்மையாம். அதாவது இவையே உதயமாக வந்து இவையே கவிப்பாகவும் வரவேண்டும். 3 சூரிய விதியும் இம் மூன்றில் ஒன்றாக இருந்தால் இந்த விதி பொருந்தும். தன்னைத்தானே ராசிகள் எப்படி கவிழ்க்க முடியும். ஆருடத்திலிருந்து சூரிய விதி வரை எண் 1. அந்த எண்ணிக்கை உதயத்திலிருந்து 1 எனவே உதயமே கவிப்பாக வரும்.

மரணத்திற்கு ஏதாவது ஒரு வியாதி வரலாம். எனவே 6ம் இடம் பிணிக்கயிறு. 8ம் இடம் மரணம். மரணக்கயிறு 3ம இடம் 2வது இடம் மாரகஸ்தானம். அதாவது 8க்கு எட்டு 6க்கு 6 11ம் இடம். 11ம இடமும் ஒரு மாரகஸ்தானம். 3ம் ராசி கவிப்பாக வந்தால் கண்டம். 11ம் ராசி கவிபபாக வந்தால் மரணம். இதையே கண்டக் கவிப்பு, மரணக் கவிப்பு என்றும் கூறலாம். ராசிகளின் அடிப்படையில் மேஷம் மிதுனத்தைக் கவித்தால கண்டமாம். ஆனால் மிதுனம் மேஷத்தை (11) கவித்தால் மரணம். இதே போல் கன்னி, மகரம், மீனம், துலாம், தனுசு ராசிகளுக்கும் பார்த்துக் கொள்ளவும்.

## மாமனார் நிலை என்ன?

பதில். நாளைப் பொழுது நல்லபடியாக விடியட்டும் அதற்கு பிரார்த்தனை செய்வோம். மேலும் வற்புறுத்தியதின் பேரில் இன்று இரவு தாண்டாது என்று சொல்வதை தவிர வேறு வழியில்லை. அன்றிரவே மாமனார் காலமாகிவிட்டார் என்று தகவல் காலையில் வந்தது.

## அடுத்து என் தந்தை எத்தனை நாள் வாழ்வார்?

என்ற கேள்விக்கு 4 நாளில் மரணம் என்று பதில் கூறினேன். சாமக்கோள் ஆருடத்தில் 2,7,10 ம் இடம் இவற்றில் ராகு சனி, சூரி, செவ். இவர்களில் ஒருவர் நிற்கில் 4 நாளில் மரணம். விதி எப்படி துல்லியமாக விளக்குகிறது என்று புரிந்து கொள்ளலாம்.

3வது உதாரணத்தில் கடகத்தை கன்னிகவிக்க மரணம் என்ற விதி பொருந்துகிறது.

## பாடம் 45 பெயர் மாற்றம் தேவையா?

எண் கணித நிபுணர் ஒருவர் நிறுவனத்தின் பெயரை மாற்றச் சொல்கிறார். பதில் தேவையில்லை. 7ம் இடத்தில் சூரியன் நீசம், தேவையில்லை. மேலும் 1,4,7,10ல் உள் கட்டங்களில் சுபர்கள். எனவே அதுபற்றி கவலைப்பட வேண்டாம் என்று கூறி அனுப்பினேன். வியாபார நிறுவனமாதலால் 7ம் இடம் பரிசிலிக்கப்பட்டது.

## பாடம் 47 திருமணம் எப்போது ?

பாக்யாதிபதி சூரி, 9க்குடையவன் 5ல் அவன் மேஷ ராசியில் உச்சம் அசுவினி 4ம் பாதம் பிரவேசிக்கும் நாட்களில் திருமணம். அதாவது

சித்திரை 10,11,12,13 தேதிகளில் என பதில் தரப்பட்டது. 22.4.99 வெள்ளி திருமணம் நடந்தது.

## பாடம் 48 கதிர்களின் ஜாலங்கள்

சாமக்கோளில் கிரகங்களுக்கும் ராசிகளுக்கும் கதிர்கள் உண்டு. ராசிகளுக்குப் பார்ப்போம். மேஷம் 7, ரிஷபம் 8, மிதுனம் 5, கடகம் 3,சிம்மம் 7, கன்னி 11, துலாம் 2, விருச்சிகம் 4, தனுசு 6, மகரம் 8, கும்பம் 8 மீனம் 27 உண்மையில் இவற்றின் உதவியால் வந்தவர்கள் அசந்து போகும்படி பலன்கள் சொல்லலாம் சொல்லி வந்திருக்கின்றேன். உதராணம் 2லும் சொல்லலாம். அனுபவமே சிறந்த வழிகாட்டி.

## பாடம் 49 பிறந்த குழந்தையின் நட்சத்திரம் என்ன ?

நஷ்ட ஜாதகம் கணிக்கும் போது. இந்த விதிகள் மிகவும் பயன்படுகின்றன என்றால் மிகையாகாது. சில சமயம் பஞ்சாங்க பேதத்தாலும் நட்சத்திரமே மாறிவிடுவது உண்டு. மூலம் என்பார் சில ஜோதிடர். இல்லை கேட்டை என்பார் 2வது ஜோதிடர் பெற்றோர்களுக்கு குழப்பம் ஏற்படும். அதை சந்தேகத்திற்கு இடமின்றி தீர்த்து வைக்க முடியும். இந்த விதிமுறைகளால் 2 எண்ணிக்கைகள் 27ல் வகுத்தால் இவ்வளவே.

## பாடம் 50 வருஷபலன், ராசிபலன்

கோட்சா அடிப்படையில் அரசியல் ஜோதிடம் எல்லாமே சொல்ல முடியும். அரசியல் ஜோதிடத்திற்கு விளக்கமான பட்டியல் தரப்பட்டுள்ளது. உதாரணத்திலும் விளங்கங்கள் தெளிவாக எழுதப்பட்டுள்ளது. புரிந்து கொள்வதில் சிரமம் இருக்காது. அரசியல் என்று வரும்போது முதல்வரோ, பிரதமரோ மந்திரியோ பதவி ஏற்கும் காலத்தைக் குறித்துக் கொண்டு பலன் சொல்லலாம். சரியாகவும் வரும், வந்திருக்கிறது. இதற்கு ஆழ்ந்த அனுபவம் தேவை. பாடப் பாட ராகம் என்பார்களே அது போல பழகப் பழக தைரியம் வந்து விடும் ஆரம்ப காலத்தில குழப்பங்கள் ஏற்படலாம். தைரியமும் சில சமயம் வராது. ஆயினும் பலன் சொல்லிப் பழக வேண்டும். பலன் சொல்லிய விவரங்களை எல்லாம் பத்திரமாகப் பாதுகாப்பது அவசியம். மீண்டும் பார்த்தால் எந்த இடத்தில் தவறு செய்து விட்டோம் இதை விட இன்னும் நல்லபடியாக சொல்லியிருக்கலாமே என்று தோன்றும் அப்போது முன்னேற்றம் தானே வந்து விடும்.

வாழ்க சாமக்கோள் ஆருடம்.

## கால நிர்ணயம்

ஜோதிட சாஸ்திரத்தில் வாழ்க்கையின் பல நிகழ்ச்சிகளை முன்கூட்டியே அறியமுடியும். உதாரணமாக இந்த வயதில் இந்த மாதத்தில், இந்தத் தேதியில் கல்யாணம், இந்த ஆண்டு இவன் வேலையில் அமர்வான், இந்த மாதத்தில் வெளிநாடு செல்வார் என்றெல்லாம் கூறலாம். இது கடினம் என்று பலர் நினைப்பார்கள். ஏன் ஜோதிடர்கள் உள்படத்தான். ஆனால் தசாபுத்தி, அந்தரம், கோசாரம் இவற்றையெல்லாம் கணக்கில் எடுத்து அலசினால் நிச்சயமாகக் கூறமுடியும்.

இதேபோல் தான் சாமக்கோள் ஆருடத்திலும் கால நிர்ணய கணிதமும், தசாபுத்தி, அந்தரம், கோசாரம் என்றெல்லாம் பார்க்காவிட்டாலும் சில அடிப்படை விதிகளைப் பின்பற்ற வேண்டும். அவை யாவை? பார்ப்போம். இந்த விதிகள் சாமக்கோள் ஆருடத்திற்கு மட்டுமே பொருந்தும் என்றால் மிகையாகாது.

கோட்களுக்கு உள்ளவையே ராசிக்கும் பொருந்தும் ஏனெனில் 12 ராசிகளுக்கும் கிரக அதிபர்கள் உண்டு. சூரியன், சந்திரன் இவையிரண்டும் சிம்ம, கடக ராசிக்கு அதிபர்கள். மற்ற 5 கிரகங்களும் தலைக்கு 2 ராசிகளுக்கு அதிபர்கள் ஆகிறார்கள். ராகு, கேதுகளுக்கு ராசிகள் இல்லை. ஏற்கனவே ஜோதிடர்கள் அறிந்த விஷயங்களே இவைகள்.

### <u>சாமக்கோளில் கீழ்க்கண்டபடி கால நிர்ணயம்</u>

| | | |
|---|---|---|
| சனி, பாம்பு | – | தனித்தனியே ஒரு ஆண்டு |
| சூரியனுக்கு | – | ஒரு அயனம் (6 மாதம்) |
| புதனுக்கு | – | 2மாதம் |
| குருவுக்கு | – | 1 மாதம் |
| சுக்ரனுக்கு | – | 1 பட்சம் ( 15 நாள் ) |
| செவ்வாய்க்கு | – | 1 தினம் |
| சந்திரனுக்கு | – | 1 முகூர்த்தம் |

ஏற்கனவே கிரகங்களின் கதிர்கள் பற்றி அறிவோம். இதையும் சேர்த்துப் பார்த்தால் இன்னும் விவரமாகப் பலன் சொல்லலாம்.

ர் வெளியிட்ட தமிழ் நூல்கள் :



ராவஸ்புடம கணிப்பது எப்படி?

செவ்வாய் தோஷமே கிடையாது

ார ஜோதிடம்

ார ஜோதிடம் விளக்கம்

நசாபுத்தி அந்தா பார்வை அளவீடு

200 வருஷங்களுக்கு தமிழ் நாட்டில் ( 1901 முதல் 2099 வரை) எந்த நஷம், தேதி, நேரம், எந்த ஊருக்கும் 2 நிமிடங்களில் லக்னமும், பாம்சமும் சுலபமாகக் கணித்த உதவும் லக்ன டேபிள் ஜோதிடர்களுக்கு ந வரப்பிரசாதம். அமோக வரவேற்ப்பை ஜோதிட மாணவர்களிடையே பற்றுள்ளது.



*சாமக் கோள் ஆருட மன்னன் ஏறத்தாழ 15 ஆண்டுகாலம் இந்த ஆருடகாலத்தில் தேர்ச்சி பெற்று 3000 பிரச்சனைகளை அலசி மக்களுக்கு வழி காட்டியுள்ளது இவரது திறமைக்கு சான்று போதுமா?*

*மலேசியா, அமெரிக்கா, ஐரோப்பியா நாடுகளில் சுமார் 10 மாதம் சுற்றுப்பிரயாணம் செய்த போது இந்த ஆருடம் மிகவும் கை கொடுத்தது. பலர் வியப்படைந்தனர். டெலிபோன். ஃபாக்ஸ், ஈமெயில் மூலம் 10 நிமிடங்களில் பலன் சொல்ல முடியும் என்பதை நிருபித்தும் காட்டியவர் என்றால் மிகையாகாது.*

*பல பத்திரிக்கைகளில் இவரைப் பாராட்டி செய்திக் கட்டுரைகள் வந்துள்ளன. மலேசியா ஆங்கிலப் பத்திரிக்கை இவரது சாமக்கோள் ஆருட முறையை பாரட்டி எழுதி உள்ளது.*

*இந்தியாவில் தபால் மூலமும் நேரிலும் 100 மாணவர்களுக்கு மேல் இவர் பயிற்சி அளித்து அவர்கள் பெயரும், புகழும், பொருளும் ஈட்டி வருகின்றனர் இந்த ஆருட முறையை பின்பற்றி.*

*ஆராய்ச்சி மனப்பான்மையுடைய இவர் சிறந்த நூல்களையும் வெளியிட்டுக்கிறார்*

*சாதனா பிரிண்ட் பாயிண்ட், தில்லைநகர், திருச்சி - 18, ✆ 763732*